தவத்திரு கந்தப்ப முனிவர் இயற்றியருளிய

# தணிகாசல புராணம் - தெளிவுரை



வெளியீடு:

அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில்,
திருத்தணி - 631 209.

தவத்திரு கந்தப்ப முனிவர் இயற்றியருளிய

# தணிகாசல புராணம் -
# தெளிவுரை



தெளிவுரை ஆசிரியர்:
பேராசிரியர் னைவர் செ. உலகநாதன், எம்.ஏ., பி.எச்.டி.,

வெளியீடு:

அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயிலார்,
திருத்தணி - 631 209.

முதற் பதிப்பு : மார்ச்சு, 1999

TITLE OF THE BOOK : "THANIKACHALA PURANAM - THELIVURAI'

PROSE WRITER : Dr. S. ULAGANATHAN, M.A.Ph.D.,

PUBLISHER : Joint Commissioner / Executive Officer
Arulmigu Subramanyaswamy Thirukoil,
Thiruththani - 631 209.
Tamil Nadu, South India.

இந்நூல் பற்றிய விவரங்கள்

தலைப்பு : 'தணிகாசல புராணம் - தெளிவுரை'

தெளிவுரை ஆசிரியர் : பேராசிரியர் முனைவர் செ. உலகநாதன், எம்.ஏ., பி.எச்.டி.,

அளவு : 'கிரௌன்' அளவு

தாள் : 10.5 கி.கி.

பக்கங்கள் : xxiv + 352 = 376

விலை : ரூ. 25/-

வெளியீடும் உரிமையும் : அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயிலார், திருத்தணி - 631 209.

அச்சகம் : பாவை பிரிண்டர்ஸ் (பி) லிட்.,
142, ஜானி ஜான் கான் சாலை,
இராயப்பேட்டை, சென்னை - 600 014.

உபயதாரர்கள் : திருமதி & திரு. கண்ணம்மாள் லோகநாத முதலியார்
T.N.L. எண்டர்பிரைசஸ்,
L.K. Tex, அம்மையார் குப்பம், சென்னை - 1.

முனைவர் **மு. தமிழ்க்குடிமகன்,** எம்.ஏ., பி.எச்.டி.,
தமிழ் ஆட்சி மொழி, தமிழ்ப்பண்பாடு
இந்து சமயம் மற்றும் அறநிலையத் துறை அமைச்சர்.
தலைமைச் செயலகம்,
சென்னை - 600 009.

# சிறப்புரை

''இருந்தமிழே உன்னால் இருந்தேன் -
இமையோர்
விருந்தமிழ்தம் என்றாலும் வேண்டேன்''

என்பது ''தமிழ்விடு தூது'' நூலாசிரியர் வழங்கியுள்ள விழுமிய கருத்தாகும்.

தமிழமுதம் நம்போன்ற மாந்தருக்கு மட்டுமன்றி, இறைவருக்கும் கிட்டாத தீஞ்சுவைத் தெள்ளமுதாக அமைவதை இலக்கியங்கள் நமக்கு நன்கு எடுத்துக்காட்டுகின்றன.

''தமரநீர்ப் புவனம் முழுதொருங்கு ஈன்றாள்
தடாதகா தேவி என்று ஒருபேர்
தரிக்க வந்ததுவும் தனிமுதல் ஒரு நீ
சவுந்தர மாறன் ஆனதுவும்
குமரவேள் வழுதி உக்கிரன் எனப்பேர்
கொண்டதும், தண்டமிழ் மதுரம்
கூட்டுண எழுந்த வேட்கையால் எனில் இக்
கொழிதமிழ்ப் பெருமை யார் அறிவார்?''.

என்று குமரகுருபரர் பாடியிருத்தல் காண்க.

''எத்திறத்தினும் ஏழுலகும்புகழ் முத்து முத்தமிழ்''

என்பது கவிச்சக்கரவர்த்தி வாக்கு.

''ஞானஉலா'' எனும் நூல், சுந்தரர் தோழராகிய சேரமான் பெருமான் நாயனாரால் திருக்கயிலையில் அருளிச்செய்யப்பட்ட சிறப்புடையது. ஆதலால் மண் ணுலகம் அன்றி விண்ணுலகும், மூவுலகும் ஏழுலகும் புகழும் பெருமை பெற்றது நம் தமிழ்மொழியே என்பதைச் சான்றோர்கள் பலரும் எடுத்துரைத்துள்ளார்கள்.

''ஓங்கலிடைத் தோன்றி உயர்ந்தோர்
தொழவிளங்கி
ஏங்கொலிநீர் ஞாலத் திருள்அகற்றும் -
ஆங்கவற்றுள்
மின்னேர் தனியாழி வெங்கதிரொன் றேனையது
தன்னேரில்லாத தமிழ்''

என்ற தனிப்பாடல் உலகிருளை விரட்டி ஒளிகூட்டும் ஒப்பற்ற கதிரவனும் தமிழும் தனிப்பெருஞ்சிறப்பு மிக்கவை எனப் புகழ்ந் துரைப்பதை எண்ணி எண்ணி நாம் இன்புறலாம்.

இத்தகைய தன்னேரிலாத தமிழ் மொழிக்கு அணிசேர்ப்பன வாக ஆயிரமாயிரம் பைந்தமிழ்ப் பனுவல்களை நம் முன்னோர்கள் படைத்தளித்துச் சென் றுள்ளார்கள்.

மூத்தோர்கள் பாடியருளியுள்ள பத்துப்பாட்டு, எட்டுத் தொகை நூல்களும், கேடில் பதினெண் கீழ்க் கணக்கு நூல்களும், நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரம் முதலான காப்பியங்களும், தோத்திரசாத்திர நூல்களும், பாடற்கரிய பரணி முதலான சிற் றிலக்கியங்களும், இன்னமுள்ள வெள்ளத்தினும் மிகுந்த இலக்கியங் கள் யாவும் நம் தமிழ்மொழி காக்கும் மெய்க்காப்பாளர்கள் என்பது ''தமிழ்விடு தூது'' நூலாசிரியர் கூறியுள்ள அரிய கருத்தாகும்.

முரசம் கறங்க, முடிவேந்தர் போற்ற இராசகாரியம் செய்யும் தமிழே! ''பாரில் அரியாசனம் உனக்கே ஆனால் உனக்குச் சரியாரும்

உண்டோ தமிழே'' என்று நம் தமிழ்மொழி பெற்றுள்ள ஈடு இணை யற்ற இலக்கியச் செல்வத்தைப் போற்றியுள்ளது '' தமிழ்விடுதூது'' நூல்.

இத்தகைய தனிப்பெருமை மிக்க நம் தமிழ் மொழிக்கு மேலும் பெருமை சேர்ப்பன திருக் கோயில்களின் சிறப்பை விவரிக் கும் - மூர்த்தி தலம், தீர்த்தம் ஆகியவற்றின் பெருமையைப் பைந் தமிழ்ச் செய்யுட்களில் விவரித்துப் போற்றும் தலபுராணநூல்கள் ஆகும்.

தமிழும் சமயமும் தழைத்தோங்கவும், பக்தி உணர்வுடன் பண்பாட்டு ஒழுக்கங்கள் சிறக்கவும் இத்தலபுராண இலக்கியங்கள் ஆற்றியுள்ள பெருந் தொண்டினைப் போற்றிடவேண்டுவது தமிழ் மக்களின் தலையாய கடமையாகும்.

பன்னெடும் காலத்திற்கு முன்புதோன்றிய அரிய பல தமிழ் நூல்கள்போற்றுவார் இன்மையால் கிட்டுவதற்கு அரியனவாகிப் பின் எட்டாக்கனியாக மறைந்துபட்ட கொடுமையை எண்ணுங்கால் நம் தமிழ் நெஞ்சம், கலங்கித் துடிக்கும்.

அகத்தியம் முதலாக அழிந்துபட்ட இலக்கிய நூல்கள் எத்தனை எத்தனை? சிற்றிசை, பேரிசை என மறைந்துபட்ட இசை நூல்கள்தான் எத்தனை எத்தனை?

மதிவாணர் நாடகத் தமிழ் முதலான பல நாடக நூல்களும், கோள் நூல் முதலான பல வானசாத்திர நூல்களும் மறைந்துபட்டு, அழிந்துபட்ட அவலம் இனி நேர்ந்திடல் கூடாது.

திருக்கோயில்களின் அருமை, பெருமைகளை அனைவரும் அறிய தமிழ்ச் செய்யுட்களால் பாடிப் பரவும் தல புராண நூல்களைப் போற்றிக்காக்க வேண்டுவது இந்து சமய அறநிலையத்துறையின்

தலையாய கடமை ஆவதை உணர்ந்து, தமிழ் அறிஞர் பெருமக்களின் துணையோடு அவற்றை எல்லாம் எளிய இனிய உரை விளக்கங்களோடு பதிப்பித்து வெளியிட்டு, அன்னைத் தமிழுக்கு ஆக்கமான பணிகளை அறநிலையத்துறை ஊக்கமுடன் ஆற்றிவருகின்றது.

இத்தமிழ்ப் பணியில் ஆர்வமுடன் ஈடுபட்டுள்ள அறநிலையத்துறை அதிகாரிகளையும், அலுவலர்களையும், திருக்கோயில் பணியாளர்களையும் நாம் மனமாரப் பாராட்டுகின்றேன்.

தமிழ் அன்பர்கள் அனைவரும் இத் தலபுராண நூல்களைப் படித்து இன்புற வேண்டுமெனக் கேட்டுக் கொள்கின்றேன்.

''என்னை நன்றாகக் கலைஞர் படைத்தார்
அன்னைத் தமிழுக்கு அணிசெய்யுமாறே''

அன்புள்ள,

9.12.98

சிறப்பு ஆணையாளர் மற்றும் ஆணையாளர், இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை, சுகவனேஸ்வர், இ.ஆ.ப., அவர்களின்

## அணிந்துரை

''குன்றுதோறாடல்'' என வழங்கப்பெறும் முருகப் பெருமானின் ஐந்தாம் படைவீடாகிய திருத்தணிகை மலை அளவிட முடியாத மகிமைகள் பொருந்திய மாமலை என்பதனைக் கச்சியப்பச் சிவாச்சாரியார் அருளியுள்ள கந்தபுராணம் நமக்கு நன்கு விவரித்துக் கூறுகின்றது.

மலர்களில் சிறந்தது தாமரை, நதிகளில் சிறந்தது கங்கை; ஊர்களில் சிறந்தது காஞ்சி; அதுபோல் மலைகளில் சிறந்தது திருத்தணிகை ஆகும்.

''விரையிடங் கொளும் போதினுள் மிக்க பங்கயம் போல்
திரையிடங் கொளும் நதிகளில் சிறந்த கங்கையைப் போல்
தரையிடங் கொளும் பதிகளிற் காஞ்சி அந்தலம் போல்
வரையிடங்களிற் சிறந்தது இத்தணிகை மால்வரையே''

என்பது கந்தபுராணப் பாடல் ஆகும்.

இத்திருத்தணிகை மலையில்தான் வள்ளிபிராட்டியாரைக் கந்தவேள் திருமணம் புரிந்து திருவருள் புரிந்தார். முருகப் பெருமானின் இரு சக்திகளுள் வள்ளியம்மை இச்சா சக்தியைக் குறிக்கும் எனப் பெரியோர் கூறுவர். வள்ளியம்மையிடம் வடிவேலரே திருத்தணிகை மலையின் பெருமைகளை விவரிப்பது கந்தபுராணத்தில் அனைவரும் படித்து மகிழ வேண்டிய மிகச் சிறந்த வரலாறாகும்.

'சூராதியசுரர்களுடனும் வேட்டுவரோடும் செய்த போரின் கோபம் தணிந்து நாம் இங்கு வந்தமையால் ''செருத்தணி'' எனும் பெயர்

இம்மலைக்கு உண்டானது'' என முருகப் பெருமானே வள்ளியிடம் கூறியருளுகிறார்.

''செங்கண் வெய்யசூர்ச் செருந்தொழிலினுஞ் சிலைவேடர்
தங்களிற்செயும் செருத்தொழிலினுந் தணிந்திட்டே
இங்குவந்துயாம் இருத்தலால் செருத்தணி என்றோர்
மங்கலம்தரு பெயரினைப் பெற்றதுஇவ் வரையே''

என்று திருத்தணிகை மலையின் பெயர்க் காரணத்தை முருகப் பெருமான் வள்ளியிடம் எடுத்து மொழிந்திடக் காணுகின்றோம்.

ஐந்து நாட்கள் திருத்தணிகை மலையில் தங்கியிருந்து விரதமுறைப்படி வடிவேலரை வணங்கும் மெய்யன்பர்கள், எல்லாப் போகங்களையும் அனுபவித்து முக்தி பெறுவர் என்பதையும், பாவங்கள் புரிந்தோரும் திருத்தணிகை வந்து வழிபட்டால், திருமால், பிரம்மா ஆகியோரை விடவும் மேலான நற்கதி பெறுவார்கள் என்பதையும் முருகப் பெருமானே வள்ளியிடம் எடுத்துக் கூறுகின்ற பாடல்கள் பின்வருபவை ஆகும்.

''அஞ்சு வைகல் இவ்வகன்கிரி நண்ணிஎம் அடிகள்
தஞ்சம் என்றுளத்து உன்னியே வழிபடும் தவத்தோர்
நெஞ்சகந்தனில் வெஃகிய போகங்கள் நிரம்பி
எஞ்சல் இல்லதோர் வீடுபேறு அடைந்தினிது இருப்பார்''

''பாதகம்பல செய்தவர் ஆயினும் பவங்கள்
ஏதும் வைகலும் புரிபவர் ஆயினும் எம்பால்
ஆதரங்கொடு தணிகைவெற்பு அடைவரேல் அவரே
வேதன்மாலினும் விழுமியர் எவற்றினும் மிக்கார்''

திருத்தணிகை மலையில் செய்யும் சிறு தருமமும் ஆயிரம் மடங்கு புண்ணியத்தைத் தரும். திருத்தணிகை மலையை வலம்

செய்தோர், கோடி அசுவமேத யாகம் செய்த பயனைப் பெறுவார்கள். திருத்தணிகை மலையில் ஏற எண்ணி ஒருபடியின் மீது கால் வைத்தாலும் உடனே அவர்கள் வினைகள் தணிவதாலும் தணிகைமலை என்று இம்மலை வழங்கப்பெறும். இத்தணிகை மலையின் பெருமைகள் இவ்வாறு அளவிடற்கு அரியன ஆவதைக் கந்தபுராணம் மிகவும் சிறப்பித்துக் கூறுகின்றது.

இத்தகைய தணிகைமலையின் அருமை பெருமைகளை அவனிமக்கள் அறிந்து உய்யும் வகையில் ''தணிகை புராணமாக''ப் படைத்து வழங்கியவர் கவிராட்சசர் எனச் சிறப்பிக்கப்பெறும் கச்சியப்ப முனிவர் ஆவார்.

இக்கச்சியப்ப முனிவரின் தலைமாணாக்கராகத் திகழ்ந்த வரும் கி.பி. 18 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்திருந்த மிகச் சிறந்த தமிழ்ப் பாவலருமான கந்தப்ப முனிவரும் கவிநயமிக்க 426 செய்யுட் களால் ''தணிகாசலப் புராணத்தை'' இயற்றித் தந்து தமிழுலகிற்கு மிகச் சிறந்த இறைபணியை ஆற்றி இறவாப் புகழ் கொண்டு விளங்குவது குறிப்பிடத்தக்கது.

கற்றவர்க்கும். கல்லார்க்கும் களிப்பருளும் களிப்பாகத் திகழும் அத்''தணிகாசலப் புராணம்'' எனும் கற்கண்டு புராணத்தை ஓய்வுபெற்ற தமிழ்ப் பேராசிரியர் முனைவர் உலகநாதன் அவர்களின் நயமிக்க உரைவிளக்கத்துடன் திருக்கோயில் நிர்வாகிகள் வெளி யிடுவது பாராட்டிற்குரியது.

இத்''தணிகாசலப் புராணம்'' எனும் தேவாமிர்தமாய் தித்திக்கும் தெய்வீகத் தமிழ் நூலை மெய்யன்பர்கள் அனைவரும் விரும்பிக் கற்று அருள்மிகு வள்ளியம்மை தெய்வானை உடனுறை திருத்தணிகை வடிவேலிறைவர் திருவருள் பெற்றுய்ய மகிழ்ந்து வேண்டுகின்றேன். இந்நூலினைச் சிறப்புற வெளியிட்டுள்ள திருக்

கோயில் நிர்வாகிகளுக்கும், உரைவிளக்கத்தைச் சிறப்புற எழுதி உதவியுள்ள பேராசிரியர் முனைவர் உலகநாதன் அவர்களுக்கும் என் மனமார்ந்த பாராட்டுக்களைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

மங்களந் தணிகாசலா, மங்களம் பக்தவச்சலா
மங்களஞ் சத்தியத்தனே, மங்களம் சுத்தநித்தனே
மங்களம் புவனேசனே, மங்களம் பவநேசனே
மங்களம் வள்ளி நாயகா மங்களம் சுபமங்களம்

அன்புள்ள,

— சுகவனேஸ்வர், இ.ஆ.ப.,
சிறப்பு ஆணையாளர் மற்றும்
ஆணையாளர்,
இந்துசமய அறநிலைய ஆட்சித்துறை,
சென்னை - 600 034.

# பதிப்புரை

'தணிகாசல புராணம்', தணிகையில் பதினெட்டாம் நூற்றாண்டில் தோன்றி வாழ்ந்த தவத்திரு கந்தப்ப முனிவர் என்னும் மாபெரும் அருட்புலவரால் இயற்றப்பெற்ற சிறப்பினைக் கொண்டது. 'கவிராட்சசர்' எனப் பெருமையுடன் பேசப்பெற்றவரும் 'தணிகைப் புராணம்' முதலிய அரிய நூல்களை இயற்றியருளிய பீடுடையவரும் ஆகிய தவத்திரு கச்சியப்ப முனிவரின் தலைமாணாக்கரே கந்தப்ப முனிவர்.

தணிகாசல புராணத்திற்குத் தெளிவுரை இயற்றித் தருமாறு பேராசிரியர் முனைவர் செ. உலகநாதன், எம்.ஏ., பி.எச்.டி., அவர்களைக் கேட்டுக் கொண்டோம். 'தணிகாசலபுராணம் - தெளிவுரை' இயற்றி அளித்தார். இந்நூல், அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் வெளியீடாக வெளிவருகிறது. முன்னர் எம்முடைய வெளியீடுகளாகப் பேராசிரியர் முனைவர் செ. உலகநாதன் அவர்களுடைய, 'திருத்தணிகையாற்றுப்படை - தெளிவுரை' 'திருத்தணிகைப் பிள்ளைத் தமிழ் - தெளிவுரை' ஆகிய இரு நூல்கள் வெளியிடப்பெற்றன.

இனிய எளிய தெளிவான தமிழ் நூல்கள் படைக்கவல்லவர் பேராசிரியர் செ. உலகநாதன் அவர்கள் என்பதனை இச்சிறந்த 'தணிகாசல புராணம் - தெளிவுரை' நூலினைப் படித்து அறிந்து இன்புறலாம். அவருக்கு நன்றிக் கடன்பட்டுள்ளேன்.

மேலும் இந்நூலுக்கு மிகச் சிறந்த வாழ்த்துரை வழங்கியுள்ள மாண்புமிகு தமிழ் வளர்ச்சி, தமிழ்ப் பண்பாடு மற்றும் இந்து சமய அறநிலையத்துறை அமை +பிசர் முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்களுக்கும், மிகச் சிறந்த அணிந்துரை வழங்கியுள்ள இந்து சமய அறநிலையத்துறையின் சிறப்பு ஆணையாளர் மற்றும் ஆணையாளர் திருமிகு சுகவனேஸ்வர் இ.ஆ.ப., அவர்களுக்கும் திருக்கோயிலார் சார்பில் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றேன். திருக்கோயிலார்

சார்பில் இத்''தணிகாசல தலபுராணம்'' நூலுக்கு மிகச் சிறந்த முகவுரை வழங்கி உதவியுள்ள மாண்புமிகு தமிழ் வளர்ச்சி, தமிழ்ப் பண்பாடு மற்றும் இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை அமைச்சர் முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்களுக்கும், மிகச் சிறந்த அணிந்துரை வழங்கி உதவியுள்ள சிறப்பு ஆணையாளர் மற்றும் ஆணையாளர் திருமிகு சுகவனேஸ்வர் இ.ஆ.ப., அவர்களுக்கும் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

மற்றும் இந்நூலுக்கு அணிகலனாக அணிந்துரை வழங்கிய பேராசிரியர் முனைவர் பொன். சௌரிராசனார், எம்.ஏ., பி.எச்.டி., அவர்கள் திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறைத் தலைவராகப் பணியாற்றியவர்; பல்கலைக்கழகங்களின் மானியக் குழு உறுப்பினராகவும் சாகித்திய அகாதமி உறுப்பினராகவும் பணிபுரிந்த பெருமைக்கும் உரியவர். முப்பது நூல்களுக்கும் மேல் எழுதி வெளியிட்ட மிகச்சிறந்த எழுத்தாளர். பலர் டாக்டர் பட்டம் பெற வழிகாட்டிய செந்நெறியாளர். அனைத்துக்கும் மேலாகத் தமிழ்ப் பெருந்தகை பேராசிரியர் முனைவர் மு. வரதராசனார் அவர்களின் பேரன்புக்கு ஆட்பட்ட அரிய தமிழ்ச்சான்றோர். அவருக்கு எம் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலினை மிகச் சிறந்த முறையில் பொலிவுடன் அச்சிட்ட 'பாவை பிரிண்டர்ஸ்' அச்சகத்தார்க்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தவத்திரு கச்சியப்ப முனிவரின் தணிகாசல புராணத்தின் மாண்பினையும் தணிகையின் ஒப்பற்ற சிறப்பையும் தணிகைப் பெருமான் திருமுருகனின் ஆற்றல்களையும் அறிந்து இன்புறுதற்குத் 'தணிகாசல புராணம் - தெளிவுரை' நூலைப் படித்துப் பயன்பெறுமாறு தமிழ்ப் பெருமக்களையும் திருமுருகன் அடியார்களையும் வேண்டுகிறேன். திருத்தணிகைத் திருமுருகன் திருவடிகளைப் பணிவோமாக!

- மு.க. பாலசுப்பிரமணியன், பி.ஏ., பிஎல்.,
இணை ஆணையர் / செயல் அலுவலர்,
அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில்,
திருத்தணி - 631 209.

திருவேங்கடவன் பல்கலைக்கழக முன்னாள் தமிழ்ப் பேராசிரியர்
**முனைவர் பொன். சௌரிராசனார், எம்.ஏ.பி.எச்.டி., அவர்களின்**

# மதிப்புரை

தெய்வீக வரலாறுகளை இலக்கிய வடிவில் பாக்களால் பாடி உருவானவை புராணங்கள் எனப்பெறுகின்றன. உலகத் தோற்றம், உலக மறைவு, மனுவந்தரம், முனிமரபு, அரசு மரபு எனும் ஐவகைக் கூறுகளைக் கொண்டமைவன புராணங்கள் என்பர்.

புராணங்கள்ளை மகாபுராணங்கள், உப புராணங்கள் என்று இருவகைப்படுத்துவர். ஒவ்வொன்றிலும் பதினெட்டுப் புராணங்கள் உள்ளன. இந்தியச் சமய வரலாற்றில் வேதம், இதிகாசம், புராணம் என்பன முக்கிய பங்கு வகிக்கின்றன. அவற்றுள் வேதம் ஒரு சாரார்க்கே உரியதாக்கப் பெற்றது. இதிகாசம், புராணங்கள் அனைவர்க்கும் உரியனவாக, கற்க, கேட்க வாய்ப்பளிக்கின்றன. முதலில் இப்புராணங்கள் வடமொழியில் தோன்றின. பின்பு பல மொழிகளில் தழுவல் இலக்கியங்களாகப் பாடப்பெற்றன.

இந்த வடமொழிப் புராணங்கள் தமிழில் இடம்பெற்ற காலம் 16-ஆம் நூற்றாண்டு ஆகும். 1564-இல் ஆட்சி பெற்ற அதிவீர ராமபாண்டியர் கூர்ம புராணம், கலிங்க புராணம், கந்தபுராணத்தில் காசிகாண்டம் ஆகியவற்றை மொழிபெயர்த்தார். அந்த நூற்றாண்டிலேயே செவ்வை சூடுவார், பாகவத புராணத்தைத் தமிழில் ஆக்கினார். 15-ஆம் நூற்றாண்டில் கச்சியப்ப சிவாசாரியார் கந்த புராணத்தை ஆக்கினார். இது விரிவும் இலக்கியச் செறிவும் மிக்கது. 19ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த மகாவித்வான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை ஒரு மகாகவி; எண்ணற்ற தல புராணங்களை அவர் இயற்றியுள்ளார். இத்தல புராண அமைப்பும், தோற்றமும் தமிழுக்கே சிறப்பாக அமைந்தன எனலாம். 'கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்' என்ற பழமொழிபோல் 'புராணம் பெறாத கோயில் புகழற்ற கோயில்' என்பது போன்ற ஓர் எண்ணம் 19-ஆம் நூற்றாண்டில்

தமிழரிடையே எழுந்தது. எனவே, எண்ணற்ற தல புராணங்கள், பல புலவர்களால், தாம்தாம் வாழ்ந்த ஊர், ஊரில் குடிகொண்டுள்ள கோயில், கோயிலில் விளங்கும் தெய்வம் இவற்றைப் பாடுபொரு ளாகக் கொண்டு பாடப்பெற்றுள்ளன.

கோயில் விழாக்காலங்களில் அந்தந்தக் கோயில் தல புரா ணங்கள் பாடப்பெற்றன; படிக்கப்பெற்றன; சொற்பொழிவாற்றப் பெற்றன. மக்கள் மனக்கவலைகளை இவை மாற்றியதோடு அவர் களிடத்தே தெய்வ நம்பிக்கையையும் உருவாக்கி வளர்த்தன. தல புராணங்களில் தவறாமல் இடம்பெறும் நாட்டுப் படலம் - நகரப் படலங்கள், மக்கள் வாழ்க்கை நெறி, இயற்கைச் செழிப்பு, அரச நீதி இவற்றைக் கொண்டு அமைத்துள்ளமையால், ஆளுவோர் ஆளப் படுவோரிடம் அறநெறிதழைக்க ஒருவாறு இவை உதவி வந்துள்ளன.

இந்து மதப் புராணங்களே அன்றி, இசுலாமிய கிறித்துவப் புராணங்களும் தமிழில் உள்ளன. உமறுப்புலவர் பாடிய சீறாப் புராணம், வீரமாமுனிவர் இயற்றிய தேம்பாவணி ஆகியவை அவற் றுள் குறிப்பிடத்தக்கன.

தல புராணங்களில் சிறந்த ஒரு புராணம் 'தணிகாசல புராணம்'; இலக்கிய நயம் மிக்கது; சைவசித்தாந்தக் கருத்துக்கள் கொண்டது. கடவுள் வாழ்த்து, அவையடக்கம், சிறப்புப் பாயிரம், திருநாட்டுச் சிறப்பு, திருநகரச் சிறப்பு, நைமிசாரணியச் சிறப்பு, கல்லாரகிரி மான்மிய அத்தியாயம், பிரமன் பேறுபெற்ற அத்தியாயம், அகத்தியன் கல்லாரகிரி அடைந்த அத்தியாயம், அகத்தியருக்குச் சிவ தன்மோத்தரம் உரைத்த அத்தியாயம், தாரகனைக் கொன்ற அத்தியாயம், இந்திரன் நீலமலரால் அர்ச்சித்துத் தெய்வயானையை யும் வெள்ளானையையும் கொடுத்த அத்தியாயம், திருமால் பூசித்துச் சக்கரம் பெற்ற அத்தியாயம், சேடன் பூசித்துச் சற்சரம் நீங்கின அத்தி யாயம் எனப் பதினான்கு பகுதிகளைக் கொண்டு, 426 செய்யுட்களில் இந்தப் புராணம் அமைந்துள்ளது.

கடவுள் வாழ்த்து, சிவகாமசுந்தரி வாழ்த்தில் இவர் இயற்றியுள்ள பின்வரும் பாடல் சைவசித்தாந்த நெறிப்படி சக்தி தத்துவ விளக்கமாக அமைந்துள்ளது நோக்கத்தக்கது. இருவினை ஒப்பு நிகழ்ந்தவழி வாய்க்கும் சக்திநிபாதம், சிவசக்தி தத்துவம் கருதத்தக்கது.

''சொற்பொருளும் உடலுயிரும் சுடரொளியும் விரைமலரும்
சுவையும் பாலும்
நிற்குநிறை எனக்கலந்து சிவத்திலந் நியமாகி
நிலவும் அண்டம்
பற்பலவும் படைத்தளிக்குந் தாயாகி வினைச்சமமாம்
பருவந் தோன்றும்
சிற்பரையைத் தில்லைநகர்ச் சிவகாம சுந்தரியைச்
சிந்தை சேர்ப்பாம்''

தணிகாசலபுராணச் சிறப்புப் பாயிரம் பின்வரும் முதற் பாடல்வழி இதனை இயற்றியவர் கந்தப்பமுனி என்பவர் ஆவர் எனத் தெரிகிறது.

பிரமாண்ட புராணத்தில் பிரமன்நா ரதமுனிக்குப்
பெட்பிற் கூறும்
வரமான வடமொழியில் விளங்கியி தணிகைவரை
மான்மியத்தை
உரமான பூதலத்தில் உள்ளதமிழ் வாணர்எலாம்
உணரும் ஆறு
திரமான செந்தமிழாற் பத்தியிற் கந்தப்பமுனி
செப்பினானே...

என்பதே அந்தப் பாடல்.

கந்தப்ப முனி தொண்டை நாட்டைச் சேர்ந்தவர்; வீர சைவ மரபினர், வீர சைவர்கள் இல்லற வாழ்வில் ஈடுபட்டிருந்தாலும் முனிவர், தேசிகர், ஐயர் என அழைக்கப்பெறுதல் மரபு. இவர் ஈன்ற

பிள்ளைகள் திருத்தணிகை விசாகப் பெருமாள் ஐயர், சரவணப் பெருமான் ஐயர் ஆவர். இவர் திருவாவடுதுறை கச்சியப்ப முனிவரின் மாணவர் ஆவர்; சிறந்த தமிழ்ப் புலவர்; இவர் இயற்றிய வேறு நூல்கள் தணிகாசலக் கலம்பகம், தணிகை உலா, தணிகை அந்தாதி, தணிகைப் பிள்ளைத்தமிழ் என்பன ஆகும்.

திருமுருகனின் ஆறுபடை வீடுகளுள் ஒன்றாகிய இத்தணிகை, ''கன்மலிந்த கழுநீர்க்குன்றம்' என்ற தேவார மூவருள் முதியவராகிய அப்பர் பெருமானால் பாடப்பெற்றுள்ளது. அருணகிரிநாதர் பாடிய திருப்புகழ்ப் பதிகங்களாலும் இத்தணிகை சிறப்புப் பெற்றுள்ளது. திருமுருகன் சூரபதுமனை வென்றபின் சீற்றம் தணிந்து வள்ளி தெய்வானையுடன் இங்கு வீற்றிருப்பதால் இவ்வூர் தணிகை எனப் பெற்றது என்பர். கோபம் கொடியது. மனிதனைப் பாபியாக மாற்ற வல்லது. அக்கோபம் தணிந்து மனிதன் தெய்வமாக வாழ வேண்டும் என்ற குறிப்பைக் கொண்டதே 'தணிகை' என அமரகவி பாரதியாரும் பின்வருமாறு பாடியுள்ளார்.

திருத்தணிகை மலைமேலே குமாரதேவன்
திருக்கொலுவீற் றிருக்குமதன் பொருளைக் கேளீர்!
திருத்தணிகை யென்பதிங்கு பொறுமையின்பேர்
செந்தமிழ்கண்டீர், பகுதி; 'தணி' யெனுஞ்சொல்
பொருத்தமுறும் தணிகையினால் புலமை சேரும்
'பொறுத்தவர பூமியினை ஆள்வார்' என்றும்
அருத்தமிக்க பழமொழியும் தமிழிலுண்டாம்
அவனியில் பொறையுடையான் அவனே தேவன்.

கோயில் தலபுராணங்களை அச்சிட்டு வழங்கும் நெறியைச் சைவத் திருமடங்கள் தொடங்கி வைத்தன. முனைவர் தமிழ்க் குடிமகனார் அறநிலையத்துறை அமைச்சர் ஆனபின் தமிழகத் திருக்கோயில் புராணம் எல்லாம் மக்கள் அனைவர்க்கும் கிடைக்குமாறும், விளங்குமாறும் எளிய உரையோடு இனிய தமிழில் அச்சிட்டு வழங்கும் ஆணையை அறநிலையத்துறை வழி செயல்படுத்துகிறார். அத்தகு

அரசு ஆணைவழி உருவாகி வருகின்ற பல தல புராணங்களில் சிறந்த ஒன்று இந்தத் தணிகாசலப் புராணம் ஆகும்.

இதற்குத் தெளிவுரை தந்துள்ள பேராசிரியர் முனைவர் செ. உலகநாதன் சிறந்த எழுத்தாளர். சிறுகதை, புதினம், நாடகம், வாழ்க்கை வரலாற்று நூல்கள் பல யாத்தவர்; அகமதாபாத் முதலான நகர் பல சென்று நாடகங்கள் நடத்தும் ஒரு நாடக இயக்குநர். சங்கர தாஸ் சுவாமிகளிடம் பெரிதும் ஈடுபாடு கொண்டவர். சுவாமிகளின் நாடகங்களை ஆய்ந்து முனைவர் பட்டம் பெற்றவர். தமிழ் மொழி, இன வளர்ச்சியைக் குறிக்கோளாகக் கொண்டு எழுதியும் பேசியும் வாழ்ந்த பேராசிரியர் மு.வ., தமிழ் இனக்காவலர், தமிழகக் கல்வி அமைச்சர் பேராசிரியர் க. அன்பழகனார், சைவத் தமிழ்ச் சான்றோர் பேராசிரியர் அ.மு. பரமசிவானந்தம், சொல்வல்லார் அ.ச. ஞான சம்பந்தம் முதலியோர்பால் கற்கும் பேறுபெற்ற பச்சையப்பன் கல்லூரிப் பழைய மாணவர். தம் ஆசிரியர் கொண்ட கொள்கையில், தமிழ் உணர்வோடு தமிழுக்காக வாழ்ந்து வருபவர்.

இவர் தந்துள்ள இந்த உரை விதையில்லாத திராட்சைக் கனிபோல் கற்பதற்கு எளிது; இனிய தமிழில் அமைந்துள்ளது. பொழிப்புரை, பதவுரை, விளக்க உரை எனும் மூவகையில் செய்யுளை முழுமையாக, தெளிவாக, விளக்கமாக அறிந்துகொள்ளத் துணை செய்ய வல்லது.

தூவச்ச காயயில்வேல் சுந்தரனை வள்ளிபுனம்
மேவச்ச காயனென வேழவுரு முழுமையுங்கொள்
ஆவச்ச காயனெனு மைங்கரனை யவனருளாற்
பாவச்ச காயமலப் பற்றறயாம் பற்றுவாம்

எனும் பாடற்கு இவர் எழுதியுள்ள பின்வரும் விளக்க உரையிலிருந்து இவர்தம் மொழி அறிவு, இலக்கியப் புலமை, சித்தாந்தத் தெளிவு ஆகியவற்றை அறியலாம்.

முனைவர் செ. உலகநாதன் மேலே குறிப்பிட்ட பாடலுக்குத் தந்துள்ள விளக்கு உரை:

தூவச்ச, வச்ச, ஆவச்ச, பாவச்ச என்பன பேச்சு வழக்குச் சொற்கள்.

'வச்ச' என்பது 'வைத்த' என்பதன் போலி. முருகனுடைய வேலுக்குத் தூய்மை, காய், அயில் என்பன அடைமொழிகளாக வந்துள்ளன. முருகன் தூய்மையானவன், முருகன் சூரபத்மனைச் சினந்தவன்; அவனுடைய வேல் கூர்மையானது. இவற்றையெல்லாம் முருகனுடைய வேலின் மீது ஏற்றிக் கூறுகிறார் ஆசிரியர்.

விநாயகர் யானை வடிவினர் என்பதற்கு அவர் தலைப் பகுதியே தும்பிக்கையுடன் அமைந்துள்ளது எனினும் வள்ளியை அச்சுறுத்தும் வடிவத்தை முழுமையாக யானை வடிவம் கொண்ட தாக மாற்றிக் கொண்டார் என்பதனை,

''வேழவுரு முழுமையுங்கொள்'' என்னும் தொடர் உணர்த்துகிறது.

'சுந்தரன்' அழகன் என்னும் பொருளில் அழகைக் குறிக்கும் முருகு என்னும் வடிவினனாகிய முருகனைச் சுட்டுகிறது.

'மலம்' என்பது ஆணவம், கன்மம், மாயை என்னும் மூன்று மலங்களையும் குறிக்கும்.

இப்பாடலின் இறுதி அடி, ''பற்றுக பற்றற்றான் பற்றினை'' என்னும் குறளை அடியொற்றி அமைந்துள்ளது.

இவ்வாறு வழிபாட்டிற்கு உரிய தலவரலாறுகளை, தெய் வீக உணர்வை வளர்க்கும் வழியில் இத்தகு நூல்களை வெளி யிடும் தமிழக அரசினையும், கோயில் அறங்காவலர் குழுவினரையும் தமிழகம் போற்றி ஏற்பதாக!

— முனைவர் பொன். சௌரிராசன்
தமிழ்ப் பேராசிரியர் (ஓய்வு)
திருவேங்கடவன் பல்கலைக்கழகம்,
திருப்பதி - 2.

# 'தணிகாசல புராணம் தெளிவுரை' ஆசிரியரின் நல்லுரை

'தணிகாசல புராணம்' இயற்றிய தவத்திரு கந்தப்ப முனிவருடைய 'தணிகைப் பிள்ளைத்தமிழ்' நூலுக்கு, முன்னர் 'தணிகைப் பிள்ளைத்தமிழ் - தெளிவுரை' என்னும் தலைப்பில் நூல் இயற்றித் தந்தேன். அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயிலார் அன்புடன் ஏற்றுப் பொலிவுடன் வெளியிட்டனர். மற்றும், 'திருத்தணிகையாற்றுப்படை - தெளிவுரை' என்னும் என் நூலையும் அதற்கு முன்னர் வெளியிட்டனர். இவற்றிற்கெல்லாம் தூண்டுகோலாகவும் காரணமாகவும் இருப்பவர் இணை ஆணையர் திருமிகு மு.க. பாலசுப்பிரமணியம், பி.ஏ., பி.எல்., அவர்கள் ஆவர். அவருடைய அன்புக்கு என்றும் நன்றியுடையேன்.

என்னுடைய 'தணிகாசலபுராணம் - தெளிவுரை' நூலுக்கு எழிலுற அணிந்துரை வழங்கிய பெருந்தகை, சான்றோர், அன்பு நண்பர், தமிழ்க்கடல் பேராசிரியர் முனைவர் மு. வரதராசனார் அவர்களின் இனிய மாணவர், வடவேங்கடவன் பல்கலைக்கழக முன்னார் தமிழ்த்துறைத் தலைவர், ஆந்திரத் தமிழர்களின் வழிகாட்டி ஆகிய அனைத்துச் சிறப்புக்களுள் ஒருங்கே அமைந்த பேராசிரியர் முனைவர் பொன் சௌரிராசனார், எம்.ஏ., பிஎச்.டி., அவர்கட்கு என்றென்றும் நன்றியுடையேன். அவருடைய வழிகாட்டுதல் காரணமாகவே அடியேன் முனைவர் பட்டம் பெற்றேன்.

'தணிகாசல புராணம் - தெளிவுரை' நூல் தணிகையின் வரலாற்றையும் தணிகாசலப் பெருமான் முருகனுடைய அரிய ஆற்றல்களையும் அடியார்க்கு அருளும் அருள் தன்மைகளையும் அறிய உதவும். கந்தப்ப முனிவரின் ஆழ்ந்த தமிழ்ப் புலமை போற்றிப்

பரவுதற்குரியதாகும். அப்பெரியாரின் திருவடிகளை வணங்குகின்றேன். மகாவித்துவான் டாக்டர் உ.வே. சாமிநாதையர் அவர்களுடைய குறிப்புரை யான் தெளிவுரை எழுதுதற்குப் பெரிதும் உதவி செய்தது. அப்பெரியாரின் செந்தாமரைத் திருவடிகளை வணங்குகிறேன்.

தமிழுலகம் இந்நூலினை வாங்கிப் பயன்பெற வேண்டும் என அன்புடன் கோருகிறேன்.

அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் நிருவாகத்தினருக்கும் அறங்காவலர் குழுவினர்க்கும் என் பணிவான நன்றியுரியது.

அன்பன்,

**செ. உலகநாதன்**

# தவத்திரு கந்தப்ப முனிவர் வரலாற்றுச் சுருக்கம்

தவத்திரு கந்தப்ப முனிவர் 18 ஆம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் திருத்தணிகையில் வாழ்ந்தவர்; தற்போது 'சீர்கருணீகர் மடம்' என்று வழங்கும் இடத்தில் வாழ்ந்து வந்தார். கந்தப்ப முனிவர், 'கந்தப்பையர்' எனவும் குறிப்பிடப் பெறுகிறார்; கந்தப்ப தேசிகர் எனவும் வழங்கப் பெறுகிறார். தணிகாசல புராணத்தில், ''கந்தப்ப முனி'' என்று குறிக்கப் பெற்றுள்ளார்.

கந்தப்ப முனிவர் வீர சைவ மரபில் தோன்றியவர். இவர் 'கவிராக்ஷஸர்' என்ற சிறப்புப் பெயர் பெற்ற கச்சியப்ப முனிவருடைய மாணாக்கருள் ஒருவர். இவருடைய பரம்பரை தமிழ்ப் புலமை மிக்கது.

இவருக்கு விசாகப்பெருமாளையர், சரவணப் பெருமாளையர் என்னும் இரு புதல்வர்கள் இருந்தனர். அவ்விருவரும் இவரிடம் கல்வி பயின்றனர்; மற்றும் இராமாநுச கவிராயரென்னும் புலவரிடமும் தமிழ் பயின்றனர். இருவரும் தமிழில் பல நூல்கள் இயற்றி வெளியிட்டுள்ளனர். பஞ்சலட்சண வசனம், பஞ்சலட்சண வினா விடை என்பன சில. பல பழைய நூல்களையும் பதிப்பித்தனர். விசாகப் பெருமாளையர் சென்னை மாகாணப் பள்ளிக்கூடம் என்று வழங்கிய (Provincial School) இராசதானிக் கல்லூரியில் (மாநிலக் கல்லூரியில்) தமிழ்ப் பண்டிதராகப் பணியாற்றிப் புகழ் பெற்றவர்.

கந்தப்ப முனிவர் தம் இளமைக் காலத்தில் 'தணிகாசல புராணம்' இயற்றினார். ''இந்நூல் கந்தப்பையருடைய சுப்பிரமணிய பக்தியையும் இளமைக் காலத்துத் தமிழ்ப் பயிற்சியையும் விளக்குகின்றது. இவர் பாடிய திருத்தணிகைச் சந்நிதி முறை இப்புராணத்திற்குப் பல வருஷங்களுக்குப் பிறகு இயற்றியிருத்தல் கூடுமென்று

தோற்றுகின்றது'' என்று தமிழ்த் தாத்தா டாக்டர் உ.வே. சாமிநாதையர் குறிப்பிட்டுள்ளார்.

ஏட்டுச்சுவடியில் இருந்த தணிகாசல புராணத்தை முதன் முதலில் பதிப்பித்தவர் டாக்டர் உ.வே. சாமிநாதையர் அவர்களே ஆவர். இந்நூல் 1939 ஆம் ஆண்டில் பதிப்பிக்கப் பெற்றது. தணிகாசல புராணத்திற்கு மூலநூல் ஒரு வடநூல் எனத் தெரிகிறது. அந்நூல் இன்று கிடைக்கவில்லை. டாக்டர் உ.வே. சாமிநாதையர் தமக்குத் தணிகாசல புராண ஏட்டுச்சுவடி, சரவணப் பெருமாளையர் பேரராகிய குருசாமிஐயர் அவர்களிடமிருந்து கிடைத்ததாகக் குறிப்பிட்டுள்ளார். இந்நூலைச் சுவாமிநாதையர் வெளியிடப் பொருளுதவி செய்தவர் ராவ் பகதூர் வடக்குப்பட்டு சு. செங்கல்வராயப் பிள்ளையவர்கள் ஆவர்.

உ

'தணிகை முருகன் துணை

# தணிகாசல புராணம் - தெளிவுரை

தெளிவுரை ஆசிரியர் :

முனைவர் செ. உலகநாதன், எம்.ஏ., பிஎச்.டி.,

## 1. கடவுள் வாழ்த்து

### ஆபத்ஸகாய விநாயகர்

(கொச்சகக்கலிப்பா)

1. தூவச்ச காயயில்வேற் சுந்தரனை வள்ளிபுனம்
மேவச்ச காயனென வேழவுரு முழுமையுங்கொள்
ஆவச்ச காயனெனு ஞமங்கரனை யவனருளாற்
பாவச்ச காயமலப் பற்றறயாம் பற்றுவாம். (க)

### தெளிவுரை

தூய்மையை வைத்த பகைவரைக்காய்கின்ற கூர்மையான வேலையுடைய அழகனாகிய முருகனை, வள்ளி தினைப்புனத்தில் சேருதற்கு, உதவுபவனாக, யானையின் வடிவம் முழுதும் கொண்ட ஆபத்துக்கு உதவுபவன் என்னும் ஐந்து கைகளை உடையவனை, அவனுடைய அருளினால், பாவத்திற்கு உதவியாகிய மலமாகிய பற்றினை அறுத்தற்கு நாம் பற்றுவோமாக!

### விளக்கம்

தூவச்ச - தூய்மையை வைத்த
அயில் - கூர்மை

சுந்தரன் - அழகன், முருகன்
மேவ - சேருவதற்கு, விரும்புவதற்கு
சகாயன் - உதவுபவன்
ஆவச்சகாயன் - ஆபத்துக்கு உதவும் விநாயகன்

'தூவச்ச', 'வச்ச', 'ஆவச்ச', 'பாவச்ச' என்பன பேச்சு வழக்குச் சொற்கள்.

'வச்ச' என்பது 'வைத்த' என்பதன் போலி. முருகனுடைய வேலுக்குத் தூய்மை, காய், அயில் என்பன அடைமொழிகளாக வந்துள்ளன. முருகன் தூய்மையானவன். முருகன் சூரபத்மனைச் சினந்தவன்; அவனுடைய வேல் கூர்மையானது.

இவற்றை எல்லாம் முருகனுடைய வேலின் மீது ஏற்றிக் கூறுகிறார் ஆசிரியர்.

விநாயகர் யானைவடிவினர் என்பதற்கு அவர் தலைப் பகுதியே தும்பிக்கையுடன் அமைந்துள்ளது எனினும், வள்ளியை அச்சுறுத்தத் தம் வடிவத்தை முழுமையாக யானைவடிவம் கொண்ட தாக மாற்றிக் கொண்டார் என்பதனை,

''வேழவுரு முழுமையுங்கொள்'' என்னும் தொடர் உணர்த்து கிறது.

'சுந்தரன்' அழகன் என்னும் பொருளில் அழகைக்குறிக்கும் முருகு என்னும் வடிவினனாகிய முருகனைச் சுட்டுகிறது.

'மலம்' என்பது ஆணவம், கன்மம், மாயை என்னும் மூன்று மலங்களையும் குறிக்கும்.

இப்பாடலின் இறுதி அடி, ''பற்றுக பற்றற்றான் பற்றினை என்னும் குறளை அடியொற்றி அமைந்துள்ளது.

*(அறுசீர்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்)*

2. வெம்பி வருபேய் நோயாதி
விலக்கி யடியார்க் கருள்புரியும்
நம்பி யயன்மா லிந்திரன் விண்
ணாடர் பகையைத் தவிர்த்தருள்வான்
பம்பி யெழுந்தீப் பொறியுருவாய்ப்
பரம னுதற்கண் டனிலுதித்த
தம்பி தணிகைச் சரிதைசொலத்
தமையன் றும்பி முகன்றுணையே.

## தெளிவுரை

கலங்கும்படி வருகின்ற பேய், நோய் முதலியவற்றை நீக்கி அடியவர்களுக்கு அருள்புரியும் நம்பியாகிய விநாயகர் பிரம்மன், திருமால், இந்திரன், விண்ணுலகில் உள்ள தேவர்கள் ஆகியோரின் பகையை விலக்கும் பொருட்டு ஆரவாரத்துடன் தோன்றும் ஆறு நெருப்புப்பொறிகளின் வடிவமாய்ச் சிவபெருமானுடைய நெற்றிக் கண்ணில் தோன்றிய தம்பியாகிய முருகனுடைய தணிகாசலத்தின் வரலாற்றைச் சொல்ல அவனுடைய தமையன் தும்பி முகன் துணை செய்வான்.

## விளக்கம்

வெம்பி - கலங்கி, வாடி,
நம்பி - ஆண்களில் சிறந்தவன்
அயன் - பிரம்மன்
மால் - திருமால்
தவிர்த்தருள்வான் - விலக்கும் பொருட்டு
பம்பு - ஆரவாரம் செய்து
தீப்பொறி உருவாய் - ஆறு தீப்பொறிகளின் வடிவமாக

பரமன் - சிவபெருமான்
நுதற்கண்தனில் - நெற்றிக்கண்ணில்
தும்பி முகன் - விநாயகன்.

## நடராசப் பெருமான்

3. பருதிமதி மேதினிநீர் பாவகன்கால் வெளியுயிர்சீர்
பரந்த மேனி
மருவிமல ரயன்றிருமான் மணிகண்டன் மயேசனொடு
சிவனு மாகிச்
சுருதிபுக ழைந்தெழுத்தின் பொருளாகி யுலகினிலைந்
தொழிலு நீடப்
பெருகியபொன் னம்பலத்திற் கூத்தாடும் பெருமானைப்
பேசி வாழ்வாம்.

## தெளிவுரை

ஞாயிறு, நிலவு, உலகம், நீர், தீ, காற்று, ஆகாயம், உயிர், சிறப்புப்பரவிய உடல் ஆகியவை மருவி, மலரில் வீற்றிருக்கும் பிரம்மன், திருமால், மணிகண்டன், மகேசன் ஆகியவர்களுடன் சிவனும் ஆகி வேதம் புகழ்கின்ற ஐந்தெழுத்தின் பொருளாகி, உலகத்தில் ஐந்து தொழில்களும் நிலைத்திருக்கப் புகழ் பெருகும்படி அமைந்துள்ள பொன்னம்பலத்தில் கூத்தாடும் நடராசப் பெருமானைப் புகழ்ந்து பேசி வாழ்வோமாக!

## விளக்கம்

பருதி - ஞாயிறு, கதிரோன்
மதி - நிலவு
மேதினி - உலகம்
பாவகன் - தீ

கால் - காற்று
வெளி - ஆகாயம்
சீர்பரந்தமேனி - சிறப்புப் பரவிய உடல்
மலர் அயன் - மலரில் வீற்றிருக்கும் பிரம்மன்
மணிகண்டன் - ஸ்ரீகண்டருத்திரர்
மயேசன் - மகேசன்.
சுருதி - வேதம்
நீட - நிலைத்திருக்க
கூத்தாடும் பெருமான் - நடராசப்பெருமான்.

## சிவகாமசுந்தரி

4. சொற்பொருளு முடலுயிருஞ் சுடரொளியும் விரைமலருஞ்
சுவையும் பாலும்
நிற்கு நிறை வெனக்கலந்து சிவத்திலந் நியமாகி
நிலவு மண்டம்
பற்பலவும் படைத்தளிக்குந் தாயாகி வினைச்சமமாம்
பருவந் தோன்றும்
சிற்பரையைத் தில்லை நகர்ச் சிவகாம சவுந்தரியைச்
சிந்தை சேர்ப்பாம்.

## தெளிவுரை

சொல்லின்பொருளும் உடலும் உயிரும் சூரியன், சந்திரன், விளக்கு முதலியவற்றின் ஒளியும், நறுமணமும் மலரும் சுவையும் பாலும் கலந்து நிற்கின்ற நிறைவானபொருள் என்னும் படிக் கலந்து சிவத்தில் இருந்து அயலாகி விளங்குகின்ற அண்டங்கள் பலப் பலவாகப் படைத்து அருள் செய்யும் அன்னையாகி இருவினைகளும் ஒப்புண்டாகும் பருவத்தில் தோன்றும் பராசத்தியைத் தில்லை நகரத்தின் சிவகாமசவுந்தரியை மனத்தில் சேர்ப்போமாக!

## விளக்கம்

'சுடர்ஒளி' என்னும் தொடர் தீ, ஒளி, சந்திரன், சூரியன், விளக்கு, தீச்சிகை ஆகிய அனைத்து வகைச் சுடர்களின் ஒளியை ஒட்டுமொத்தமாகக் குறிக்கும்.

சிவகாமசுந்தரி, ஒளிச்சுடராகவும் உடல், உயிர் முதலிய அனைத்துமாக விளங்கும் தன்மையள்.

அந்நியம் - அயல்
வினைச்சமம் - இருவினை ஒப்பு
சிற்பரை - பராசத்தி.

**செங்குழுநீர் விநாயகர்**
*(கொச்சகக்கலிப்பா)*

5. அங்கழுநீ ரமணரொடு மாலவா யரனேடும்
வெங்கழுநீ ரெதிரேற்று மெய்த்தமிழின் மணங்குலவும்
பைங்கழுநீர் நறுஞ்சுனைக்கட் பகன்மலருந் தணிகை வரைச்
செங்கழுநீ ரைங்கரன்றான் சென்னிமிசைப் புனைந்திடுவாம்.

## தெளிவுரை

அங்குத் தோல்வியினால் அழுகின்ற சமணர்களோடு பெரிதாக விரும்பிய ஏட்டையும் முறையே அமணரைக் கழுவிலும் ஏட்டை வையை ஆற்றுநீரிலும் ஏற்றிய தமிழின் மணம் விளங்குகின்ற பசிய குவளை மலர் நறுமணம் பொருந்திய இந்திர தீர்த்தம் என்னும் சுனையிடத்தில் பகற்பொழுதில் (காலை நண்பகல் மாலை என்னும் மூன்று வேளைகளில்) மலருகின்ற தணிகை மலையில் உள்ள ஐந்து கைகளைக் கொண்ட செங்குழு நீர் விநாயகரின் திருத்தாள்களைத் தலைமீது அணிந்திடுவோமாக!

## விளக்கம்

'அங்கழு நீர் அமணரொடு' என்னும் தொடர், தோல்விகண்டு அழுத சமணர்களின் தன்மையைக் குறிக்கிறது. திருஞானசம்பந்தர் பாண்டிய மன்னன் கூன் பாண்டியன் - என்பவனுடைய நோயை இறைவன் மீது பாடல் பாடித் தீர்த்தருளியதனால் சமணர்கள் கழுவில் ஏற்றப்பட்டனர்; ஏடு வையை நீரை எதிர்த்துக் கரைக்கு வந்தது. இவற்றில் தமிழின் ஏற்றம் புலப்படுகிறது.

நறுஞ்சுனை - இந்திரதீர்த்தம்
பைங்கழுநீர் - பசிய குவளை மலர்
செங்கழு நீர் ஐங்கரன் - செங்கழுநீர் விநாயகர்.

### ஞானசத்திதரர்

*(எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்)*

6. பரமனுதல் விழியினுதித் தந்தரமே னிமிர்ந்து
பகிரதியிற் றவழ்ந்துநிறை பனிநீருட் குளித்துச்
சரவணத்தொட் டிலினேறி யறுவர்முலை யுண்டு
சங்கரியின் மடியிலிருந் தோமெனுஞ் சொற் பேசி
அரன்மலையி னின்றெவையும் படைத்தலைவாய் நடந்தங்
கசுரர்தமைத் தொலைத்தமரர்ப் புரந்துலகை வலம்வந்
திரவிசத கோடியெனத் தணிகையமர்ந் தருளும்
எழின்ஞான சத்திதர னிணையடியேத் தெடுப்பாம்.

## தெளிவுரை

சிவபெருமானுடைய நெற்றிக்கண்ணில் தோன்றி, ஆகாயத்தில் நிமிர்ந்து, கங்கையாற்றில் தவழ்ந்து, நிறைந்த பனிநீரில் குளித்துச் சரவணப் பொய்கையாகிய தாமரைமலர்களுள்ள தொட்டிலில் ஏறி,

கார்த்திகை மகளிர் ஆறுபேர்களின் முலைப்பால் உண்டு, பார்வதியின் மடியில் இருந்தோம் என்னும் சொல்லைப் பேசிக் கயிலை மலையில் நின்று படைத்தலைமை இடங்கள் எங்கும் நடந்து, அங்கு சூரபதுமன் முதலிய அசுரர்களை அழித்துத் தேவர்களைக் காத்து, (சிவபெருமானிடம் கனிபெற வேண்டி) உலகை (மயின்மீது அமர்ந்து) வலம் வந்து, நூறுகோடி சூரியர்கள் என்னும் படித்தணிகையில் வீற்றிருந்து அருள்புரியும் அழகிய ஞானசத்திதரனுடைய இணையடிகளைப் போற்றி ஏந்துவோமாக!

## விளக்கம்

'சரவணத்தொட்டில்' என்பது சரவணப்பொய்கையாயினும் எல்லாம்வல்ல தெய்வக்குழந்தையாகிய முருகனுக்குரிய தொட்டிலே யாகும்.

அந்தரம் - ஆகாயம்
பகிரதி - கங்கை

'அறுவர் முலையுண்டு' என்னும் தொடர் முருகன் கார்த்திகைப்பெண்டிர் (முருகன் ஆறு குழந்தைகளாகத் தனித்தனியே இருந்தபோது) முலைப்பால் உண்டவன் என்னும் செய்தியைத் தெரிவிக்கிறது.

சங்கரி - பார்வதி
அரன்மலை - கைலாயம்
புரந்து - காத்து

'இரவிசதகோடி' என்னும் தொடர் வாயிலாக முருகன் நூறுகோடி சூரியர்களின் ஒளிக்கு ஈடான அழகன் என்பதனை உணரலாம்.

'ஞானசத்திதரர்' என்பது திருத்தணிகை மலைத் தலத்து முருக்கடவுளின் திருப்பெயராகும்.

## தெய்வயானையம்மை

7. சங்கரிதன் மருமகளைச் சங்கரிதன் மகளைச்
 சங்கரிக்குஞ் சங்கரனை மாமனெனுந் தயலை
வெங்கரிதந் திடுபிடியை விண்ணவர்கோன் சுதையை
 விண்ணவர்கள் பணிந்தேத்தும் விண்ணுலகத் தணங்கைப்
பைங்கழுநீர் விழியாளைப் பைங்கழுநீர் நிறமே
 படைத்தாளைப் பைங்கழுநீர் செங்கரங்கொண் டாளைச்
செங்கமலை தரும முதைக் கந்தரிடத் தமரும்
 தெய்வயா னையைத்தொழுது திருவருள்பெற் றிடுவாம்.

### தெளிவுரை

பார்வதியின் மருமகளை, சங்கையுடையதிருமாலின் மகளை, திரிகின்ற (சஞ்சரிக்கும்) சங்கரனை மாமன் என்றுகூறும் பெண்ணை, இந்திரனுடைய யானையை அளிக்கும் பெண்யானை யாகிய தெய்வயானையை, இந்திரனுடைய மகளை, தேவர்கள் வணங்கிப் போற்றும் விண்ணுலகத்துத் தெய்வப் பெண்ணை, குவளைமலர்போன்ற கண்களையுடையவளை, குவளைமலரின் பச்சை நிறத்தையே கெகண்டவளை, குவளைமலரைச் சிவந்த கரத்தில் கொண்டிருப்பவளை, சிவந்த திருமகளின் அமுதமாகிய மகளை, கந்தபிரானிடத்தில் அமருகின்ற தெய்வயானையை வணங்கி அவளுடைய திருவருளைப் பெறுவோமாக!

### விளக்கம்

'சங்கு அரிதன் மகளை' என்றது, தெய்வயானை பழம் பிறப்பில் திருமாலின் மகள் என்பதனைச் சுட்டுவதற்காகும்.

தயலை - தையலை, பெண்ணை.
வெங்கரி - இந்திரனுடைய ஐராவதம் என்னும் யானை
சுதை - மகள்
பைங்கழுநீர் - பசுமையான குவளைமலர்
கமலை - திருமகள்.

## வள்ளி நாயகி

8. மாதவனோர் மாதவனாய் மாதவஞ்செய் திடலும்
வனமானாய் வந்தெதிர்ந்த மலர்மானைப் புணரப்
பூதலமங் கையருருவா யவதரித்து வள்ளிப்
பொருப்புறையும் பொருப்பர்மனை விருப்பமுடன் வளர்ந்து
தீதகலுந் தினைகாத்து வேங்கையுரு வெடுத்த
செவ்வேளை யவ்வேளை சேர்ந்திருகை கோளும்
காதலுடன் புரிந்திறைவன் வலப்பாகத் தமரும்
கன்னியெனும் வல்லிபத முன்னிவழுத் திடுவாம்.

## தெளிவுரை

திருமகளுக்குத் தலைவனாகிய திருமால், ஒரு சிவமுனி என்னும் முனிவனாகிப் பெருந்தவம் புரிந்தபோது, காட்டுமானாக வந்து எதிர்ப்பட்ட மலர்போன்ற மானாகிய திருமகளைப் புணரவும், உலகமங்கையர் வடிவமாக வள்ளிமலையில் வாழும் குறிஞ்சி நிலமக்களாகிய வேட்டுவர் இல்லத்தில் விருப்பமுடன் வளர்ந்து தீமை நீங்குதற்குரிய தினைப்புனத்தைக் காத்து, வேங்கை மரத்தின் வடிவம் கொண்ட செவ்வேளாகிய முருகனை அந்த வேளையில் சேர்ந்து, களவு கற்பு என்னும் இருகைகோள்களும் காதலுடன் நடத்திய இறைவனுடைய வலப்பாகத்தில் அமருகின்ற கன்னி என்னும் வல்லிக்கொடி போன்ற வள்ளியம்மையாரின் திருப்பாதங்களை நினைந்து வணங்குவோமாக!

## விளக்கம்

மாதவன் - திருமால்
மாதவனாய் - சிவபெருமானை வணங்கும் மிக்க தவஞ் செய்யும் முனிவனாகி
எதிர்ந்த - எதிர்ப்பட்ட
மலர்மான் - மலர்போன்ற மானாகிய திருமகள்
பூதலம் - உலகம்
வள்ளிப்பொருப்பு - வள்ளிமலை
தினைகாத்து - தினைப்புனத்தைக் காத்து
வேங்கை உரு - வேங்கை மரத்தின் வடிவம்
செவ்வேள் - முருகன்
இருகைகோள் - களவொழுக்கமும் கற்பொழுக்கமும்.

## வேற்படை

9. பாலயிலுங் குழவியெனப் பாரிலுதி யாமற்
பாறையினுங் கடியமனப் பாவையர்மா லுறாமற்
சேலயிலுங் கொக்கெனவெந் தீமைபுரி யாமற்
சேனையிலும் யானையிலுஞ் சிந்தனைவை யாமற்
சூலையிலு நமன்றூதர் வாதையிலும் படாமற்
சூறையிலுங் கொடியமனஞ் சுழன்றுதிரி யாமற்
காலயிலும் பாம்பயிலுங் கார்மயிலை யுகைத்தோன்
கையயிலை மாலையிலுங் காலையிலும் பணிவாம்.

## தெளிவுரை

பாலை உண்ணும் குழந்தையாக உலகில் பிறக்காமல், பாறையை விடக் கடிய மனங்கொண்ட பெண்களின்மீது மயக்கம் கொள்ளாமல் சேல்மீனை உண்ணும் கொக்கினைப்போல் கொடிய தீமை செய்யாமல், படைகளின்மீதும் யானைகளின் மீதும்

எண்ணத்தை வைக்காமல் வியிற்று வலியிலும் எமனுடைய தூதரால் அடையும் துன்பத்திலும் சிக்காமல், சுழல் காற்றிலும் கொடிய உள்ளம் சுழன்று திரியாமல், காற்றை உண்ணும் பாம்பை உண்ணும் அழகிய மயிலைச் செலுத்தும் முருகன் கையில் உள்ள வேற் படையை மாலைவேளையிலும் காலை வேளையிலும் பணிவோ மாக!

## விளக்கம்

பால் அயிலும் - பால் உண்ணும்
மால் - மயக்கம்
சேல் - சேல்மீன்
அயிலும் - உண்ணும்
கார் - அழகு
சூலை - வயிற்று நோய்
நமன் - எமன்
சூறையிலும் - சுழல்காற்றைவிட
கால் அயிலும் - காற்றை உண்ணும்
பாம்பயிலும் - பாம்பை உண்ணும்
உகைத்தோன் - (மயிலைச்) செலுத்தும் முருகன்.
அயில் - வேல்படை

''சேனையிலும் யானையிலுஞ் சிந்தனை வையாமல்'' என்னும் தொடர் வாயிலாகப் படைகளின்மீதும் யானைகளின் மீதும் எண்ணம் வைக்கக்கூடாது என்று ஆசிரியர் கூறுதல், அரசபதவிக்கு ஆசையுறுதல் கூடாது என்னும் பற்றற்ற தன்மையை உணர்த்தவே யாகும். 'பாம்பயிலும்' என்னும் தொடர், பாம்பு காற்றை உணவாகக் கொண்டு வாழும் என்னும் உண்மையைப் புலப்படுத்துகிறது.

## மயில்

10. அருமையிலை, யொருபொருளுக் கடிமையிலை பிறருக்
கந்தகனுக் காண்மையிலை யடியேன்பால் வருதற்
கெருமையிலை சிறுமையிலை யின்மையிலை பகைஞர்க்
கெளிமையிலை மடமையிலை யிழிதகைமை யிலைநோய்
பொருமையிலை வறுமையிலை பொய்ம்மையிலை பிறவிப்
புன்மையிலை தீமையிலை பொறாமையிலை மகவான்
தருமயிலை வனமயிலை மணந்ததிருத்தணிகைச்
சண்முகனா ருவந்தேறுந் தனிமயிலைத் தொழவே.

### தெளிவுரை

ஒரு பொருளுக்கு அருமை இல்லை (எல்லாம் கிடைக்கும்); பிறருக்கு அடிமை இல்லை; என்னிடம் வருவதற்கு எமனுக்கு ஆண்மை (வீரம்) இல்லை, எருமை இல்லை; சிறுமை இல்லை; இல்லாமை இல்லை; என்னிடம் வருவதற்குப் பகைவர்க்கு எளிதன்று; அறியாமை இல்லை; இழிந்த தன்மை இல்லை; நோய் போன்ற குற்றம் இல்லை; வறுமை இல்லை; பொய் சொல்லுதல் இல்லை; பிறவியில் இழிந்த தன்மை இல்லை; தீமை இல்லை; பொறாமை இல்லை; இந்திரன் மகள் தெய்வயானையையும் வனமயிலாகிய வள்ளியையும் மணந்த திருத்தணிகைச் சண்முகப் பெருமானார் மகிழ்ச்சியுடன் ஏறுகின்ற ஒப்பற்ற மயிலைத் தொழுதல் அருமையானதன்று.

### விளக்கம்

அருமை இலை - ஒரு பொருள் கிடைப்பது அருமையானதன்று
அந்தகன் - எமன்
பொரு - போன்ற
மை - குற்றம்

புன்மை - இழிந்த செயல்

மகவான் தருமயில் - இந்திரன் மகள் தெய்வயானை

வனமயில் - வள்ளி

தனி - ஒப்பற்ற

## கோழிக்கொடி

11. மஞ்சேவல் கொளுமகவான் வந்தேவல் புரிய
மகிதலமுன் னேவல்கொளு மாசூர பன்மன்
நெஞ்சேவ லெனப்பிளந்து நிணங்கொறித்துச் சொரிசெந்
நீரருந்திக் கொக்கரித்து நிலவுலக மனைத்தும்
உஞ்சேவல் செய்யவிரு சிறைநீழல் பரப்பி
உவந்தேவல் விரைந்துகுக னுயர்வலக்கை யமரும்
செஞ்சேவற் கொடிக்கடியேன் றினமேவல் புரியத்
தீவினையு மெனதேவற் றிறத்தினகன் றிடுமே.

## தெளிவுரை

மேகங்கள் பணிசெய்ய ஆணையிடும் இந்திரன் தன்னிடம் வந்து ஏவிய பணிகளைப்புரிய, உலகம் முதலியவற்றை ஆணை செலுத்தும் பெரிய சூரபன்மனுடைய நெஞ்சைப் பிளப்பேன் என ஆணையிட்டுப் பிளந்து நிணத்தைக் கொறித்துச் சொரிகின்ற குருதி யைக் குடித்துக் கொக்கரகோ எனக் கூவி உலகமனைத்தும் வாழ ஏவல் செய்ய இரண்டு சிறகுகளாலும் நிழலைப்பரப்பி மகிழ்ச்சியடைந்து மிக விரைந்து முருகனுடைய வலக்கையில் அமருகின்ற சிவந்த சேவல் கொடிக்கு அடியேன் நாள்தோறும் ஏவல் செய்யத் தீவினை களும் எனது ஏவல் வலிமையினால் நீங்கி விடும்.

## விளக்கம்

மஞ்சு - மேகம்
மகவான் - இந்திரன்
மகிதலமுன் - உலகம் முதலியவற்றை
நெஞ்சே - நெஞ்சை; 'ஏ': அசைநிலை
வலென - வல்லென; ஒலிக்குறிப்பு
உஞ்சு - உய்ந்து, பிழைத்து
சிறை - இறக்கை, சிறகு
ஏவல் - ஆணை செலுத்துதல், பணிவிடை
செந்நீர் - குருதி, இரத்தம்
வல் - மிக.

### நவவீரர்

12. வெருவீர வாகுலத்தின் விளைவீர வுலகின்
விழைவீரத் தீவினைகண் மேலைவர வீர
மருவீர வாகுமிசை வருவீரற் கிளைய
மயில்வீர னயில்வீரன் வள்ளியணை வீரன்
திருவீர வாகுமுந்நான்குடையபிரான் பின்னர்த்
தேவிசிலம் பிடையுதித்த தெரிவையர்க ளளித்த
பொருவீர வாகுமுத லொன்பதுவீ ரர்களம்
புயவீர மலரடிக்குக் கரவீரம் புனைவாம்.

## தெளிவுரை

அச்சத்தை அறுக்கவும், துன்பத்தின் விளைவை அறுக்கவும், உலக உயிர்களின் ஆசைகளை அறுக்கவும், தீயவினைகள் வருங் காலத்தில் அறுக்கவும் பொருந்தும் வீரமுடைய பெருச்சாளியின்மேல் வருகின்ற வீரனாகிய விநாயகனுக்கு இளைய மயிலில் ஊர்ந்துவரும் வீரன், வேலையுடைய வீரன், வள்ளியை அணைந்திருக்கும் வீரன் புகழுக்குரிய வீரம் பொருந்திய பன்னிரண்டு தோள்களையுடைய

பிரான், பிறகு பாரதிதேவியின் சிலம்பிடையே தோன்றிய பெண்கள் ஈன்றளித்த போரிடற்குரிய வீரவாகுத்தேவர் முதல் ஒன்பது வீரர்களின் அழகிய தோள்களுக்கும் மலர் அடிகளுக்கும் அலரிமலர்களை அணிவிப்போம்.

## விளக்கம்

வெருவீர - வெருவைஈர - அச்சத்தை அறுக்க
ஆகுலம் - துன்பம்
வீரம் ஆகு மிசை - வீரத்தையுடைய பெருச்சாளியின்மீது
வருவீரற்கு - வருகின்ற வீரனாகிய விநாயகற்கு
அயில் - வேல்
வீரம் வாகு முன் நான்கு உடைய - வீரம் பொருந்திய பன்னிரண்டு தோள்களையுடைய
மேலை - வரும்காலம்
தேவி - பார்வதி
தெரிவையர்கள் - இருபத்தாறு முதல் முப்பத்தொரு வயதுடைய பெண்கள்
பொரு வீரவாகு - போரிடும் வீரவாகு
அம்புயம் - அழகிய தோள்கள்
கரவீரம் - அலரிமலர்.

## படைத்தலைவர் முதலியோர்

13. படைத்தலைவர் நூற்றெண்மர் பங்கயத்தாள் போற்றிப்
பகர்பூத வெள்ளமிரண் டாயிரவர் பதமும்
முடைத்தலையால் வணங்கியெழிற் றணிகைவரை மிசைவாழ்
முருகனருள் பெற்றவெழு முனிவர்கழல் பணிந்து
நடைத்தலைமைத் தமிழ்வேந்தர் நால்வரையு மேத்தி
நக்கீர ரருணகிரி நாதரையும் வாழ்த்தித்
தொடைத்தலைவே லவனருளா னந்தவெள்ளத் தழுந்தும்
தொண்டர்பல ரையுந்துதித்து விண்டனமும் மலமே.

## தெளிவுரை

படைத்தலைவர்களாகிய நூற்றெட்டுப் பேர்களின் தாமரைத் திருவடிகளை வணங்கி, (புகழ்ந்து) பேசப்பெறுகிற பூதவெள்ளம் இரண்டாயிரம் பேர்களுடைய பாதங்களையும் தீயவாசனையுடைய தலையால் வணங்கி அழகிய தணிகை மலைமீது வாழும் முருகன் அருள்பெற்ற ஏழு முனிவர்களுடைய கழலணிந்த பாதங்களைப் பணிந்து நல்லொழுக்கம் பொருந்திய தலைமைத் தமிழ் வேந்தர் களாகிய மாணிக்கவாசகர், திருநாவுக்கரசர், சுந்தரர், திருஞான சம்பந்தர் ஆகிய நால்வரையும் துதித்து, நக்கீரர், அருணகிரிநாதர் ஆகி யோரையும் வாழ்த்திச் செய்யுள் தொடையில் தலைமையுடைய வேலவனுடைய அருளாகிய ஆனந்த வெள்ளத்தில் மூழ்கும் தொண் டர்கள் பலரையும் துதித்து மும்மலங்களிலிருந்து நீங்குவோமாக!

## விளக்கம்

படைத்தலைவர் நூற்று எண்மர் - பூதவெள்ளத்து இறையவர் ஒரு நூற்று எண்மர். இந்நூற்றெண்மர் பெயர்களைக் கந்தபுராணத்தில் காணலாம்.

போற்றி - துதித்து

பூதம் - உயிர், பூதகணம்

வெள்ளம் - ஓர் எண்

பதமும் - பாதங்களையும்

முடைத்தலை - தீயவாசனையுள்ள தலை.

வரை - மலை

எழுமுனிவர் - தணிகைத்தலத்தில் வழிபட்டுப் பேறு பெற்ற ஏழு முனிவர்கள்

நடை - நன்னடை, நல்ஒழுக்கம்

தமிழ் வேந்தர் நால்வர் - சைவ சமயாசாரியர்கள்

'தொடைத்தலை வேலவன்' என்னும் தொடர் செய்யுள் தொடுப்பதில் தலைமையுடைய முருகன் என்னும் பொருள் கொண்டது.

விண்டனம் - நீங்கினம்

மும்மலம் - ஆணவம், கன்மம், மாயை ஆகிய மூன்று குற்றங்கள்.

# 2. அவையடக்கம்

(எண்சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்)

14. பூவேந்த ரணிநாக மணியழுத்து மரக்கும்
பொற்பணியின் பற்றாசும் புன்மையென வரையார்
சேவேந்த ரளித்ததிருத் தணிகைவரை யாரும்
செவ்வேணற் காதையொடு சேர்ந்திடுமித் திறத்தால்
நாவேந்து மிலக்கணமோ ரைந்துமறி கல்லா
நாயேன்சொல் வெற்றிசையி னடைவிருத்த மனைத்தும்
பாவேந்த ரிகழ்ந்துரையார் பயனறிந்து கொள்வார்
பாலர்புகன் மழலையிலோர் பயனுமறி குவரே.

## தெளிவுரை

உலகிலுள்ள மன்னர்கள் அணிகலனாகிய நாகமணி என்னும் அணியில் அழுத்தப்பெறும் அரக்கும் அழகிய அணியின் மூட்டு வாயில் வைக்கும் பொடியும் இழிந்தவை எனச் சொல்ல மாட்டார்கள்; இடபவேந்தராகிய சிவபெருமான் அளித்த திருத்தணிகைமலையில் எழுந்தருளியுள்ள செவ்வேளாகிய முருகன் காதையுடன் சேர்ந்திடும் தன்மையால், நாவினால் ஏந்தப்பெறும் இலக்கணம் ஓர் ஐந்தும் அறிய முடியாத நாயேன் சொல் பொருளற்ற வெறுமையான இசை நடையில் அமைந்த விருத்தப் பாடல்கள் முழுதும் பாவேந்தர்கள் இகழ்ந்து சொல்ல மாட்டார்கள்; பயனை அறிந்து கொள்வார்கள்; குழந்தைகள் சொல்லும் மழலைச் சொல்லில் ஒரு பயன் (இனிமை) உள்ளதும் அறிவார்கள்.

## விளக்கம்

பற்றாசு - ஆபரணங்களின் மூட்டுவாயில் வைக்கும் பொடி
புன்மை - இழிவு

வரையார் - நீக்கமாட்டார்கள்
சே வேந்தர் - சிவபெருமான், இடபவேந்தர்
சே - இடபம்
வெற்றிசையின் நடை - பொருளற்ற சொற்களின் இசைமட்டும் பொருந்திய நடை
பாலர்புகன் மழலை - குழந்தைகள் சொல்லும் பொருளற்ற சொல்.

''மக்கள்மெய் தீண்டல் உடற்குஇன்பம் மற்று அவர்
சொல்கேட்டல் இன்பம் செவிக்கு - (குறள் - 65)
செவிக்கு இன்பம் பயப்பதனால், ''பாலர்புகன்
மழலையிலோர் பயனுமறி குவரே'' என்றார் கந்தப்ப முனிவர்.

*(அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்)*

15. வேதமார் தணிகை வெற்பின் மேன்மையை வேதம்வல்ல
வாதரா யணன்முன்னோதும் வடமொழிக் கெதிரே யானும்
தீதிலாத் தமிழி னாலே செப்புறுந் தன்மை யோரின்
கோதிலாக் குயின்முன் னின்று கூகையுங் குழற லொக்கும்.

## தெளிவுரை

வேதங்களை ஒதித்துய்க்கும் தணிகை மலையின் உயர்வை வேதங்களில் வல்லமையுடைய வியாசர் முன்பு ஓதிய வடமொழிக்கு எதிரேயானும் தீமையில்லாத தமிழால் சொல்லுகின்ற தன்மையை ஆய்ந்தால், குற்றமில்லாத குயிலுக்கு முன்பு நின்று கோட்டான் கூவுதலை ஒக்கும்.

## விளக்கம்

ஆர்(தல்) - துய்த்தல், அனுபவித்தல்
வாதராயணன் - வியாச முனிவர்
கூகை - கோட்டான்
குழறல் - கூவுதல்

பதினெட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த தமிழ்ப்புலவர்கள் பெரும்பாலோர் வடமொழிக்கு ஏற்றமளித்து அம்மொழியை உயர் வாகக் கருதியுள்ளனர் என்பதற்கு இப்பாடல் சான்றளிக்கிறது.

வியாசர் வேதங்கள் ஓதியவர்; அவரை உயர்வாகக் கருதி னாலும், அவருடன் தம்மை ஒப்பிட்டுத் தம்புலமையைத் தாழ்ந்த தாகக் கந்தப்ப முனிவர் கருதியே, தாம் கோட்டானுக்கு ஒப்பானவ ராகவும் வியாசரைக்குயிலுக்கு ஒப்பனாவனராகவும் அவையடக்க மாகப் பாடியுள்ளார். ''தீதிலாத் தமிழ்'' என்று தமிழுக்கு ஏற்ற மளித்ததனால், தமிழ் உலகத்தவர்க்கு மற்ற எந்த மொழியையும் விட நன்மையே பயப்பது என்பதனை அறிவித்துள்ளார்.

## *3. சிறப்புப் பாயிரம்*

*(வேறு)*

16. பிரமாண்ட புராணத்திற் பிரமனா ரதமுனிக்குப்
பெட்பிற் கூறும்
வரமான வடமொழியில் விளங்கியிடுந் தணிகைவரை
மான்மி யத்தை
உரமான பூதலத்தி லுள்ள தமிழ் வாணரெலா
முணரு மாறு
திரமான செந்தமிழாற் பத்தியிற்கந் தப்பமுனி
செப்பி னானே.

### தெளிவுரை

பிரமாண்ட புராணத்தில் பிரமன் நாரத முனிவருக்கு அன்புடன் கூறிய உயர்ந்த வடமொழியில் விளங்கும் தணிகை மலை யின் மகிமையை வலிமையான உலகிலுள்ள தமிழ்வாணர்கள் எல்லாரும் உணருமாறு திரமான செந்தமிழால், (தணிகை மலை யின்பால் உள்ள) பக்தியினால் கந்தப்பமுனி சொல்லலாயினன்.

**விளக்கம்**

வரம் - உயர்ச்சி
பெட்பு - அன்பு, ஆசை
மான்மியம் - மகிமை, சரித்திரம்
கந்தப்பமுனி - கந்தப்ப ஐயர்

இந்நூலாசிரியர் வீரசைவர்; எனவே வீர சைவர்கள் இல்லறத்தாராக இருப்பினும் முனிவரெனவும் ஐயரெனவும் தேசிகர் எனவும் வழங்கப்பெறுவர்.

உரம் - வலிமை
பூதலம் - உலகம்
தமிழ்வாணர் - தமிழ்வாழ்நர், தமிழ்ப் புலமையால் வாழ்பவர்கள்.
செப்பினான் - சொன்னான்.

## 4. திருநாட்டுச் சிறப்பு

**(அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்)**

17. உலகெலாந்தொழு நீற்றுமெய் யொருவன்றா
ருகவனந் தனிலுற்றாங்
கிலகு வாரண வுரிபுனைந் திரசத
வெற்பினே குதன்மானக்
குலவு வெண்முகிற் படலைவிண் ணெறிக்கொடு
குரைகட லி[illegible]ச்சேதி
அலைவ ளங்குழிந் திடவுண்டு கருகிமீண்
டடைந்தநந் திகிரிக்கே,

## தெளிவுரை

உலகத்து உயிர்களெல்லாம் வணங்கும் திருநீறு அணிந்த உடம்பினையுடைய ஒப்பற்ற சிவபெருமான் தாருகவனம் அடைந்து, அங்குத் (முனிவர் சினங்கொண்டு யாகம் செய்து விட்ட) தனித்து வந்த யானையை வென்று அதன் தோலை உரித்துப் போர்த்துக்கொண்டு கயிலைமலைக்குச் சல்லுதல் போல, குலவுகின்ற வெண்மேகக் கூட்டங்கள் விண்ணை (ஆகாயத்தை) நெறியாகக் கொண்டு ஒலிக்கும் கடலிடத்திற்குச் சென்று; குழியடையும் படி அலைநீரை உண்டு, கருகி மீண்டும் நம் நந்தி மலைக்கே (நந்தியாற்றுப்பகுதியைக் கொண்ட தணிகை மலைக்கே) வந்து அடைந்தன.

## விளக்கம்

நீற்றுமெய் ஒருவன் - சிவபெருமான்
உற்று - அடைந்து
இலகு - கூட்டமற்றது (தனித்தது)
வாரண உரி - யானைத்தோல்
புனைந்து - போர்த்திக்கொண்டு, அணிந்து
இரசத வெற்பு - கயிலைமலை, வெள்ளிமலை
இரசதம் - வெள்ளி
ஏகுதல்மான - சென்றதைப்போல
முகிற்படலை - மேகத்தின் தொகுதி
குரைகடல் - ஒலிக்கும் கடல்
அலைவனம் - அலையையுடைய நீரை.

18. அடைந்த மாமுகி லண்ணல்கை யந்துடி
யம்பொன்மால் வரைவிற்போற்
றடிந்து கான்றுரு மார்த்துவிற் கோட்டியச்
சங்கர னருள்வெள்ளம்

படிந்த நந்திபா லாகமப் பொருளெனும்
பயமெலாம் பொழிந்தாங்குத்
தடங்கொ ணந்தியம் பொருப்பினை வளைவுறீஇச்
சரேலெனப் பொழிந்தன்றே.

## தெளிவுரை

தணிகை மலையை அடைந்த பெரியமேகங்கள் அண்ண லாகிய சிவபெருமானுடைய கையில் உள்ள உடுக்கை, அழகிய பெரிய பொன்மலையாகிய மேருமலையாகிய வில்லைப் போல், கக்கித் தடித்து இடி ஒலித்து இந்திர வில்லை வளைத்து அச்சங்கரனுடைய அருளாகிய வெள்ளம் படிந்த நந்தியாற்றினிடத்து ஆகமப் பொருள் என்னும் பயன்களை எல்லாம் பொழிந்தது போன்று பெரிய நந்தி யாகிய அழகிய மலையை வளைத்துச் சரேல் என்று மழையாகப் பெய்தது.

## விளக்கம்

துடி - உடுக்கை
பொன்மால் வரைவில் - மேருமலையாகிய வில்
தடிந்து - தடித்து, மின்னல்
கான்று - கக்கி
உரும் - இடி
ஆர்த்து - ஒலித்து
வில்கோட்டி - இந்திர வில்லை வளைத்து
தடம் - பெரிய
நந்தியம் பொருப்பு - அழகிய நந்திமலை
வளைவுறீஇ - வளைத்து

19. கூடம் விண்முக டணவிய நந்தியங்
குன்றினின் றிழிமாநீர்
ஆட கங்கரி மருப்பெறிந் தலைத்திரைத்
தரவமிக் குறுந்தோற்றம்
தேட யன்றிரு மாற்கரி தாம்பரன்
றிருமுடிப் புனல்கொன்றைத்
தோடும் வெண்பிறைத் துண்டமு மரவமுஞ்
சுலவிவீழ் தரன்மானும்

## தெளிவுரை

மலையுச்சி விண்ணின் உச்சியை நெருங்கிய அழகிய நந்தி மலையிலிருந்து வீழும் பெருகியநீர் பொன்னானது யானையின் தந்தத்தை எறிந்து அலைகள் சுருங்கி ஒலிமிகுதியடையும் காட்சி, தேடுகின்ற பிரமனுக்கும் திருமாலுக்கும் அரிதாக இருக்கும் சிவபெருமானுடைய திருமுழப் புனலாகிய கங்கையும் கொன்றை மலரும் தோடும் வெண்பிறைத்துண்டமாகிய நிலவும் பாம்பும் சுழன்று வீழ்தலை ஒத்திருக்கும்.

## விளக்கம்

கூடம் - மலையுச்சி
முகடு - உச்சி
அணவிய - கிட்டிய, நெருங்கிய
இழி - இறங்கிய, வீழ்ந்த
ஆடகம் - பொன்
அரவம் - ஒலி
அயன் - பிரமன்
அரிதாம் - அரிய பொருளாகிய
மானம் - ஒக்கும்
சுலவி - சுழன்று

20 செருக்கி யீசனு நிகரிலென் றார்த்திடுந்
தேவர்தஞ் செருக்கெல்லாம்
அரக்க ராலழித் தடக்கியு மவர்பினு
மச்செருக் குறுமாபோல்
தரைக்கண் யாவரு முவர்த்திடு சலதிநீர்
தனை முகந் துவர்நீக்கிப்
பெருத்த மாமுகில் விடுப்பவு மப்புனல்
பெருங்கடல் புகுந்தன்றே.

## தெளிவுரை

செருக்கடைந்து சிவபெருமானும் தங்களுக்கு ஈடில்லை என்று ஆரவாரம் செய்திடும் தேவர்களின் செருக்கு அனைத்தையும் அரக்கர்கள் வாயிலாக அழித்து அடக்கியும், அத்தேவர்களுக்குப் பிறக்கும அந்தச் செருக்கு அடைவது போல் உலகில் யாவரும் வெறுக்கும் கடல்நீரை முகந்து உப்புத்தன்மையை நீக்கிப் பெருத்த மாமேகங்கள் மழையாகப் பொழியவும், அந்நீர் பெரியகடலில் புகுந்தது.

## விளக்கம்

நிகர் இல் என்று - தமக்கு ஒப்பில்லை என்று
ஆர்த்திடும் - ஆரவாரம் செய்யும்
தரை - உலகம்
உவர்த்திடும் - வெறுக்கும்
சலதிநீர் - கடல் நீர்
உவர் - உப்புத் தன்மையை
உறுமாபோல் - அடைவதைப்போல்
புகுந்தன்று - புகுந்தது.

21. கங்கை மாநதிக் கொருபதி மானிடக்
கவினுருக் குருவாய்வந்
தங்கண் மாநிலத் தடியர்வல் வினையறுத்
தருட்பெருக் குடன்கொண்டே
தங்கு தன்னிடஞ் சேர்ந்தென முகில்பொழி
சலதிநீர்ப் பெருவெள்ளம்
சங்கு லாவிய தடங்கரை யுடைத்ததிற்
சார்புனல் கொடுபோமால்.

## தெளிவுரை

கங்கையாகிய மாநதிக்கு ஒப்பற்ற தலைவராகிய சிவபிரான் மனிதராக அழகிய வடிவத்தில் குருவாக வந்து அங்கு உலகத்திலுள்ள அடியார்களின் தீவினைகளை அறுத்து அருள் பெருக்குடன் சேர்ந்தார் என்னும்படி, மேகங்கள் பொழிந்த கடல்நீர்ப் பெருவெள்ளம் சங்குகள் நடமாடிய பெரிய குளக்கரையை உடைத்துக் கொண்டு அதில் சாரும் நீரைக் கொண்டுபோகும்.

## விளக்கம்

பதி - சிவபிரான்
மாநிலம் - உலகம்
வல்வினை - தீயவினை
சலதிநீர் - கடல்நீர்
தடங்கரை - தடாகங்களின் கரை
கொடுபோம் - கொண்டு போகும்
'ஆல்' - அசைநிலை.

22. மாத வம்புரி நந்திமால் வரைமிசை
வசிட்டன்மாட் டுறுந்தேனு
நீதி பெற்றிடு தொண்டை நாட் டவரெனு
நிலைத்தகன் றினமுண்டு

போத முற்றுயர் கதியடை தரப்பயம்
பொழிந்தநீர் மையினாலே
ஏத மற்றிடு முலகெலாம் பானதி
யெனப்பெயர் புனைந்தன்றே.

## தெளிவுரை

மாதவம் செய்யும் நந்தியாகிய பெரிய மலையின் மீது வசிட்ட முனிவரிடம் அடைந்த காமதேனுவுக்கு நீதிபெறும் தொண்டை நாட்டினர் என்னும் நிலைபெற்ற பல கன்றுகள் உண்டு; அறிவுரைகள் அடைந்து உயரிய வீடுபேறு அடைதற்கு வழங்கும் பாலாகிய பயனைப் பொழிந்த தன்மையினால் துன்பம் அடைந்திடும் உலகம் முற்றிலும் பால்நதி எனப்பெயர் சூட்டப்பெற்றது.

## விளக்கம்

நந்திமால்வரை - உயர்ந்த நந்திமலை
வசிட்டன் மாட்டு உறும் - வசிட்டனிடம் அடைந்த
தேனு - காமதேனு
கதி - அடைக்கலம், ஆதரவு, வீடுபேறு
பயம் - பால், நீர்
நீர்மை - தன்மை
ஏதம் - துன்பம்

23. தனைய ளித்திடு தீமைசெய் தாதையைத்
தாளற வேமாய்த்துத்
தனைய ளித்திடு பரமன்றாள் சேர்த்திடுந்
தண்டிதன் செயலேபோல்
தனைய ளித்திடு தேயுவை யுலகினிற்
றங்கிடா தறமாய்த்துத்
தனைய ளித்திடு மந்தணர் வேள்வியஞ்
சாலை சேர்த்தியதந்நீர்

## தெளிவுரை

தன்னை ஈன்ற தீமைபுரியும் தந்தையாகிய எச்சதத்தரை முயற்சி அறுமாறு கொன்று, தன்னைக் காத்தருளும் சிவபெருமான் திருவடிகளில் சேர்த்த சண்டேசநாயனாரின் செயலைப் போல் தன்னைத்தோற்றுவித்த தீயை உலகில் தங்காமல் அறவே அழித்துத் தன்னை அளித்த அந்தணர்களுடைய அழகிய வேள்விச்சாலையில் அந்நீர் சேர்த்தது.

## விளக்கம்

தாதை - எச்சதத்தர்
தாள் - முயற்சி
தண்டி - சண்டேச நாயனார்
தேயு - அக்கினி

'தனையளித்திடு தேயுவை' என்னும் தொடர், தீயானது நீரைத்தோற்றுவித்தது என்னும் உண்மையைப் புலப்படுத்துகிறது.

'அளித்திடு' என்னும் சொற்கள், 'பெற்றெடுத்த', 'அருள் செய்யும்,' 'தோற்றுவித்த,' 'அளித்த' என்னும் பொருள்களில் முறையே வந்துள்ளன.

24. கோடையென்னுமோர் கொடுந்தொழிற் பகைவனாற்
கொதிக்குமுட் டினநீத்துக்
காடுங் குன்றமு மருதமு நெய்தலுங்
கற்சுரங் களுநீராய்
மேடும் பள்ளமு மறிகலா தெங்கணும்
வெள்ளமா யுலவிற்றால்
பீடு சால்பெரு நீர்மையைச் சார்ந்திடப்
பெற்றிடி னரிதேயோ.

## தெளிவுரை

கோடை என்னும் ஒரு கொடிய தொழிலைக் கொண்ட பகைவனால் கொதிக்கும் வெப்பம் நீங்கிக் காடுகளும் மலைகளும் மருதநிலங்களும் நெய்தல் நிலங்களும் கற்கள் உடைய பாலை நிலங்களும் நீராகி மேடும் பள்ளமும் அறிய முடியாது, எங்கும் வெள்ளமாக உலவியது; பெருமை அமைந்த பெரிய நீரைக்கொண்ட மேகத்தைச்சார்ந்திருக்கப் பெறின் அரிதோ. (அரிதில்லை; எளிது).

## விளக்கம்

உட்டினம் - உஷ்ணம், வெப்பம்
கல்சுரங்கள் - கற்களையுடைய பாலை நிலங்கள்
'ஆல்' அசை
பீடு - பெருமை
பெருநீர்மையை - பெரிய நீரைக்கொண்ட மேகத்தை
மை - மேகம்.

25. சங்க மேவுறு திகிரிசெம் பொன்மணி
தயங்கவான் முடிமேவி
மங்குல் சூழ்தரு நந்திமால் வரையெனு
மாயவன் புவிமீதிற்
றங்கு மாரரு ளொழுக்கென வருவியிற்
றந்துதண் டகநாட்டைப்
பொங்கு பாலியைப் பாலியென் றேவியே
பொற்பின்வை குறுமாதோ

## தெளிவுரை

கூட்டமாகப் பொருந்திய மூங்கில் சிவந்த பொன் என்னும் உலோகம்போல் ஒளி செய்ய வானத்தின் உச்சியில் பொருந்தப்பெற்று

மேகங்கள் சூழப்பெற்ற நந்திமால்வரை (நந்தி என்னும் பெரிய மலை) என்னும் திருமால் உலகில் தங்கும் நிறைந்த அருள் ஒழுக்கு என்னும்படி அருவியில் தந்தருளித் தண்டகநாட்டைக் காப்பாற்று (பாலி) என்று பொங்குகின்ற பாலாற்றை ஏவ அது தங்கியிருக்கும்.

## விளக்கம்

சங்கம் - கூட்டம், சங்கம்
மேவுறும் - பொருந்திய
ஏவுறும் - ஏவுகின்ற
திகிரி - மூங்கில், சக்கரம்
மாயவன் - திருமால்
செம்பொன் - சிவந்த பொன் என்னும் உலோகம், திருமகள்.
மணி - மாணிக்கம், கௌஸ்துபமணி
வான் முடிமேவி - ஆகாயத்தின் உச்சியைப் பொருந்தப்பெற்று
பாலி - காப்பாற்று, பாலாறு

நந்திமலைக்கும் திருமாலுக்கும் சிலேடையாக இப்பாடல் அமைந்துள்ளது.

26. தொண்டை நாட்டுறு மன்பதை யெனப்பெறு
தொகையறு சிறாரெல்லாம்
உண்டு வாழ்தரப் புவியெனுந் தாய்முலை
யொழுக்குபா லாறாகி
மண்டி வந்திடு செயலென நந்திமால்
வரைச்சிக ரியினின்று
விண்டி டாதிழி யருவிபா லாறெனும்
வெள்ளமிக் கெழுந்தன்றே

## தெளிவுரை

தொண்டை நாட்டிலுள்ள மக்கள் கூட்டம் என்று சொல்லப் பெறும் எண்ணற்ற சிறுவர்கள் எல்லாரும் உண்டு வாழ்தற்கு உலகம்

என்னும் தாயின் முலை ஒழுக்குப் பாலாறாகி நிறைந்து வரும் செயல் என்னும்படி நந்திமால்வரை என்னும் சிகரத்தினின்றும் நீங்காமல் இறங்கிவரும் அருவி பாலாறு என்னும் வெள்ளம் மிகுந்து எழுந்தது.

## விளக்கம்

மன்பதை - மக்கள் கூட்டம்
சிறார்கள் - சிறுவர்கள்
விண்டிடாது - நீங்காது
எழுந்தன்று - எழுந்தது

'புவியெனுந் தாய் முலை யொழுக்குபாலாறாகி'' என்னும் தொடர் கம்பராமாயணத்தில் ஆற்றுப்படலத்தில் அமைந்துள்ள, ''சரயுவென்பது தாய்முலை யன்னது'' என்னும் தொடரைப் பின்பற்றி அமைந்துள்ளது.

27. வார ணத்தினி கோட்டையுங் கோட்டுறு
மணியையு நனிவாரிக்
கார கிற்பரா ரைக்கொமு நறுந்துணி
கையலைத் துயர் சந்தின்
வேர றப்பறித் தணிகொள்பச் சிலைமுதல்
வீசிமிக் கீர்த்தோடிப்
பார திக்கட லெதிர்கொளப் புகுந்தது
பாலிமா நதிமாதோ.

## தெளிவுரை

யானையின் திண்மையான தந்தங்களையும் அத்தந்தங்களில் பொருந்தியுள்ள முத்துக்களையும் மிகுதியாக வாரிக்கொண்டு, கரிய அகில்மரங்களின் அடிகளையுடைய நறுமணம் பொருந்திய துண்டங் களைப் பக்கங்களில் அலைகளில் மிதக்கச் செய்து, உயரிய சந்தன

மரங்களின் வேர்களை அறும்படிப் பறித்து அழகுடைய பச்சிலை என்னும் மரங்களை வீசி மிகுதியாக இழுத்துக் கொண்டு ஓடித் தோணிகளையுடைய கடல் எதிர்கொண்டு வரவேற்குமாறு பாலாறு என்னும் மாநதி புகுந்தது.

### விளக்கம்

வாரணம் - யானை
திணி - திண்மை
கோட்டுறும்மணி - யானைத் தந்தத்தில் பொருந்திய முத்து
கை - பக்கம், வரிசை
நனி - மிகுதியாக
கார் - கரிய
பராரை - பருத்த அடியினையுடைய
துணி - துண்டம்
சந்தின் - சந்தன மரத்தின்
பச்சிலை முதல் - பச்சிலை என்னும் மரம்
பாரதிக்கடல் - தோணிகளையுடைய கடல்.

28. கொடிபி டித்துவா ரணம்பரி மாவுடன்
குலவிய காலாளும்
புடைய டுத்திர தம்படைத் தம்புவிற்
பூட்டிமுப் புரம் வாழும்
கொடிய தானவக் கடன்மிசை யெம்பிரான்
குறுகுறுந் திறமேபோல்
நெடிய மைக்கடன் மிசைக்கடி தோடிற்று
நீள்பெரும் புனற்பாலி

### தெளிவுரை

கொடியைப்பிடித்து யானைகள், குதிரைகள் ஆகியவற்றுடன் உலவிய காலாட்களும் பக்கத்தில் அடுத்துத் தேர்கள் படைத்து

அம்பை வில்லில் பூட்டி முப்புரம் வாழ்கின்ற கொடிய அரக்கர்களின் கடலின்மீது எம்பிரானாகிய முருகப்பிரான் அணுகி அடையுந் திறனைப் போல் நீண்ட கரியகடலின்மீது நீண்ட பெரிய பாலியாறு விரைந்து ஓடிற்று.

## விளக்கம்

கொடி - பச்சிலைக்கொடிகள், கொடிகள்
வாரணம் - சங்கு, யானை
பரிமா - பரிக்கின்ற மாமரங்கள், குதிரைகள்
காலாளும் புடையடுத்து - வாய்க்கால்கள் ஆட்சிபெற்ற பக்கத்திலே அமைந்து, காலாட்கள் அருகிலே அடுத்து.
இரதம் - சுவையாகிய குணத்தை, தேர்
தானவக்கடன்மிசை - அரக்கர்களுடைய கடலின் மீது
குறுகுஉறும் - அணுகி அடையும்
மைக்கடல் - கரியகடல்
இப்பாடல் பாலியாற்றுக்கும் சிவபெருமானுக்கும் சிலேடை

29. நந்தி நெற்றியி னுதித்தடி தாழ்ந்தெழூஉ
நவிறரு விடை பெற்றுச்
சந்த மார்தரு பாரிடங் கலந்துமா
மன்றலை யறச்சாய்த்து
முந்த வேயழல் வளர்த்திடு மகத்தையு
முருக்கிடுஞ் செயறன்னால்
அந்த வீரபத் திரனையு நிகர்த்ததவ்
வகன்புனற் கெழும்பாலி

## தெளிவுரை

நந்திமலையின் உச்சியில் உதித்துத் திருவடிகளில் வணங்கி எழுந்து புகழ்ந்து கூறுதற்கு அரிய காளைகளைப் பெற்று அழகு

நிறைந்த உலகைச் சென்றடைந்து மாமனாகிய தக்கனது தலைகளை அறுத்துச் சாய்த்து முன்னதாகத் தீமூட்டப்பெற்று வளர்த்த யாகத்தை யும் அழித்த செயலால், செழுமையான பாலியாறு அந்த வீரபத்தி ரனையும் நிகர்த்ததாக விளங்கியது.

## விளக்கம்

நந்திநெற்றியின் - நந்திமலையின் உச்சியில், பரமசிவனுடைய நெற்றியில்
விடை - காளைகள், உத்தரவு
சந்தம் - அழகு
பாரிடம் - உலகு
மாமன்தலை - மாமரத்தின் நிலைபெற்ற தலைகளை, மாமனாகிய தக்கனது தலைகளை
அழல் - தீ
மகம் - யாகம்
அகம் - வீடு
முருக்கிடும் - கொல்லும், அழிக்கும்
நிகர்த்தது - நிகரானது, ஈடானது

30. வான யானையுங் கானக மானையு
மணந்துமா மயிலூர்ந்து
தான கந்தமா தனத்தையுங் கைக்கொடு
சார்ந்தகூ ரலைவாட்டி
ஏனை வெற்பையுந் தாக்கி வெள் வேல்பிடித்
தெய்திடு மெழிலாலத்
தேனி சைத்ததார்க் கடம்பணி மார்பனைச்
சிவனுமத் திருப்பாலி.

## தெளிவுரை

வானயானையாகிய தெய்வயானை ம்மையையும் கானகயானை யாகிய வள்ளி நாயகியையும் திருமணம் செய்து கொண்டு

மாட்சிமைபொருந்திய மயிலில் ஊர்ந்து, பல இடங்களிலுமுள்ள கிழங்குகளையும் பெரிய பொன்னையும் கைக்கொண்டு, சூரனை அலைகடலிலே வாட்டிப் பிற மலைகளையும் தாக்கி வெள்ளிய வேலைப் பிடித்து, மலர்ந்த பூக்களையடைந்திடும் தேனீக்கள் இசைக்கும் கடம்பமாலை அணிந்த மார்பனாகிய முருகனை அழகிய பாலியாறு ஒத்திருக்கும்.

## விளக்கம்

வானயானை - பெருமையுடைய யானைகள், தெய்வ யானையம்மை
கானகமான் - காட்டிலுள்ள மான், வள்ளியம்மை
மாமயில் - பெரிய மயில், மாட்சிமையுடைய மயில்.
மாமயில் ஊர்ந்து - பெரிய மயிலை வாகனமாகக் கொண்டு ஊர்ந்து.
கந்தமாதனம் - கிழங்குகளையும் பெரிய பொன்னையும், கந்தமாதனம் என்னும் மலை.
சூரலைவாட்டி - பிரம்புகளை வாட்டி, சூரனைக் கடலிலே வாட்டி
ஏனை வெற்பு - மற்ற மலைகள், கிரௌஞ்சமலை
வெள்வேல் - வெள்ளிய வேலமரங்கள், வெள்ளிய வேலாயுதம்
சிவணும் - ஒக்கும்

31. வச்சி ரங்கொடு தவளவா ரணமிசை
மருவிவான் றருமன்னி
இச்சை மீயுமான் மணிநிதி படைத்தொரா
யிரங்கணும் ப ரந்தேகி
அச்சு றுத்துகார் வரைச்சிறை யனைத்தையு
மரிந்திடு மியல்பாலே
மைச்செ லுத்திடு புரந்தர னாகியும்
வயங்குமத் தீப்பாலி.

## தெளிவுரை

வச்சிராயுதம் கொண்டு, வெள்ளையானையின்மீது பொருந்தி, கற்பகத்தரு நிலைக்கப்பெற்று, விரும்பியதைக் கொடுக்கும் காம

தேனு, சிந்தாமணியையும் பிற நிதிகளையும் படைத்து ஓராயிரம் கண்கள் உடலில் பரவப் பெற்று, அச்சுறுத்துகின்ற கரிய மலைகளின் இறக்கைகள் எல்லாவற்றையும் சென்று அரியும் தன்மையினால், மேகத்தை வாகனமாகச் செலுத்தும் இந்திரனாகவும் அந்த இனிய பாலியாறு விளங்குகிறது.

## விளக்கம்

வச்சிரம் - வச்சிராயுதம், சதுரக்கள்ளி
தவளவாரணம் - வெள்ளையானை, வெள்ளிய சங்குகள்
மருவி - பொருந்தி, மேவப்பெற்று
வான்தரு - கற்பகத்தரு, பெரிய மரங்கள்
மன்னி - நிலைபெற்று
இச்சை ஈயுமான் - விருப்பத்தைக் கொடுக்கும் மான்
இச்சை ஈயும் + ஆன் - விரும்பியன கொடுக்கும் காமதேனு.
கணும் - கண்களும்
மணிநிதிபடைத்து - மாணிக்கமும் பொன்னும் படைத்து, சிந்தாமணியையும் மற்ற நிதிகளையும் படைத்து.
கார்வரைச் சிறை - கரிய மலைச் சிறகுகள்
வரைச்சிறை - மலை போன்ற அணைகள்
மை - மேகம்
புரந்தரன் - இந்திரன்
வயங்கும் - விளங்கும்

இப்பாடல் பாலாற்றுக்கும் இந்திரனுக்கும் சிலேடையாக அமைந்துள்ளது.

32. கொண்டலாடிய நந்தியம் பெயர்புனை
குன்றினின் றெழும்பானீர்
தொண்டை நாடெனுந் தொண்டைவாய் மடுத்தலை
சுருட்டிய கடலென்னும்

பண்டி யாரவுண் டம்புவி யெனுமகள்
பல்வளங் களும்பெற்றுக்
கண்ட மாந்தர்தங் கண்களி கூர்தரக்
களிப்பின்வீற் றிருந்தாளே.

## தெளிவுரை

(உச்சியில்) மேகங்கள் ஆடப்பெற்ற நந்தி என்னும் அழகிய பெயர் அணிந்த மலையிலிருந்து எழுகின்ற பால்போன்ற நீர், தொண்டை நாடு என்னும் தொண்டைக்கனி போன்ற வாயால் உண்ணப்பெற்று, அலைகள் சுருளப்பெற்ற கடல் என்னும் வயிறு நிறைய உண்டு, அழகிய உலகம் என்னும் நிலமடந்தை பல வளங்களும் பெற்றுக் கண்ணுற்ற மக்களின் கண்கள் மிகுந்த களிப்பு அடையும்படிக் களிப்புடன் வீற்றிருந்தனள்.

## விளக்கம்

கொண்டல் - மேகம்
பானீர் - பால்போன்ற நீர்
தொண்டைவாய் மடுத்து - தொண்டைக்கனி போன்ற வாயால் உண்டு
பண்டி ஆர உண்டு - வயிறு நிறைய உண்டு
புவி எனும் மகள் - நிலமென்னும் மடந்தை
களிகூர்தர - களிப்பு மிகுதியாக அடையும்படி

(கலி விருத்தம்)

33. மால்க ளோடிய வண்புல வோர்மனம்
நூல்க ளோடிய நுண்பொரு டேர்தல்போற்
சேல்க ளோடிய தீம்புனற் பாலிபல்
கால்க ளோடிக் கழனியிற் பாயுமால்

## தெளிவுரை

மயக்கங்கள் நீங்கிய வளமான புலவர்களின் மனம் நூல்களில் அமைந்த நுண்ணிய பொருள்களை ஆய்தல்போல் சேல்மீன்கள் ஓடுகின்ற இனிய நீரைக் கொண்ட பாலாறு பல வாய்க்கால்களில் ஓடிக் கழனிகளில் பாய்கின்றது.

## விளக்கம்

மால்கள் ஓடிய - மயக்கங்கள் நீங்கிய
வண்புலவோர் - வளமான புலவர்கள்
நூல்கள் ஓடிய - நூல்களில் அமைந்த
தேர்தல் - ஆராய்தல்
சேல்கள் - சேல்மீன்கள்
கால்கள் - வாய்க்கால்கள்

34. பாயு நீர்ச்செழும் பண்ணையிற் பண்ணையாய்த்
தோயு மள்ளர் தொகையில ராகிவந்
தாயுங் கங்கை யணைத்தொழுங் காக்கிப்புல்
மேயும் பல்பகட் டேர்த்தொழின் மேயினார்.

## தெளிவுரை

பாயும் நீரைக்கொண்ட வளமான வயல்களில் கூட்டமாகக் கூடும் உழவர்கள் எண்ணற்றவர்களாக வந்து, ஆராயும் வரம்புகளின் பக்கங்களை அணைத்து ஒழுங்காக அமைத்துப் புற்களை மேயும் பல எருமைக் கடாக்களும் எருதுகளும் உடைய உழவுத்தொழிலைப் பொருந்தினர்

## விளக்கம்

செழும்பண்ணையில் - வளமான வயல்களில்
பண்ணையாய் கூட்டமாகி
கங்கின் - வரம்பின் பக்கத்தை
பல்பகட்டு ஏர்த்தொழில் - பல எருமைக்கடாக்களும் எருதுகளும் உடைய உழுதொழில்
மேயினார் - பொருந்தினர்.

35. நீர டைத்திடு நீள்பெருங் கவ்வையும்
ஏரு கைக்கு மிளைஞர்கள் சும்மையும்
ஆர நென்முளை வித்து மரவமும்
கார டக்கிக் கடலொலி யாற்றுமால்

## தெளிவுரை

நீர் அடைக்கின்ற நீண்ட பெரிய ஒலியும் ஏரைச் செலுத்தும் இளைஞர்கள் எழுப்பும் ஒலியும் நிரம்ப நெல் முளைகளை விதைக்கும்போது கூவும் ஒலியும் மேகங்களின் முழக்கத்தையும் அடக்கிக் கடல் ஒலியையும் தணிக்கும்.

## விளக்கம்

கவ்வை, சும்மை, அரவம் } - ஒலி
கார் - மேகமுழக்கம்
ஏர் உகைக்கும் - ஏரைச் செலுத்தும்
ஆற்றும் - தணிக்கும்.

36. பார்ம கட்கிடு பாடகம் பொற்சிலம்
பீர்ம லர்த்தொடை யேந்து மதாணிபோல்
நீர்வ யற்கு ணிறைத்து நெடும்பகட்
டேர்பி டித்துழு வார்மள்ள ரெங்குமே.

## தெளிவுரை

நிலமகளுக்கு இடுகின்ற பாடகம், பொன்சிலம்பு, ஈரம் பொருந்திய மலர்மாலை ஆகியவற்றை ஏந்துகின்ற பதக்கம் போல், நீரை வயலுக்குள் நிறைத்து (பாய்ச்சி) உழவர்கள், உயர்ந்த எருமை களையும் ஏரைப் பிடித்து உழுவார்கள்.

## விளக்கம்

பார்மகள் - நிலமகள்
பாடகம், சிலம்பு - காலணிகள்
ஈர்மலர்த்தொடை - ஈரமுள்ள மலர் மாலை
மதாணி - ஆபரணம், பதக்கம்
பகட்டு - இறுமாப்பு
பகடு - எருமை, எருது

37. மன்ன லம்பகட் டைமள்ளர் கட்டியேர்
துன்ன லம்பக வாக்கிடுஞ் சூல்வளை
இன்ன லம்பகத் தெய்திச் சொரிமணி
கன்ன லம்பக முத்தொடுங் காந்துமே

## தெளிவுரை

நிலைபெறுதலையுடைய அழகிய எருதுகளை உழவர்கள் ஏரில் பூட்டி நெருங்கிய கலப்பையால் பிளவுகள் செய்யப்படும்; சூல்

கொண்ட சங்குதுன்பத்தை நீரில் அடைந்து சொரிகின்ற முத்துக்கள் கரும்பிலிருந்தும் அழகிய கொக்கினிடத்திலும் தோன்றும் முத்துக் களோடும் ஒளி வீசுவனவாகும்.

## விளக்கம்

மன்னல் அம் பகட்டை - நிலைபெறுதலையுடைய அழகிய எருதுகளை
ஏர்கட்டி - ஏரில் பூட்டி
துன்னல் அம்பகவு ஆக்கிடும் - நெருங்கிய கலப்பையால் பிளவுகள் செய்யப்படும்;
வளை இன்னலை அம்பு அகத்து எய்தி:
வளை - சங்கு
இன்னல் - துன்பம்
அம்பு - நீர்
கன்னல் - கரும்பு
பகம் - கொக்கு
காந்தும் - ஒளிவீசும்

38. மூன்று கண்ணுடைச் சட்டகமொய்விதை
மூன்று கண்ணுடை மூங்கிற் புழையிழீஇ
மூன்று கண்ணல முன்கொழு வாய்விழல்
மூன்று கண்ணன்செய் முத்தொழிலாகுமே.

## தெளிவுரை

மூன்ற கண்களை உடைய (விதையை இடும் குழிந்த கருவியாகிய) சட்டகத்தில் மொய்த்த விதைகள் மூன்று கணுக்களை உடைய மூங்கில் புழையில் இறங்கி முன்மழுவின் இடத்தில் விழுதல் மூன்று கண்களல்ல (துளைகளல்ல) அவை மூன்று கண்களையுடைய சிவபெருமான் செய்கின்ற படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களாகும்.

## விளக்கம்

மூன்று கண் - மூன்று துளைகள்
சட்டகம் மொய்விதை - விதையை இடும் குழிந்த கருவியில் மொய்த்த விதைகள்
புழை - துவாரம்
முன்கொழு - முன்மழு (காறு)

39. மட்ட ருந்திய மல்லர்கள் முன்முளைத்
திட்ட நாறு பறித்தெறி யும்முடி
நட்ட தங்குல நாரியர் பாற்படும்
பட்டம் யாவும் பறிப்பர் குதிப்பரே

## தெளிவுரை

கள்ளை அருந்திய உழவர்கள் முன்னர் முளைத்த நாற்று களைப் பறித்து எறியும் உச்சியில் முடி அமைத்த தங்கள் குலப் பெண்கள் இடத்தில் படுகின்ற வயலின் பிரிவுகள் எல்லாவற்றி லும் குதித்தாடுவார்கள்.

## விளக்கம்

மட்டு - கள்
நாறு - நாற்று
முடிநட்ட - உச்சி முடி அமைத்த
நாரியர் - பெண்கள்
பட்டம் - வயலின் பிரிவுகள்
பறிப்பவர் - பறிப்பவர் மள்ளர்கள்
நட்ட - பண்ணிய

40. விரக தத்திரு மென்கட் கடைசியர்
கரக தத்தொடு நட்ட கரும்பயிர்
மரக தக்கதிர் வாய்ந்து சுடரவன்
துரக தத்தெதிர் துன்னி வளர்ந்தவே.

## தெளிவுரை

காமமாகிய ஆபத்தை உண்டாக்கும் இருமென்மையான கண்களை உடைய மருத நிலப்பெண்கள் கைகளின் வேகத்தால் நட்ட பெருமையுள்ள பயிர் மரகதம் போன்ற கதிர்கள் வாய்க்கப்பெற்றுக் கதிரவனுடைய பச்சைநிறக் குதிரைகளின் வேகத்தை யொத்து நெருங்கி வளர்ந்தன.

## விளக்கம்

விரகதத்து இருமென்கண் - காமமாகிய ஆபத்தை விளைவிக்கும் இரண்டு மென்மையான கண்கள்
கடைசியர் - மருத நிலப்பெண்கள்
கரகதத்தொடு - கைகளின் வேகத்தால்
துரகதம் - குதிரைகளின் வேகம்
எதிர் - ஒப்பு, முரண்
கரும்பயிர் - பெருமையுள்ள பயிர்.

(கலி நிலைத்துறை)

41. களைய ருந்திய மள்ளர்நுங் கனியிதழ் முகங்கண்
களைய ரும்பகை நீர்நடுங் கரும்பயிர் தமக்கும்
களைய ரும்பகை யெனக்குமு தங்கஞ்சங் காவி
களைய ரும்புபூ விலையுடன் கடைசியர் கட்டார்.

## தெளிவுரை

கள்ளை அருந்திய உழவர்கள், உங்களுடைய கனிபோன்ற இதழ், முகம், கண் ஆகியவற்றிற்கும் நீர் நட்ட வலிமையான பயிர்களுக்கும் களைவதற்கு அரிய பகை எனக் குமுதம், தாமரை, காவி (நீலோற்பலமலர்) ஆகியவற்றை அரும்பு, பூ, இலை ஆகியவற்றுடன் மருதநிலப் பெண்கள் கட்டமாட்டார்கள்.

## விளக்கம்

இப்பாடலில், இதழுக்குக் குமுதமும், முகத்திற்குத் தாமரை மலரும், கண்ணுக்குக் காவியும் உவமைகளாக வந்துள்ளன.

களை - கள்ளை
மள்ளர் - உழவர்கள்
கனி இதழ் - கனிபோன்ற இதழ்
களையரும்பகை - களைவதற்கு அரியபகை
கரும்பயிர் - வலிமையான பயிர்
குமுதம் - அல்லிமலர்
கஞ்சம் - தாமரை மலர்
காவி - நீலோற்பல மலர்
கடைசியர் - மருத நிலப்பெண்கள்

42. மழவ ராலுகள் பண்ணையிற் செந்நெல்வா னோங்கிச்
செழிய வோரிலை புடைவளைஇச் செழுங்கதிர் நிமிர்தல்
தழுவு பூம்புனிற் றிளங்குலை தாழ்ந்திட வதனோ
டெழுதனிச்சுரு ளிலைக்குருத் தரம்பைக ளேய்க்கும்.

## தெளிவுரை

இளம்வரால் மீன்கள் பாயும் வயல்களில் செந்நெல் வானளாவிச் செழிப்புடைய ஓர் இலை பக்கத்தில் வளைந்து செழுமையான

கதிர் நிமிர்ந்திருத்தல், தழுவுகின்ற அழகிய புனிற்று இளம் குலை தாழ்ந்திருக்க, அதனோனடு எழுகின்ற தனிச் சுருள் இலைக்குருத்து வாழைகளை ஒத்திருக்கும்.

## விளக்கம்

மழவரல் - இளைய வரால்மீன்
செழிய - 'செழுவிய' என்பதன் திரிவு - செழிப்படைந்த
புடை - பக்கத்தில்
வளைஇ - வளைந்து
அரம்பைகள் - வாழைகள்

43. சுருக்க முற்றிடும் போதுயர் வடைதலுந் தொலைவில்
பெருக்க முற்றிடிற் பணிதலு மறனெனப் பேசும்
நெருக்கு செந்நெல்கள் வல்சிமுற்றாமுன்மே னிமிர்ந்து
பருத்த வல்சியும் படைத்து நேர் பழுத்தலும் பணிந்து

## தெளிவுரை

செல்வம் சுருங்கியபோது உயர்வு அடைதலும், அழிவு இல்லாத பெருஞ்செல்வம் அடைந்திட்டால் பணிவுடன் இருத்தலும், நெருக்கமாக உள்ள செந்நெல்கள் அரிசி முற்றாததற்கு முன்பு மேலே நிமிர்ந்தும், பருத்த அரிசியும் உருப்பெற்றதும் எழுச்சியுற்று அழுத்தியதும் பணிந்து அறம் என்று பேசும்.

## விளக்கம்

சுருக்கம் - செல்வச்சுருக்கம், ஏழ்மை,
உயர்வடைதல் - பெருமிதமுடன் இருத்தல்
நெருக்கு செந்நெல்கள் - நெருங்கி வளர்ந்த செந்நெல்கள்

வல்சி - அரிசி
படைத்து - உருவாகி
நேர்பு - எழுச்சி, நீளம்.

44. வள்ளங் கொண்டகண் மடுத்திடு மள்ளரு மதர்த்துக்
கள்ளங் கொண்டகட் கடைசியர் குழாமுநெற் கதிரைப்
புள்ளங் கொண்டரிந் தரிசுமை யாக்கொடு போந்து
வெள்ளங் கொண்ட விண்ணுரிஞ்சுபோர் வரைகளின் வேய்வார்.

## தெளிவுரை

கிண்ணம் கொண்டு கள்ளை உண்ணும் உழவர்களும், களித்துக் கள்ளம் படைத்த கண்களைக் கொண்ட மருதநிலப் பெண்களின் கூட்டமும் நெற்கதிர்களை அரிவாள்களைக்கொண்டு, அரிந்தவற்றைச்சுமைகளாக்கிக் கொண்டு சென்று வெள்ளம் என்னும் அளவுக்குத் தொலைவைக் கொண்ட ஆகாயத்தையே உரிஞ்சும் நெற்போர்களை மலைகளைப்போல் வேய்வார்கள்.

## விளக்கம்

வள்ளம் - கிண்ணம்
மடுத்திடும் - உண்ணும்
மள்ளரும் - உழவர்களும்
மதர்த்து - களித்து
கடைசியர் - மருத நிலப்பெண்கள்
குழாமும் - கூட்டமும்
புள்ளம் கொண்டு - அரிவாளைக் கொண்டு
விண்உரிஞ்சுபோர் - விண்ணை உரிஞ்சும்படி உயர்ந்த நெற்போர்
வரைகளின் வேய்வார் - மலைகளைப் போல் வேய்வார்கள்.

45. நீனி றத்தசெங் கட்கய வாய்நெறி மருப்பின்
மான லப்பகட் டினங்களாற் றெழித்துவை மாற்றி
ஈன முற்றிடு பொங்கழிப் பதடிமாற் றியபின்
பானி றத்தநெல் பற்பல வறங்களிற் பகுப்பார்.

## தெளிவுரை

நீலநிறத்தனவாயும் செங்கண்களுடன் ஆழமான வாயும் நெறியான கொம்புகளும் கொண்ட விலங்கின் நலமுடைய எருமைக் கடாக்களின் தொகுதிகளால் மிதிப்பித்து வைக்கோலை மாற்றி, இழிவடைந்த தூற்றாத பதர்களை மாற்றியபிறகு பால் நிறமுடைய நெல்லைப் பற்பல அறங்களுக்காகப் பகுத்து அளிப்பர்.

## விளக்கம்

கயவாய் - ஆழமானவாய்
பகடு இனங்கள் - எருமைக்கடாக்களின் தொகுதி
தெழித்து - மிதிப்பித்து
வை - வைக்கோல்
பொங்கழி - தூற்றாத
பதடி - பதர்
அறங்களிற்பகுப்பார் - அறங்களின்படி பகுத்தளிப்பர்.

'பற்பல அறங்களில் பகுப்பார்' என்னும் தொடர், அரசனுக் குரிய பகுதியையும், உற்றவர்கள், சுற்றத்தினர், தெய்வம், விருந்தினர் ஆகியவர்கட்குரிய பகுதிகளையும் அளித்தலைக் குறிப்பிடுகின்றது.

''கொற்றவர் கடமை கொள்ளப் பண்டியில் கொடுபோய்த் தென்னா, டுற்றவர் சுற்றந் தெய்வம் விருந்தினர்க் கூட்டியுண்பார்'' என்னும் திருவிளையாடற் புராணத்தின் திருநாட்டுப் படலத்தில் உள்ள 28 ஆம் பாடல் கருத்தைத் தழுவி இப்பாடல் அமைந்துள்ளது.

46. வாவி யெங்கு மகளிர் குடைகுவர்
காவி லெங்குங் களிமயி லாடுறும்
கோவி லெங்குங் குணின்முர சார்த்திடும்
மாவி லெங்கு மணிக்குயில் கூவுமால்

## தெளிவுரை

தடாகங்கள் அனைத்திலும் மகளிர் குடைந்து நீராடுவர்; பூங்காக்கள் அனைத்திலும் களிப்புமிக்க மயில்கள் ஆடும்; அரண் மனைகளில் எங்கும் குறுந்தடிகள் முரசினை ஆரவாரத்துடன் ஒலிக்கச் செய்யும்; மாமரங்கள் அனைத்திலும் அழகிய குயில்கள் கூவும்.

## விளக்கம்

வாவி - தடாகம்
குணில் - முரசடிக்கும் குறுந்தடி
மா - மாமரம்

47. சங்கை யேந்து தடத்தசெந் தாமரை
சங்கை யேந்தமம் மாயன்கை சாலுமாற்
கொங்கை யேந்து முகைச்செழுங் கோங்கினம்
கொங்கை யேந்தமக் கோதைய ரொத்ததே.

## தெளிவுரை

சங்குகளை ஏந்திய தடாகத்தில் உள்ள செந்தாமரை மலர் கள் சங்கை ஏந்தியுள்ள அத்திருமாலின் கைகளை ஒத்துள்ளன; வாசனையை ஏந்தியுள்ள முகைகளைக் கொண்ட செழுமையான கோங்கின மலர்கள் முலைகளைச் சுமந்துள்ள மகளிரை ஒத் துள்ளன.

## விளக்கம்

தடம் - தடாகம்
மாயன் - திருமால்
கொங்கை - வாசனை
கொங்கை ஏந்தும் - முலைகளை ஏந்தியுள்ள
கோதையர் - மகளிர்

48. நூல்ப டிப்பர் நுவல்பகற் போதுசெங்
கால்பி டிப்பர் கணிகையர்க் கல்லிடை
மால்கெ டுப்பர் வறிஞருண் டேலனம்
பால்கொடுப்பரப் பாலிநன் னாடரே.

## தெளிவுரை

அப்பாலாறு ஓடுகின்ற நல்ல நாட்டவர்கள் படித்துச்சொல்லு கின்ற பகல் நேரத்தில் நூல்களைப்படிப்பார்கள்; இரவுப் பொழுதில் பரத்தையர்க்குக் கால்களைப் பிடிப்பார்கள்; மக்கத்தைக் கெடுப் பார்கள்; வறியவர்கள் இருந்தால் அவர்களுக்குச் சோறும் பாலும் தருவார்கள்.

## விளக்கம்

நுவல் பகல் பொழுது - நூல்படித்துப் பிறருக்குச் சொல்லுகின்ற பகல் பொழுது
கணிகையர் - பரத்தையர்
அல்லிடை - இரவில்
மால்கெடுப்பர் - மயக்கத்தைப் போக்குவர்
அனம் - அன்னம்

49. சேந்தன் வாழ்திரு வேங்கட மும்முமை
காந்தன் வாழ்திருக் காளத்தி யுங்கழு
கேய்ந்த வெற்பு மிடைச்சுர மும்புகழ்
தோய்ந்த தாகுமித் தொண்டை நன் னாடரோ.

## தெளிவுரை

இத்தொண்டை நன்னாடு, முருகக்கடவுள் வாழும் திரு வேங்கடமும் உமையின் கணவன் சிவபெருமான் வாழும் திருக் காளத்தியும், கழுகுகள் பொருந்துகின்ற திருக்கழுக்குன்றமும் இடையில் அமைந்த பாலை நிலங்களும் கொண்டு புகழ் அமைந்த தாகும்.

## விளக்கம்

சேந்தன் - முருகன்
காந்தன் - கணவன், அரசன், தலைவன்
ஏய்ந்த - பொருந்திய
வெற்பு - மலை, திருக்கழுக்குன்றம்
இடைச்சுரம் - இடையில் உள்ள பாலை நிலங்கள்

50. கூறு பொன்முக லிக்குளிர் கம்பைசே
யாறு வேகவதியருண் மஞ்சணீர்
மாறி லாத குசலை வளநதிப்
பேறு மேவும் பெருந்தொண்டை நாடரோ.

## தெளிவுரை

புகழ்ந்து உரைக்கப்பெறும் பொன் முகலியாறு குளிர்ந்த கம்பையாறு, சேயாறு, வேகவதி, அருளும் மஞ்சள் நீர் பொருந்திய ஆறு, பகையில்லாத குசலை என்னும் குயத்தலையாறு, ஆகிய வள நதிகள் வாய்க்கப்பெற்று அமைந்த பெருமைக்குரிய தொண்டை நாடு.

## விளக்கம்

கம்பை - கம்பையாறு
மாறிலாத - பகையில்லாத
குசலை - குசஸ்தலை, குயத்தலை
கம்பையாறு காஞ்சிபுரத்திற்கு அருகில் ஓடும் ஆறு.

## திணை மயக்கம்

51. கரிய டைந்திடுங் கன்னற் படப்பைவேட்
டருவி தோய்ந்திடு மாழ்கட போதிமம்
பரல ருந்திடு தூதுணம் பாங்கரின்
மருவு கொன்றை மரநிழல் வைகுமால்.

## தெளிவுரை

யானைகள் வந்தடையும் கருப்பந்தோட்டத்தை விரும்பி அருவியில் மூழ்கும் ஆழ்கடல் அன்னம், பருக்கைக்கற்களை உண்ணும் தூதுணம் புறாக்கள் பக்கத்தில் பொருந்தியுள்ள கொன்றை மர நிழலில் வந்து தங்கும்.

## விளக்கம்

கரி - யானை
கன்னற்படப்பை - கருப்பந்தோட்டம்
வேட்டு - விரும்பி
ஓதிமம் - அன்னம்
பரல் - பருக்கைக்கற்கள்
பாங்கரின் - பக்கத்தில்
தூதுணம் - தூதுணம் புறா
வைகும் - தங்கும்.

இப்பாடல் குறிஞ்சியும் மருதமும், நெய்தலும் குறிஞ்சியும், பாலையும் முல்லையும் மயங்கியதைக் கூறியதாகும்.

52. அண்ட மாத ரருகிடை மின்னலாற்
கண்டல் பூத்திடுங் கானற் பரத்தியர்
கொண்ட லன்ன குழலெதிர் காண்டலும்
வண்ட லம்ப மலர்ந்திடு முல்லையே.

## தெளிவுரை

இடைச்சியர் அருகிய இடைகள் மின்னுவதனால் கண்டல் என்னும் பூமலர்ந்திடும்; கடற்கரைச் சோலையில் உள்ள நெய்தல் நிலப் பெண்களின் மேகங்களைப் போன்ற கூந்தல்களை எதிரில் கண்டதும் வண்டுகள் ஒலிக்க முல்லை மலரும்.

## விளக்கவுரை

அண்டமாதர் - இடைச்சியர்
கண்டல் - ஒரு மரம், தாழை, நீர்முள்ளி
கானல் - கரைச்சோலை
பரத்தியர் - நெய்தல் நிலப் பெண்கள்
கொண்டல் - மேகம்
குழல் - கூந்தல்
அலம்ப - ஒலிக்க

53. புன்னை யிற்கறி போய்ப்பட ருந்துகிர்
அன்ன வேங்கை யடரு மருதினில்
துன்னு முல்லை தொடரும் வயலைகள்
மன்னு கொன்றையின் வண்சினை தாவுமால்

## தெளிவுரை

புன்னைமரங்களில் மிளகுக்கொடிகள் சென்றுபடரும்; பவளக்கொடி போன்றவை வேங்கை மரங்களில் படரும்; மருத மரங்களில் நெருங்கிய முல்லைக்கொடிகள் தொடரும்; நிலைபெற்ற கொன்றை மரக்கிளைகளில் பசலைக்கொடிகள் தாவும்.

## விளக்கம்

கறி - மிளகுக்கொடி
துகிர் - பவளக்கொடி
அன்ன - போன்றவை
மருது - மருத மரம்
துன்னு - நெருங்கிய
வயலைகள் - பசலைக் கொடிகள்
மன்னு - நிலைபெற்ற
வண்சினை - வளமான கிளைகள்
'ஆல்' என்னும் சொல் அசை நிலை.

(கலிநிலைத்துறை)

54. குடாவ டிக்கணோய் கொண்டுமுன் கூப்பிடு மொலியும்
கடாவ டித்துழு மள்ளர்தங் கடுங்குர லார்ப்பும்
மடாவ டித்தயிர் கடைந்திடு மாய்ச்சியர் முழக்கும்
கெடாவ டிக்கயல் விழிப்பரத் தியர்செவிக் கேட்பார்.

## தெளிவுரை

கரடிகள் கண்நோய் கொண்டு முன்னால் கூப்பிடும் ஒலியும், எருமைக் கடாக்களை அடித்து உழுகின்ற உழவர்களுடைய கடுமை யான குரல் ஆரவாரமும், தாழியின் அடியில் தயிரைக் கடையும்

ஆய்ச்சியர்களின் முழக்கமும், அழியாத கூர்மையான கயல் மீன் களைப் போன்ற கண்களையுடைய நெய்தல் நிலப்பெண்கள் செவிகளில் கேட்பார்கள்.

### விளக்கம்

குடாவடி - கரடிகள்
கடாஅடித்து - எருமைக்கடாக்களை அடித்து
ஆர்ப்பும் - ஆரவாரமும்
மடா - மிடா, தயிர்கடையும் தாழி
வடி - மாவடுவின் வகிர், கூர்மை
பரத்தியர் - நெய்தல் நிலப்பெண்கள்
வடிக்கயல்விழி - கூர்மையான கயல்மீன்கள் போன்ற கண்கள்

## 5. திருநகரச் சிறப்பு

**(அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்)**

55. இத்தகை வளங்கு லாவு
 மெழில்பெறு தொண்டை நாட்டின்
மத்தியிற் காஞ்சி மூதூர்
 வடக்கிரண் டியோச னைத்தாய்ச்
சித்திசேர் திருக்கா ளத்தித்
 தெனாதியோ சனையோ ரைந்தாய்
மைத்தகீழ் கடற்கு மேல்பால்
 வகுத்தயோ சனையு மைந்தாய்.

### தெளிவுரை

இத்தகைய வளங்கள் கொண்டு மகிழத்தக்க அழகுபெற்ற தொண்டை நாட்டின் மையத்தில் காஞ்சி என்னும் தொன்மையான

ஊரும், அதற்கு வடக்கில் இரண்டு யோசனை தொலைவில் சித்தி சேர்ந்த திருக்காளத்தியும், தெற்கில் ஐந்து யோசனை தொலைவில் கரிய கிழக்குக் கடலுக்கு மேற்குப்பக்கத்தில் வகைப்படுத்தப்பட்ட ஐந்து யோசனை உடையதாக அமைந்துள்ளன.

## விளக்கம்

குலாவும் - கொண்டாடும்
மூதூர் - தொன்மையான ஊர்
யோசனை - ஓர் எல்லையளவு
சித்தி - அறிவு, கைகூடுதல்
தெனாது - தெற்கில் உள்ளது
மைத்த கீழ் கடற்குமேல்பால் - கரிய கிழக்குக் கடலுக்கு மேற்குப் புரத்தில்
வகுத்த - வகைப்படுத்தப்பட்ட

56. விரிஞ்சைமா நகர்க்குக் கீழ்பால்
விளம்பும்யோ சனையைந் தெல்லை
திருந்துசீர்த் தணிகை யென்னுந்
திருநக ரோன்றுண் டின்பம்
பொருந்தமந் நகரின் வண்மை
புகலொணா தமரர்க் கேனும்
அருந்துறு மார்வத் தாலே
யறைகுவன் சிறிதஞ் சாமல்

## தெளிவுரை

மாநகர் விரிஞ்சிபுரத்திற்குக் கிழக்குப் புரத்தில் சொல்லப் படும் ஐந்து யோசனை தொலைவிலுள்ள எல்லையில், திருத்தமான சிறப்புடைய தணிகை என்னும் அழகிய நகர் ஒன்றுண்டு; இன்பம் பொருந்தும் அந்நகரத்தின் வளமையை அமரர்களாலும் சொல்ல

முடியாது. அதன் வளமையை (மனத்தால்) உண்டு அடைந்த ஆர்வத்தினால் சிறிது அஞ்சாமல் சொல்வேன்.

## விளக்கம்

விரிஞ்சை - விரிஞ்சிபுரம்
கீழ்பால் - கிழக்குத்திசையில்
விளம்பும் - சொல்லும்
யோசனை - தொலைவின் ஓர் எல்லை
சீர் - சிறந்த
வண்மை - வளமை
புகலொணாது - சொல்ல முடியாது
அமரர் - தேவர்கள்
அறைகுவன் - சொல்லுவேன்
'அறைகுவன்' என்பது கவிக்கூற்று.

57. பொன்னகர் தனக்கும் வேதன் புதுநகர் தனக்கு மாயோன்
தன்னகர் தனக்குஞ் செல்வந் தணிகைவே லவனே தந்தான்
பன்னகர் முனிவர் சித்தர் பண்ணவர் வணங்கி யேத்தும்
இந்நகர் தனக்கொப் பீரே ழுலகினு மில்லை மாதோ

## தெளிவுரை

தேவலோகத்திற்கும் நான்முகனுடைய பிரமலோகத்திற்கும் திருமாலின் வைகுண்டத்திற்கும் உரிய செல்வங்களைத் தணிகை வேலவனே அளித்தான்; துறவிகள், முனிவர்கள், சித்தர்கள், தேவர்கள் ஆகியோர் வணங்கிப் போற்றும் இத்தணிகை நகருக்கு நிகர் ஈரேழு பதினான்கு உலகங்களிலும் இல்லை.

## விளக்கம்

பொன்னகர் - தேவலோகம்
வேதன் புதுநகர் - பிரமலோகம், சத்திய லோகம்
மாயோன் தன்னகர் - திருமாலின் வைகுண்டம்
பன்னகர் - துறவிகள்
சித்தர் - சித்தி பெற்றவர்கள்
பண்ணவர் - கடவுளர், குருமார், பாடகர், தேவர், முனிவர்.

58. அன்னமா நகர்சூ ழிஞ்சி யாழிமால் வரையே யாகும்
பின்னல்வார் திரைக்கிடங்கும் பெரும்புறக் கடலே நாப்பண்
மன்னிய வரையு மேரு மால்வரை தன்னை மானும்
பன்னரும் வீதி யாவும் பாரில்வாழ் நகர்களாமே.

## தெளிவுரை

அத்தகைய மாநகரைச் சூழ்ந்துள்ள மதில் கடல்போன்ற பெரிய தணிகை மலையேயாகும்; பின்னலைப் போல் நீண்ட அலை களையுடைய அகழியும் தணிகைக்குப் புறத்தே (வெளியே) உள்ள கடலேயாகும்; நடுவில் நிலைபெற்ற மலையும் பெரிய மேரு மலையை ஒத்திருக்கும்; பல அரிய தெருக்கள் அனைத்தும் உலகில் வாழ்தற்குரிய நகரங்களேயாகும்.

## விளக்கம்

இஞ்சி - மதில்
ஆழிமால் வரை - கடல் போன்ற பெரிய மலை
பின்னல் வார் திரைக்கிடங்கும் - பின்னல்போல் நீண்ட அலை களையுடைய அகழியும்
நாப்பண் - இடை, நடு

மன்னிய - நிலைபெற்ற
மானும் - ஒத்திருக்கும்
பன்னரும் வீதி - பல் + அரும் + வீதி - பல அரிய தெருக்கள்.

59. அந்தணர் வீதி யெங்கு மருமறை முழக்க மாறா
கொந்தலர் மன்னர் வீதி குணில்பொரு முரச மார்க்கும்
தந்திர வணிகர் வீதி சந்தையி னொலிமிக் காகும்
உந்துசூத் திரர்தம் வீதி யுழுதொழின் முழக்க மோவா

## தெளிவுரை

அந்தணர் தெருக்களில் எங்கும் அரிய வேதங்களின் முழக்கங்கள் மாறமாட்டா; பெருங்கோபம் மலர்தற்குரிய அரசர் தெருவில் குறுந்தடி அறையும் முரசம் ஒலிக்கும்; வணிகத்தந்திர முள்ள வணிகர்களின் தெருவில், சந்தையைப்போல் ஒலி மிகுந் திருக்கும்; உயர்ந்த சூத்திரர்களின் தெருவில் உழும் தொழில் ஒலி ஒழியாமல் இருக்கும்.

## விளக்கம்

கொந்து - பெருங்கோபம்
அலர் - மலரும்
குணில் - குறுந்தடி
உந்து - உயர்ச்சியுடைய
சூத்திரர் - நான்காம் வருணத்தார்
ஓவா - ஒழியா, நீங்கா.

இப்பாடலில் அந்தணர், மன்னர், வணிகர், சூத்திரர் ஆகிய நான்கு இன மக்கள் வாழும் தெருக்கள் கூறப்பட்டதன் வாயிலாகக் கந்தப்ப முனிவர் வாழ்ந்த பதினெட்டாம் நூற்றாண்டில் சாதியடிப் படையில் தெருக்கள் அமைந்திருந்த வரலாற்றுண்மை அறிய லாகிறது.

60. ஆடரங் கெங்குங் கூத்த ரணிமயில் போன டிப்பார்
பாடரங் கெங்கு நல்யாழ்ப் பாணரே ழிசைப டிப்பார்
கோடரச் சோலை யெங்குங் கொழுங்கனன் மகமு டிப்பார்
நீடர வல்கு லார்மே னிலையெங்கும் பந்த டிப்பார்

## தெளிவுரை

ஆடும் அரங்கங்கள் அனைத்திலும் கூத்தராகிய பெண்கள் அழகிய மயில்போல் நடிப்பார்கள்; பாடல் அரங்கங்கள் அனைத்திலும் நல்ல யாழ்ப்பாணர்கள் ஏழ் இசை இசைப்பார்கள்; மரக்கிளைகள் கொண்ட சோலைகள் அனைத்திலும் கொழுமையான தீவளர்த்து யாகத்தை முடிப்பார்கள்; நீண்ட பாம்பின்படம் போன்ற அல்குலையுடைய மகளிர் மேன்மாடங்கள் அனைத்திலும் பந்தடித்து விளையாடுவர்.

## விளக்கம்

கூத்தர் - கூத்தாடும் பெண்கள்
அணிமயில் - அழகியமயில்
ஏழிசைபடிப்பார் - ஏழிசை இசைப்பார்கள்
கோடரம் - மரக்கிளை
மகம் - யாகம்
அரசல்குல் - பாம்பின் படம்போன்ற அல்குல்

*(கலி நிலைத்துறை)*

61. வச்சி ரத்தியன் மாடத்தின் மாடுற வயங்கும்
பச்சை ரத்தின மாளிகை தோன்றுதல் பதுமக்
கைச்சி ரத்தவ னீற்றொளி மேனியிற் கலந்த
அச்சு தற்கிளை யாளெனு மம்பிகை புரையும்

## தெளிவுரை

வைரத்தால் அமைந்த மாளிகையின் பக்கத்தில் இருந்து ஒளி செய்யும் பச்சை நிறமுள்ள இரத்தின மாளிகை தோன்றுதல், தாமரை மலர் போன்ற கைகளையும் தலைகளையும் கொண்ட முருகன் அணிந்துள்ள வலிய திருநீற்றின் ஒளி உடலில் கலந்த திருமாலுக்குத் தங்கை என்னும் பார்வதியை ஒத்திருக்கும்.

## விளக்கம்

வச்சிரம் - வைரம்
மாடு - பக்கம்
வயங்கும் - ஒளி செய்யும்
நீற்றொளி - திருநீற்றின் ஒளி
அச்சுதன் - திருமால்
அம்பிகை - பார்வதி

62. சித்தி ரத்தியன் மாளிகை செறிந்தவர் செழுங்கண்
அத்தி ரத்தியல் கணிகையிற் புகுந்தவ ராவர்
நித்தி லத்திருப் பந்தர்சூழ் பளிக்கறை நின்றோர்
பத்த ரிற்புகும் பத்தர்தந் தூய்மையிற் பயில்வார்.

## தெளிவுரை

ஓவியம் போன்றமைந்த மாளிகையில் வசிப்பவர்கள் செழுமையான கண்ணம்புகளுடைய பரத்தையர் இல்லத்தில் புகுந்தவர்கள் ஆவர்; அழகிய முத்துப்பந்தல் சூழ்ந்துள்ள பளிங்கு அறையில் நின்றவர்கள் பக்தர் இல்லங்களில் புகும் பக்தர்களுடைய தூய்மையில் பயிற்சிபெற்றவர்கள் ஆவர்.

## விளக்கம்

சித்திரத்தியல் மாளிகை - சித்திரமாளிகை, ஓவிய மாளிகை
செறிந்தவர் - வசித்தவர்
செழுங்கண் - வளமான கண்கள்
அத்திரத்து இயல் - அம்புபோல் அமைந்த
கணிகை இல் - பரத்தையர் வீடு
நித்திலத்திருப்பந்தர் - அழகிய முத்துப்பந்தல்
பளிக்கறை - பளிங்கு அறை, கண்ணாடி அறை
பத்தர் - பக்தர்கள், இறைவன் அடியார்கள்

63. பவள மாடத்தைப் பார்ப்பவர் பரிதிதே ரென்பார்
தவள மாடத்தைச் சந்திரன் விமானமீ தென்பார்
கவள யானையின் கவுளிழி மதங்களைக் கண்டோர்
குவளை வெற்பினிற் குலவுதே னருவியாக் குறிப்பார்.

## தெளிவுரை

பவள மாளிகையைப் பார்ப்பவர்கள் அதனைச் சூரியனுடைய தேர் என்பர்; முத்துமாளிகையைச் சந்திரனுடைய விமானம் இது என்பர்; வாயளவு உணவு கொண்ட யானையின் கதுப்பில் இருந்து சொரியும் மதநீரைக் கண்டவர்கள் குவளை வெற்பு எனப் பெறும் தணிகைமலையில் குலவுகின்ற தேன் அருவியாகக் குறிப்பிட்டுச் சொல்வார்கள்.

## விளக்கம்

மாடம் - மாளிகை
பரிதி - சூரியன்
தவளம் - முத்து
கவளம் - வாயளவு கொண்ட உணவு

கவுள் - யானையின் கதுப்பு
இழி - சொரியும்
மதம் - மதநீர்
குவளை வெற்பு - தணிகை மலை.

64. சந்த னப்புகை தவழ்தரு தமனிய மாடம்
நந்து றும்பனி சூழும்பொன் னகத்தெழி னண்ணும்
இந்தெ னத்திகழ் முகத்திய ரியலுமே னிலத்தில்
வந்த னக்குழா நடைகற்று வானயா றமரும்

## தெளிவுரை

சந்தனப்புகை தவழுகின்ற முத்து மாளிகை மிகுந்த பனி சூழ்ந்துள்ள இமயமலையின் அழகை விரும்பும் சந்திரன் என விளங்கும் விளங்குகின்ற முகங்களைக் கொண்ட மகளிர் உலவும் மேல் நிலத்தில் வந்து அன்னக்கூட்டம் நடைகற்றுக் கொண்டு ஆகாய கங்கையில் அமரும்.

## விளக்கம்

தமனிய மாடம் - முத்து மாளிகை
நந்துறும் - மிகும்
பொன்னகம் - இமயமலை
இந்து - சந்திரன்
வானயாறு - ஆகாய கங்கை

65. பளிக்கு மாடமே னிலவிய பைம்பொனீண் மாடம்
களிக்கு மந்தர மிசைப்பயில் கடவுள ருலகே
அளிக்கு நீலமா ளிகைமிசை யரதன மாடம்
துளிக்கு மேகமண்டலமிசைச் சூரிய னுலகே

## தெளிவுரை

பளிங்கு மாடத்தின் மேல் நிலவிய பசிய பொன்னால் அமைந்த நீள்மாடத்தின் கண் ஆகாயத்தின் கீழுள்ள உலகின் மீது பயிலுகின்ற கடவுளர் உலகு களிப்படையும்; நீலமாளிகை மீது இரத்தினமாடம் அருள் செய்யும்; மேகமண்டலத்தின் மீது சூரியன் உலகு மழைபெய்யச் செய்யும்.

## விளக்கம்

பளிக்குமாடம் - பளிங்குமாளிகை
பைம்பொன் - பசியபொன்
அந்தரம் - ஆகாயத்தின் கீழுள்ள உலகு
பயில் - பழக்கம்
மிசை - மேலே
அரதனமாடம் - இரத்தின மாடம்
துளிக்கும் - மழைபெய்யும்

66. மாட மாளிகை மண்டப மம்பலந் தெற்றி
கூட கோபுரங் கொடிமதில் கழகஞ்செய் குன்றம்
ஆட ரங்குபா டரங்கறச் சாலைக ளயனார்
தேடி மாதிரி யாகமுன் செய்வித்த வொக்கும்

## தெளிவுரை

மாடங்கள், மாளிகைகள், மண்டபங்கள், மன்றங்கள், திண்ணைகள், கூடங்கள், கோபுரங்கள், கொடி, மதில், கல்விச் சாலை, செயற்கை மலை, ஆடல் அரங்கு, பாடல் அரங்கு, அறச் சாலைகள் ஆகியன பிரமன் தேடி முன் மாதிரியாகச் செய்வித்தனவற்றை ஒத்திருக்கும்.

## விளக்கம்

அம்பலம் - அவை, சபை, மன்றம்
தெற்றி - திண்ணை, சித்திர கூடம்
கழகம் - கல்விச் சாலை
செய்குன்றம் - செயற்கை மலை
அயனார் - பிரமன்
மாதிரி - கட்டளை, ஒப்பு, 'மாதிரிகா' என்னும் வடமொழிச் சிதைவு.

67. தணிகை மாநகர் தனின்மிகு சவுந்தர மான
கணிகை மாதர்தந் தொழுத்தைபாற் கலவிநூன் முற்றும்
தணிகை யாலிர தியுமத னொடுசுர தத்தை
நணுகி னாளெனி னவர்சுர தத்தையார் நவில்வார்.

## தெளிவுரை

தணிகை மாநகரில் மிகுந்த அழகான பரத்தையர்களின் வேலைக்காரிகளிடம் கல்விநூல் முழுதும் கற்றுத் துணிவதனால், இரதியும் மன்மதனோடு புணர நெருங்கினாள் என்றால், அப்பரத்தையர்களின் காமத்தை யார் சொல்வார்கள்!

## விளக்கம்

சவுந்தரமான - அழகான
தொழுத்தை - வேலைக்காரி
துணிகையால் - துணிந்து கற்றலினால்
சுரதம் - அன்பு, புணர்ச்சி, மருந்திழிசாரம்
நணுகினாள் - இணைந்தாள், சார்ந்தாள்
நவில்வார் - சொல்வார்

(அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்)

68. பொற்கொடி நுடங்கு மாடப்
புதுநிலா மணிமுற் றத்தில்
மிற்கொடி யிடைநல் லார்தம்
விருப்புறு கணவ ரோடு
தெற்கொடு வடக்கு மாறிச்
சிதையினுஞ் சிதையாப் போகம்
புற்கொடுங் கரத்து வாழும்
புண்ணிய நண்ணி னாரே.

## தெளிவுரை

பொன்கொடி அசையும் மாடத்தின் அழகிய புதிய நிலா முற்றத்தில், மின்னல் கொடி போன்ற இடையினையுடைய நல்ல மகளிரின் விருப்பு மிகுந்த கணவர்களுடன் தெற்குடன் வடக்கு இடம் மாறி அழிந்தாலும் அழியாத சிற்றின்பமாகிய போகம், புல்லுதலையுடைய வளைந்த கைகளில் வாழ்கின்ற புண்ணியத்தைச் சார்ந்தார்கள்.

## விளக்கம்

நுடங்கும் - அசையும்
மிற்கொடி - மின்னல் கொடி போன்ற
புல்கொடுங்கரத்து - புல்லுதலையுடைய வளைந்த கைகளில்.

69. விண்டொடு புரிசை மூதூர்
வியனகர் மடவா ரேரைக்
கண்டர மகளிர் நாணிக்
கண்டுழிச் செலுந்தங் காதல்
அண்டரை விடாது புல்லி
யல்லினும் பகலி னுங்கண்
பண்டரத் துயிலகி லாராய்ப்
பரிந்திமை பொருந்திலாரே.

## தெளிவுரை

ஆகாயத்தைத் தொடுகின்ற மதிலைக்கொண்ட தொன்மை யான ஊராகிய அகன்ற தணிகைமாநகரத்து மகளிரின் அழகைக் கண்டு தெய்வப்பெண்கள் நாணமடைந்து, கண்டு செல்லும்போது தங்கள் காதல் கொண்ட வானோர்களை விடாமல் தழுவி இரவி லும் பகலிலும் கண்மூடி உறங்கமாட்டாதவர்களாகி அன்புடன் பேசி இமைகளை மூடவில்லை.

## விளக்கம்

புரிசை - மதில்
வியன் நகர் - அகன்ற நகரம்
ஏர் - அழகு
அரமகளிர் - தெய்வப்பெண்கள்
அண்டர் - வானோர்
புல்லி - தழுவி
அல் - இரவு

'பண்டர' என்பது 'படர' என்பதன் திரிபு; இது எதுகையை நோக்கி அமைந்ததாகும்.

70. வாளரம் பொருத வேற்கண்
வதனத்தை மதியென் றெண்ணிக்
கோளர வினந்தொ டாமற்
குவளையங் கிரிவாழ் நல்லார்
சாளரம் புகும திக்குத்
தடவுமைக் குறியை வாணி
நீளரங் கெனுநா வாணர்
நிகழ்த்துவர் களங்க மென்றே.

## தெளிவுரை

வாள் அரத்துக்கு (இரம்பத்திற்கு) ஒப்பான வேல் போன்ற கண்களுடைய பெண்களின் முகத்தை நிலவு என எண்ணிக் (வாயால்) கொள்ளும் பாம்பினம் தொடாமல் தணிகை மலையில் வாழும் நங்கை நல்லார்கள் காலதரில் (சன்னலில்) புகும் மதியாகிய முகத்திற்குத் தடவுகின்ற மைக்குறியை, வாணியாகிய கலைமகளின் நீண்ட அரங்கம் என்று கூறும் நாவால் வாழ்நராகிய புலவர்கள், 'களங்கம்' என்று சொல்லுவார்கள்.

## விளக்கம்

வாள் அரம் - ஒருவகை அரம் (இரம்பம்)
பொருத - பொருந்திய, ஒப்பான
வதனம் - முகம்
கோள் அரவினம் - (வாயால்) கொள்ளும் பாம்பினம்
குவளையங்கிரி - தணிகைமலை
சாளரம் - சன்னல், காலதர், பலகணி
வாணி - கலைமகள்
நாவாணர் - நா + வாழ்நர் - நாவினால் வாழ்பவர்கள், புலவர்கள்.

*(கலி விருத்தம்)*

71. அறிவினிற் றாழ்ந்தனன்னனந்தன் கல்வியிற்
குறுகின னகத்தியன் குபேரன் செல்வத்தில்
வறியனா யோடினன் வடக்கின் மாரனோர்
மறுகினான் றணிகைவாழ் மைந்தர்க் கண்டரோ.

## தெளிவுரை

பிரமன் அறிவில் தாழ்வு அடைந்தனன்; அகத்தியன் கல்வியில் குறுகியவன் ஆயினன்; செல்வத்தில் குபேரன் வறியவன் ஆகி

வடக்கே (பிழைக்க) ஓடிச் சென்றான்; தணிகைவாழ் மைந்தர் (வீரர்) முருகன் அழகை நேரில் கண்டு மனம் குழம்பினான்.

## விளக்கம்

அனந்தன் - பிரமன்

'அனந்தன்' என்னும் சொல், சிவன், திருமால், ஆதிசேடன் ஆகியோரையும் குறிக்கும்

'பிரமன்' அறிவுக்குரிய கடவுள் என்பதனால் இங்கு 'அனந்தன்' என்னும் சொல்லும் பிரமனையே குறிக்கும்.

மறுகினான் - மனம் குழம்பினான்
மாரன் - காமன், மன்மதன்
அண்டர் - தேவர்கள்

''மாரனேர் மறுகினான் றணிகைவாழ் மைந்தர்க் கண்டு'' என்னும் தொடரை ''மாரன் தணிகை வாழ் மைந்தர் நேர் கண்டு மறுகினான்'' எனக் கொண்டு கூட்டிப் பொருள் காணவேண்டும்.

**(அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்)**

72. ஏற்பவ ரின்மை யாலே யீபவ ரில்லை போரிற்
றோற்பவ ரிலாமை வென்றி சொல்பவ ரொருவரில்லை
நூற்பொரு ளுணர்த லாலே நுண்பொரு ளுரைப்போ ரில்லை
மேற்படு தணிகை யென்னும் வியனக ரிடத்துமாதோ.

## தெளிவுரை

மேம்பட்ட தணிகை என்னும் அகன்ற நகரில் பிச்சை ஏற்பவர் இல்லாமையால், கொடுக்கும் வள்ளல் இல்லை; போரில் தோற்பவர் இல்லாமையால் வெற்றி சொல்பவர் ஒருவரும் இல்லை; நூல்களின் பொருள்களை உணர்வதனால், நூலின் நுட்பமான பொருள்களை உரைப்பவர்கள் இல்லை.

## விளக்கம்

இப்பாடல்,

"வண்மை யில்லையோர் வறுமை யின்மையால்,
திண்மை யில்லை நேர் செறுந ரின்மையால்,
உண்மை யில்லைபொய் யுரையி லாமையால்,
வெண்மை யில்லைபல் கேள்வி மேவலால்"

என்னும் கம்பராமாயணத்தில் உள்ள நாட்டுப்படலத்தின் 53 ஆம் பாடலையொட்டி அமைக்கப்பட்டுள்ளது.

73. காரொடு பனியே கூதிர்க் காலத்து மடவார் கொங்கை
சேர்தரு வெப்பந் தன்னாற் செறிகுளி ரூதைக் கஞ்சார்
நாரியர் தனங்கு ளிர்ச்சி நல்கலால் வேனிற் காலத்
தாருமுட் டினத்துக் கஞ்சா ரந்நகர் வாழு மாந்தர்.

## தெளிவுரை

தணிகை நகரத்தில் வாழும் மக்கள், கார்காலத்திலும் பனியுள்ள காலத்திலும் கூதிர்க்காலத்திலும் சேரும்போது முலைகள் தரும் வெப்பத்தால் செறிந்த குளிருடைய ஊதைக்காற்றுக்கு அஞ்சமாட்டார்கள். நங்கையரின் முலைகள் குளிர்ச்சி அளித்தலால், கோடைக் காலத்தில் அந்நகரில் வாழும் மக்கள் எவரும் வெப்பத்துக்கு அஞ்சமாட்டார்கள்.

## விளக்கம்

கார் - ஆவணி, புரட்டாசி ஆகிய மாதங்களின் பருவம்
கூதிர் - ஐப்பசி, கார்த்திகை ஆகிய மாதங்களின் பருவம்
ஊதை - குளிர்காற்று
நாரியர் - மகளிர்

தனம் - முலை, பொருள்
நல்கல் - அளித்தல்
வேனில் காலம் - கோடைக்காலம்
உட்டினம் - உஷ்ணம் , வெப்பம்.

இப்பாடல் வாயிலாக, மகளிரின் கொங்கைகள் குளிர்காலத்தில் வெப்பமும், கோடைக்காலத்தில் குளிர்ச்சியும் தரும் இயல்பின என்னும் அறிவியல் சார்ந்த கருத்து உணர்த்தப்பெற்றுள்ளது.

(கலிவிருத்தம்)

74. தருவ ளத்தணி கைக்கணொர் சத்திரப்
பெருவ ளத்தினைப் பேச மயங்குவன்
மருவ ளக்கம லாசனன் மற்றெவர்
தெருவ ளத்தினைச் செப்புந் தகையரே.

## தெளிவுரை

நெருக்கமாகப் பொருந்தியுள்ள தாமரை மலரை இருக்கையாகக் கொண்ட பிரமன் மரவளங்கொண்ட தணிகையில் உள்ள சத்திரங்களின் பெரிய வளத்தினைப் பற்றிப் பேச மயங்குவான்; வேறு எவர் தணிகைத் தெருக்களின் வளத்தினைச் சொல்லும் தகைமையுடையவர்?

## விளக்கம்

மருவு அளக் கமல ஆசனன் -
பொருந்திய நெருக்கமான தாமரைமலரை இருக்கையாகக் கொண்ட பிரமன்.

75. மாட மீது மருவு மகிழ்நர்பால்
ஊடு மாத ருகுத்தபன் மாமணி
கூடி நாளுங் குலாவு பனிக்கடல்
ஆடு மாரத்தி னாகர மாயதே.

## தெளிவுரை

மேல்மாடத்தில் பொருந்துகின்ற கணவரிடம் ஊடிக் கொள்ளும் மகளிர் சொரிந்த் பல்மாமணிகள் சேர்ந்து நாள்தோறும் கொண்டாடும் பனிக்கடல் முத்துக்களுக்கு இருப்பிடம் ஆயிற்று.

## விளக்கம்

மகிழ்நர் - கணவர்
மாரத்தினாகரம் - பெரியகடல்

''ஆரத்தின் ஆகரம்'' எனப் பிரித்து, முத்துக்களுக்கு இருப்பிடமாயிற்று என்றும் பொருள் கொள்ளலாம்.

76. சொன்ன மாளிகை மீதுறு தோகைநேர்
அந்ந லாருரு வாவதற் கன்றுகொல்
மின்ன லானது விண்ணி லடிக்கடி
இன்னு மாய்ந்திட் டெடுக்கும் முருப்பல.

## தெளிவுரை

பொன் மாளிகைமீது அடைந்த, தோகைமயிலுக்கு நிகரான அம்மகளிர் உருவினை அடைவதற்கு அன்று மின்னல் வானத்தில் அடிக்கடி ஆராய்ந்து இன்னும் எடுக்கும் வடிவங்கள் பலவாகும்.

## விளக்கம்

சொன்னமாளிகை - சொர்ணமாளிகை, பொன்மாளிகை
தோகை நேர் - தோகை மயிலுக்கு நிகரான
அந்நலார் - அம்மங்கைநல்லார்

77. துறந்தி டாவளந் துன்னுந் தணிகையிற்
சிறந்த மாதர் திருநுத லாகவே
குறைந்து பார்க்குங் குளிர்முக மாகவே
நிறைந்து பாக்கு நிலாமதி யின்னுமே

## தெளிவுரை

நீங்காத வளம் நிறைந்த தணிகையில் உள்ள சிறந்த பெண்களின் அழகிய நெற்றி குறைந்ததாக அமைந்திருக்கவே, பார்க்கும் குளிர்ந்த அவர்களின் முகம், பார்க்கின்ற முழுநிலவாகிய மதியைப் போல் தோன்றும்.

## விளக்கம்

துன்னும் - நெருங்கியிருக்கும்
திருநுதல் - அழகிய நெற்றி

78. மாத ரேழ்நிலை மாடத் தமளியிற்
காத லாரொடு செய்யுங் கலவியால்
நோத றீர்தர நொய்ஞ்சிறை யோதிமம்
மீது லாங்கங்கை நீர்கொடு வீசுமால்

## தெளிவுரை

ஏழுநிலைகளைக் கொண்ட மாடத்தில் உள்ள கட்டிலில் காதலரோடு புரியும் புணர்ச்சியால் துன்பம் தீருவதற்கு மென்மை

யான சிறகுகளைக் கொண்ட அன்னப்பறவை, மேலே உலவுகின்ற கங்கைநீரைக் கொண்டு வீசும்.

## விளக்கம்

ஏழ்நிலை - ஏழு அடுக்குகள்
அமளி - கட்டில்
கலவி - புணர்ச்சி
நோதறீர்தர - நோதல்தீர்தர - நோய் (துன்பம்) நீங்க
நொய்ஞ்சிறை - மெல்லிய சிறகு
ஓதிமம் - அன்னப்பறவை
மீதுலாங்கங்கை நீர் கொடு - விண்ணின்மேல் உலாவும் கங்கை நீரைக் கொண்டு

79. பந்த டித்திடும் பாவையர் நுண்ணிடை
நொந்தி ளைத்திட நோக்கிய பைங்கிளி
வந்து ரைப்ப மனமகிழ்ந் தேசல்போல்
மைந்து டைக்குயின் மாவினிற் கூவுமால்.

## தெளிவுரை

பந்தடித்து விளையாடும் பெண்களின் நுண்ணிய இடைகள் நொந்து இளைத்ததனைக் கண்ட பச்சைக் கிளி வந்து கூற, மனம் மகிழ்ச்சியடைந்து ஏசுதலைப் போல் அழகுடைய குயில் மாமரத்தில் கூவும்.

## விளக்கம்

பாவையர் - பெண்கள்
நுண்இடை - நுண்ணிய இடை, மெல்லிய இடை
மைந்து - அழகு

80. குழலும் யாழும் குயிலு மடநலார்
மழலை யஞ்சி வளைசுரை கான்புகும்
முழவுங் கோடு முருடுந் தடாரியும்
மழை னான்கு மடியெழுந் தார்க்குமே

## தெளிவுரை

மென்மையான பெண்களின் மழலைபோன்ற இனிய சொல்லின் இனிமைக்கு அஞ்சிப்புல்லாங்குழல் மூங்கிலில் புகும்; யாழ் சுரைக்காயில் புகும்; குயில் காட்டில் புகும். முழவும் கோடும் முருடும் தடாரியும் மழையில் நான்கு மடங்கு எழுந்து ஒலிக்கும்.

## விளக்கம்

மடநலார் - மடநல்லார், மென்மையான மகளிர்
மழலை - மழலைச் சொல்
வளை - மூங்கில்
முருடு - மரத்தால் செய்யப்படும் ஒரு வாத்தியம்
நான்குமடி - நான்கு மடங்கு
ஆர்க்கும் - ஒலிக்கும்.

81. கரியி னோதை கடிமுர சோதைவாம்
பரியி னோதை பணிலத்தி னோதைதேர்
திரியு மோதை தெரிவையர் கைவளைச்
சரியி னோதை சலதியைத் தட்குமே

## தெளிவுரை

யானையின் பிளிறும் ஓசையும் அழகிய முரசின் ஓசையும், குதிரையின் ஒலியும், சங்கின் முழக்கமும், தேர் திரிகின்ற ஒலியும், பெண்களின் கை வளையல்கள் சரியும் ஓசையும் கடல் ஒலியைத் தடுக்கும்.

### விளக்கம்

கடி - அழகு, அச்சம், தொனி
பணிலம் - சங்கு, வலம்புரிச்சங்கு
சலதி - கடல்
தட்கும் - தடுக்கும்

82. காரைத் தீண்டுங் கடிபொழில் காய்கதிர்த்
தேரைத் தீண்டுந் திருமதி றிங்களின்
ஊரைத் தீண்டு முயர்கொடி கற்பக
வேரைத் தீண்டும் வியன்மணிக் கோபுரம்.

### தெளிவுரை

நறுமணம் பொருந்திய சோலைகள் நீர்மேகத்தைத் தொடும்; அழகிய மதில் காய்கின்ற சூரியனுடைய தேரைத் தொடும்; உயர்ந்த கொடிகள் நிலவின் வட்டத்தைத் (பரிவட்டம்) தீண்டும்; அகன்ற அழகிய கோபுரங்கள் கற்பகமரத்தின் வேரைத் தொடும்.

### விளக்கம்

கடி - அழகு, அச்சம், தொனி
திங்களின் ஊரை - நிலவின் பரிவட்டத்தை
பணிலம் - சங்கு, வலம்புரிச்சங்கு
சலதி - கடல்
வியன் - அகன்ற
தட்கும் - தடுக்கும்

83. ஆவ ணங்க ளலைகடன் மானும்பூங்
காவ ணங்கற்ப காடவி மானுமே
தேவ ணங்கு தணிகைச் சிறப்பினை
நாவ ணங்கு நவிலவல் லாளரோ

தெளிவுரை

கடைவீதிகள் அலைகளைக் கொண்ட கடலுக்கு ஒப்பானவை; சோலைகள் கற்பகக் காட்டிற்கு ஒப்பானவை; கடவுளர்கள் வணங்கும் தணிகையின் சிறப்பினை நாமகளாகிய கலைமகளும் சொல்லவல்லவளோ?

**விளக்கம்**

ஆவணம் - கடைவீதி
மானும் - ஒப்பாகும்
அடவி - காடு
தேவணங்கு தணிகை - கடவுளர்கள் வணங்கும் தணிகை
நா அணங்கு - கலைமகள்.

## 6. நைமிசாரணியச் சிறப்பு

*(கதை: பிரமனிடம் முனிவர்கள் பலர் ஒருங்கே இருந்து தவம் செய்வதற்குத் தக்க இடம் பற்றிக் கூறியருளும்படி வேண்டினர். அவர் தருப்பையைச் சக்கரம்போல் அமைத்து உருட்டிவிட்டு, அது தங்கும் இடத்தில் தவம் செய்யுமாறு கூறினார். தருப்பைச்சக்கரம் உருண்டு வந்து நின்ற இடமே நைமிசாரணியம் என்னும் இடம்.*

அங்கே பலவகைப்பட்ட மரங்களும் ஆறுகளும் மான் முதலிய விலங்குகளும் குயில் முதலிய பறவைகளும் இருந்தன; பலமுனிவர்கள் அங்குத் தவம் செய்தனர்.

அங்குச் சூத முனிவர் சென்றார். முனிவர்கள் அவரை வணங்கி, ''தேவரீர் எங்களுக்குப் பதினெண் புராணங்களையும் ஸ்மிருதிகளையும் முன்னர் உரைத்தீர்கள்; புராணங்க்ளுள் தணிகாசல மான்மியம் ''அதிக இரகசியம்'' என்றும் சொன்னீர்கள்; அதனை

விரிவாகச் சொல்ல வேண்டும் என்று வேண்டினர்; சூத முனிவர் சொல்லத் தொடங்கினார்.)

*(கலி நிலைத்துறை)*

84. ஈர வாசினிக் கனிபழுத் திரும்புவி வெடிப்ப
வேரன் மீதுதூங் கிறால்கிழிந் தொழுகுதேன் விரவச்
சாரன் மந்திதேன் சுளையொடு பிசைந்துண்டு தருக்கும்
சூரல் பம்பிய நைமிச வளந்தொகுத் துரைப்பாம்.

## தெளிவுரை

ஈரப்பலாப்பழம் பழுத்துப் பெரிய நிலம் வெடிக்க மூங்கில் மீது தொங்கிய தேன்கூடு கிழிந்து, ஒழுகுகின்ற தேன் பரவவும், மலைச்சாரலில் இருந்த குரங்கு தேனையும் சுளையையும் பிசைந்து உண்டு களிக்கும் பிரம்புகள் செழித்துள்ள நைமிச வனத்தின் வளங் களைத் தொகுத்துச் சொல்வோமாக.

## விளக்கம்

ஆசினிக்கனி - ஈரப்பலா
இரும்புவி - பெரிய நிலம்
வேரல் - மூங்கில்
தூங்குஇறால் - தொங்கும் தேன்கூடு
விரவ - பரவ
தருக்கும் - களிக்கும்
சூரல் - பிரம்பு

85. முந்து மாதவ ரனைவரு முடியினால் வணங்கி
எந்தை யாந்தவம் புரியுநல் லிடம்புக லென்ன
அந்த நான்முக னுருட்டிய தரப்பையந் திகிரி
வந்து நின்றிடுங் சூழனை மிசமெண வயங்கும்

## தெளிவுரை

முன்னர் மிக்க தவமுனிவர்கள் எல்லோரும் தலையால் வணங்கி, ''எம் தந்தையே! யாம் தவம் செய்யும் நல்ல இடம்பற்றிக் கூறியருளுங்கள்!'' என்று வேண்ட, அப்பிரமன் உருட்டிய தருப்பைச் சக்கரம் வந்து நின்ற இடம் நைமிசம் என்று வழங்கப் பெறுகிறது.

## விளக்கம்

எந்தை - எம் தந்தையே
திகிரி - சக்கரம்
சூழல் - இடம்
நைமிசம் - நேமிசம்பந்தமுள்ள காடு
வயங்கும் - வழங்கப்பெறும்

86. தீமிக் காட்டயர் நுதல்விழி மான்மழுத் திருக்கைச்
சாமிக்காட்படுந் தவத்தினர் மகத்தினைத் தணவா சாமிக்
நேமிக் காட்டினுக் கிணையென நிகழ்த்தலாந் தகைத்தோ
பூமிக் காடெலாங் கற்பகக் காடுமே புரையா.

## தெளிவுரை

நெருப்புக் கொழுந்து விட்டு அசைகின்ற நெற்றிக்கண்ணையும், மானையும் மழுவையும் திருக்கைகளில் ஏந்திய சிவபெருமானுக்கு அடிமையாகும் தவமுனிவர்களின் யாகத்திற்குக் குறையாத நேமிவனத்திற்கு இணையென உலகத்தில் உள்ள காடுகள் எல்லாம் கூறத்தக்கனவோ? கற்பகக் காடும் இணையாகாது.

## விளக்கம்

தீமிக்கு ஆட்டு அயர் - நெருப்புக்கொழுந்து விட்டு அசைகின்ற

சாமி - பரமசிவன்
மகம் - யாகம்
தணவா - குறையாத
நேமிக்காடு - சக்கரவனம், நைமிசாரணியம்
தகைத்தோ - தன்மையுடையனவோ, (பன்மை ஒருமை மயக்கம்).

87. ஆலங் காடுவேற் காடுமாங் காட்டர் பனங்கா
டேலுஞ் செங்கடம் பாடவி பதரிகாச்சிரமம்
மாலங் காடுவேய் வனஞ்சம்பு வனமறைக் காடு
போலொன் றன்றிமற் றிவையெலா நைமிசம் பொருந்தும்.

## தெளிவுரை

ஆலங்காட்டையும் வேல்காட்டையும் மாங்காட்டையும், அடர்ந்த பனங்காட்டையும், செங்கடம்ப மரங்கள் உள்ள காட்டையும், இலந்தை மரங்கள் கொண்ட பதரிகாச்சிரமத்தையும் அங்கு மேகங்கள் ஆடுகின்ற மூங்கில் வனத்தையும் நாவல் மரங்கள் உள்ள மறைக்காட்டையும் போல் ஒவ்வொரு இன மரங்களைக் கொண்ட காடாக இல்லாமல் கூறப்பட்ட எல்லா மர வகைகளையும் கொண்டு நைமிசவனம் விளங்கும்.

## விளக்கம்

மாங்காடு - மாயூரம், தொண்டை நாட்டு மாங்காடு என்னும் தலமும் ஆகும்.
கடம்பாடவி - மதுரை
பதிரிகாச்சிரமம்: பதரி - இலந்தை மரம்
மால் அங்கு ஆடு வேய்வனம்:-
மால் - மேகம்

வேய் - மூங்கில்
வேய்வனம் - திருநெல்வேலி, திருப்பாசூர்
சம்புவனம் - திருவானைக்கா
சம்பு - நாவல் மரம்.

88. காயுங் கந்தமுங் கனியும் பச்சிலைகளுங் கஞலிப்
பாயுந் தேன்மலர்ச் சோலைகள் குளிர்நிழல் பரப்பித்
தோயுந் தண்புனற் கானயா றும்புடை சூழ
மேயும் பன்னிரை குலாயது நைமிச விரிகான்

## தெளிவுரை

காய்களும் கிழங்குகளும் பழங்களும் பச்சிலைகளும் நெருங்கிப் பாய்கின்ற தேன்மலர்ச் சோலைகள் குளிர்ந்த நிழலைப் பரப்பிக் கலக்கும் குளிர்ந்த நீரையுடைய காட்டாறு பக்கத்தில் சூழ்ந்திருக்க, மேய்கின்ற பல ஆனிரைகள் உலாவும் நைமிசம் என்னும் பரந்த காடு.

## விளக்கம்

கந்தம் - கிழங்கு
கஞலி - நெருங்கி
தோயும் - கலக்கும்
கானயாறு : கானம் + யாறு - காட்டாறு.
புடை - பக்கம்
பல் நிரை - பல ஆனிரைகள்
குலாயது - உலாவுதற்குரியது
விரிகான் - பரந்த காடு.

89. அரக்க ராலழி யாதவல் லரணமா யமரர்க்
கிரக்க மாமுனி வோர்மக மியற்றுவ தாகித்
தரைக்கண் மேம்படு தவமெலா மளிப்பது தாவும்
மரைக்க ணங்கலை யொடும்பயி னைமிச வனமே.

## தெளிவுரை

அரக்கரால் அழியாத, தேவர்களுக்குப் பாதுகாப்பு உடைய தாய், அருளுள்ளம் கொண்ட மாமுனிவர்கள் யாகங்கள் செய்வதற்கு உரியதாகி, உலகில் மேன்மையான தவங்களை எல்லாம் அளிப்பதும், தாவுகின்ற மான்கூட்டங்கள் கலைமான்களோடு பயிலுகின்றதும் நைமிசவனமாகும்

## விளக்கம்

அமரர் - தேவர்
வல் அரணம் - வலிய பாதுகாப்புள்ள இடம்
மரைக்கணம் - மான்கூட்டம்
கலை - கலைமான்.

90. குயில்பி டித்திடக் காகளம் வண்டிசை கூட்ட
மயின டித்திடக் கிள்ளை கண் மங்கலம் பாடப்
பயிலுங் கொன்றைபொன் சொரிந்திட மர்க்கடம் பார்த்துக்
கயில சைத்திடும் பொழில்குலா நைமிசக் கானம்.

## தெளிவுரை

குயில் இசையுறுப்புகளைக் கூர்மையாகப் பிடித்திடவும், வண்டு சுருதிகூட்டவும், மயில் நடிக்கவும், கிளிகள் மங்கலம் பாடப் பயிற்சி செய்யவும், கொன்றை மரம் பொன் சொரியவும், குரங்கு இவற்றைப்பார்த்துப் பிடரியினை அசைத்திடும் சோலை விளங்கும் இடம் நைமிசவனமாகும்.

## விளக்கம்

காகு அளம் - காகு - இசைக்கூறு; அளம் - கூர்மை
இசைகூட்ட - சுருதி கூட்ட
கிள்ளைகள் - கிளிகள்
மர்க்கடம் - குரங்கு
கயில் - பிடரி
அசைத்திடும் பொழில் - அசைப்பதற்கு இடமான சோலை.

91 கோங்கு பாதிரி கொன்றைகா யாவழை குருந்தம்
வேங்கை மாதவி தாதகி சந்தனம் வெள்ளில்
பூங்க ருப்பர மிலவங்கங் குங்குமம் புன்னை
தாங்கு பன்மலர் தந்திடு முனிவரார்ச் சனைக்கே.

## தெளிவுரை

நைமிசாரணியவனம் முனிவர்கள் அர்ச்சனை செய்வதற்கு, கோங்கு, பாதிரி, கொன்றை, காயாமரம், சுரபுன்னை மரம், குருந்த மரம், வேங்கை மரம், குருக்கத்தி, ஆத்தி, விளாமரம், கருப்புரமரம், கிராம்பு, குங்குமம், புன்னை ஆகியவை பல மலர்களைத் தாங்கி அளித்திடும்.

## விளக்கம்

காயா - காயாமரம்
வழை - சுரபுன்னை
மாதவி - குருக்கத்தி
தாதகி - ஆத்தி
வெள்ளில் - விளாமரம்
கருப்புரம் - கருப்புர மரம்
இலவங்கம் - கிராம்பு

92. காம னைக்கொடு காமனை வென்றுகா மனைப்பூ
மாம னைப்பிர மனைவிடா மாமனை துறந்தோர்
சோம னைப்பொடித் தேயரைச் சோமனைத் தலைக்கொள்
சேம னைத்தொழு துறையுநற் சேமனை மிசமே.

## தெளிவுரை

சோலையையே வீடாகக் கொண்டு, மன்மதனை வென்று, கற்பகச் சோலையின் மன்னனாகிய இந்திரனையும், தாமரைப் பூவில் உள்ள திருமகளின் தலைவன் திருமாலையும், பிரமனையும், விட்டு விட்டுச் சிறந்த மனைவியைத் துறந்த முனிவர், திரிபுரங்களாகிய இடங்களைச் சாம்பராக்கிப் பாதிச் சோமனைத் (பிறைச் சந்திரனை) தலையில் அணிந்துள்ள இடபத்திற்குத் தலைவராகிய சிவபெருமானை வணங்கி வாழும் பாதுகாப்பாகிய இடம் நைமிசவனமாகும்.

## விளக்கம்

கா - சோலை
மனைக்கொடு - வீடாகக் கொண்டு
காமனை - மன்மதனை
கா மன்னை - கற்பகச் சோலையின் மன்னனாகிய இந்திரனை
பூ மா மன்னை - தாமரைப் பூவிலுள்ள திருமகளின் தலைவனாகிய திருமாலை
விடா - விட்டுவிட்டு
மாமனை - சிறந்த மனைவி
துறந்தோர் - துறந்த முனிவர்கள்
சோமனை - திரிபுரங்களாகிய இடங்கள்
மனை - இடம்
பொடித்து - சாம்பராக்கி
அரைச்சோமனை - அரைச்சந்திரனை (பிறை நிலவை)
'நைமிசம்' என்பது மடக்கணிபற்றி 'னைமிசம்' என வந்தது.

93. கால ருந்தியுங் காலையுள் ளடக்கியுங் காயத்
தோலின் பற்றறத் தொலைத்துநன் மனுவழி தொடர்ந்தும்
ஆலந் தோய்தரு வனப்பையேய்ந் தைம்பொறி யடக்கிச்
சால யோகியர் போகிபோற் றவஞ்செய்நை மிசமே.

## தெளிவுரை

துறவிகளாகிய யோகம் செய்வோர் காற்றை அருந்தியும் கால்களை அடக்கிக் கொண்டும், காயமாகிய உடல்பற்றை அறுமாறு நீக்கி நல்ல மனுநெறியைத் தொடர்ந்தும், புண்ணிய தீர்த்தத்தில் நீராடி அழகைப் பொருந்தி, ஐம்பொறிகளையும் அடக்கிப் பாம்பைப்போல் மிகுதியாகத் தவம் செய்யும் இடம் நைமிசவனமாகும்.

## விளக்கம்

கால் - காற்று
காலை உள்ளடக்கல் - வெளியில் தோன்றாமல் காலை உள்ளே அடக்கிக் கொள்ளுதல்; யோகியர்க்குக் கொள்ளும்போது, காலடக்கல் யோகாசனத்துள் ஒருவகை.
தோல் - பாம்புச் சட்டை, யோகியர்க்கு உடம்பு
மனு - மந்திரம், மனுஸ்மிருதி
ஆலம் - நஞ்சு, தீர்த்தம்
தோய்தல் - தோய்ந்திருத்தல், நீராடல்
வனப்பை - அழகிய படம், அழகை
ஐம்பொறி - ஞானேந்திரியம் ஐந்து, நொய்யவாகிய புள்ளிகள்.
போகி - பாம்பு

இப்பாடல் யோகிகளுக்கும் பாம்புக்கும் சிலேடையாக அமைந்தது.

94. சத்தி யஞ்சமந் தமமுத லானசற் குணத்தோர்
நித்தி யந்தழன் மூன்றையும் வளர்ப்பவர் நிமலன்
பத்தி யஞ்செழுத் தேமுதற் பன்மனுச் செவிப்போர்
மொய்த்த வந்தண குறைவது நைமிச முளரி.

## தெளிவுரை

வாய்மை, அகக்கரணத்தையடக்குதல், புறக்கரணத்தை அடக்குதல், முதலிய நற்பண்புகளை உடையோர் (துறவிகள்), நாள்தோறும் தீமூன்றையும் வளர்ப்பவர்கள், குற்றமற்ற இறைவன் பக்தியால் ஐந்தெழுத்து முதல், பலமந்திரங்களை உச்சரிப்போர் களாகிய அந்தணர்கள் நிறைந்து வாழும் இடம் நைமிசம் என்னும் காடாகும்.

## விளக்கம்

சமம் - அகக்கரணத்தை அடக்குதல்
தமம் - புறக்கரணத்தை அடக்குதல்
தழல் - தீ
பத்தி - பக்தி, இறையன்பு
மனு - மந்திரம்
செவிப்போர் - ஜபிப்போர், உச்சரிப்போர்
முளரி - காடு.

95. குரங்கு மாதவ முதியவர் குன்றினின் றிழிகால்
இரங்கு மாதவம் படாவகை சத்திர மெடுக்கும்
கரங்க டாவவா னீட்டிடுங் கமண்டலங் கலைத்தோல்
சிரங்கு லாவுறச் சுமந்துபோ நைமிசத் திருக்கான்.

## தெளிவுரை

மாதவம் உடைய முதியதுறவிகள் மலையிலிருந்து இறங்கும்போது மிக்க வெயில் படாதவாறு இரக்கம் கொண்டு குரங்குகள் குடை எடுக்கும்; கரங்கள் தாவ வானுலகை ஈட்ட உதவும் கமண்டலம், மான்தோல் ஆகியவற்றைத் தலைகளில் விளங்குமாறு நைமிசம் என்னும் அழகிய காட்டில் அவை சுமந்து செல்லும்.

## விளக்கம்

இழிகால் - இறங்கும்போது
ஆதவம் - வெயில்
சத்திரம் - குடை
கலைத்தோல் - மான்தோல்

பழம் முதலியவற்றைக் கவர்ந்து செல்லும் குரங்குகள் துறவிகளுக்கு உதவும் உயர்ந்த பண்பு வியக்கத்தக்கது.

96. கரியுஞ் சிங்கமுங் கலைகளும் புலிகளுங் கலந்து
திரியுங் கானெலாந் தேடிநன் மலர்கனி கந்தம்
விரியும் பச்சிலை யுங்கொடு போந்துமெய்த் தவர்கள்
புரியும் வேள்விகாத்திருப்பது நைமிசம் புகலின்

## தெளிவுரை

சொல்வதாயின், யானைகளும் சிங்கங்களும் மான்களும் புலிகளும் கலந்து திரியும்; அவை காடு முழுதும் தேடி நல்ல மலர்கள், கிழங்குகள், விரிந்த பச்சிலைகள் ஆகியன கொண்டுவந்து உண்மையான தவமுனிவர்கள் செய்யும் யாகத்தைக் காத்திருக்கும் வனம் நைமிசம் ஆகும்.

### விளக்கம்

பகையுள்ள விலங்குகள் ஒற்றுமையுணர்வுடன் கூடி முனிவர்களுக்கு உதவும் பாங்கு இப்பாடலில் அமைந்துள்ளது.

கந்தம் - கிழங்கு
கொடுபோந்து - கொண்டுவந்து
புகலின் - சொல்வதாயின்

97. சருக ருந்தியும் வறும்புன லுண்டுமூண் டவிர்ந்தும்
நரக சொர்க்கமார் வினைவழி நடந்துழன் மனமாம்
துரக தத்தினைச் சுழுமுனைக் கால்பிடித் தீர்க்கும்
விரக றிந்தவர் நைமிசத் துறையுமெய்த்தவரே.

### தெளிவுரை

இலையுண்டும் வெறும் தண்ணீரை உண்டும், உணவைத் தவிர்த்தும், நரகத்தையும் சொர்க்கத்தையும் அனுபவிக்கச் செய்யும் தீவினை, நல்வினை நெறிகளில் நடந்து துன்புறும் மனமாகிய குதிரையைச் சுழுமுனைக்காற்றுப் பிடித்து இழுக்கும் உபாயத்தை அறிந்தவர்கள் நைமிசவனத்தில் வாழும் உண்மையான தவமுனிவர்களேயாவர்.

### விளக்கம்

வறும் புனல் - வெறும் தண்ணீர்
ஆர்தல் - அனுபவித்தல்
வினை - தீவினை, நல்வினை
துரகம் - குதிரை
சுழுமுனைக்கால் - சுஷும்நா நாடிவழியே மேற் செல்லும் காற்று; இடைக்கும் பிங்கலைக்கும் நடுவே உள்ளது.
ஈர்க்கும் - இழுக்கும்.
விரகு - உபாயத்தை

98. வேதத் தந்தமு மாகமப் பொருளுமே வினவிச்
சோதித் தொன்றெனத் தெளிந்தவர் சோமசே கரன் பொற்
பாதத் தன்பினர் புராணமீ ரொன்பதும் பகர்ந்த
சூதற் கேவல் செய் விருப்பினர் நைமிசத்துறவோர்.

## தெளிவுரை

உபநிடதமும் ஆகமப் பொருளும் கேட்டறிந்து ஆராய்ந்து அவை இரண்டனையும் ஒன்று என்று தெளிந்தவர், சோமசேகர னுடைய அழகிய திருவடிகளின்பால் அன்புள்ளவர் புராணங்கள் பதினெட்டும் சொன்ன சூதமுனிவருக்குப் பணி செய்யும் விருப்ப முள்ளவர்கள் நைமிசவனத் துறவிகளாவர்.

## விளக்கம்

வேதத்து அந்தம் - உபநிடதம்
சோதித்து - ஆராய்ந்து

99. சடையர் முண்டிதர் சீரையர் வெற்றரை சமைந்த
நடையர் வெண்பொடி புனைந்தவர் நலத்தகண் மணியின்
தொடையர் தண்டினர் கமண்டலந் தூக்கிய கையர்
விடைய வாதனை தணந்தவர் நைமிச மேயார்.

## தெளிவுரை

சடையுடையவர், தலைமழித்தவர், மரவுரிதறித்தவர், நிர்வாணமாக நடக்கும் நடையினர், வெண்திருநீறு அணிந்தவர், நன்மையுடைய உருத்திராக்க மாலையணிந்தவர், தண்டினர், கமண்டலம் ஏந்திய கையினர், பொருள் வருத்தம் (விஷயவருத்தம்) நீங்கியவர்கள் நைமிசவனம் பொருந்தியவர்கள் ஆவர்.

## விளக்கம்

முண்டிதர் - தலை மழித்தவர்
சீரை - மரவுரி
வெறு அரை - நிர்வாணம்
கண்மணியின் தொடையர் - உருத்திராக்க மாலையணிந்தவர்கள்
விடைய வாதனை - விஷய வாசனை
மேயார் - மேவியர்கள், பொருந்தியவர்கள்.

(எழுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்)

100. இத்தகு வனத்திற் சத்திர வேள்வி
யியற்றிடப் பூதலத் துறையும்
மெய்த்தவர் பலரு மவர்பணி செய்து
விளங்குமா ணாக்கரும் வந்து
மொய்த்தனர் வேலை யேழுமோ ரிடத்தின்
முடுகிவந் திறுத்தென வவருட்
சித்திபெற் றுயர்ந்த தபோதனர் பெயருஞ்
சிலவெடுத் தினிவகுத்திடுவாம்.

## தெளிவுரை

இத்தகைய வனத்தில் பலநாட்கள் வேள்வி செய்திட உலகில் வாழும் உண்மையான தவமுனிவர்கள் பலரும் அவர்களுடைய பணிகளைச் செய்து விளங்கும் மாணாக்கர்களும் ஏழுகடல்களும் ஓரிடத்தில் கூடித் தங்கினாற்போல் வந்து சூழ்ந்தனர். அவர்களுள் அணிமாமுதலிய எட்டுவகைச் சித்திகள் பெற்று உயர்ந்த தவமுனி வர்களுடைய பெயர்கள் சிலவற்றை இனி வகுத்துச் சொல்வேன்.

## விளக்கம்

சத்திரவேள்வி - பலநாள் செய்யும் யாகம்
பூதலம் - உலகம்

வேலை- கடல்
இறுத்தென - தங்கினாற்போல
சித்தி - அட்டமாசித்திகள் எட்டு
தபோதனர் - தவத்தையே தனமாகக் கொண்டவர்கள்.

101. பிருகுதுர் வாச னுக்கிர சீலன்
பிருங்கியா பத்தம்பன் சுமதி
அரிதகன் காத்தி யாயனன் கபில
னகத்திய னாரதன் பங்கு
கருணனங் கீர சன்சதா னந்தன்
கலாதரன் விபாண்டகன் கவிப்ப்
புருபரத் துவசன் சுதீக்கணன் காலன்
புதன்சுகன் பண்டிதோத் தமனே.

## தெளிவுரை

பிருகு, துர்வாசன், உக்கிரசீலன், பிருங்கி, ஆபத்தம்பன், சுமதி, அரிதகன், காத்தியாயனன், கபிலன், அகத்தியன், நாரதன், பங்கு, கருணன், அங்கிரசன், சதானந்தன், கலாதரன், விபாண்டகன், கவி, பப்புரு, பரத்துவாசன், சுதீக்கணன், காலன், புதன், சுகன், பண்டிதோத்தமன் ஆகியோரும்,

## விளக்கம்

கவிபப்புரு - கவியும் பப்புருவும்

102. கவுதமன் சாபா லன்சுமந் தரனே
காசிபன் குண்டலன் விருத்தன்
கவுசிகன் போதா யனன்வசு விண்டு
கானன்காண் டிப்பியன் வாரன்

பவுலனத் திரிசுப் பிரன்சர பங்கன்
பராசரன் பக்குவன் பவுமன்
சவுனகன் மாண்ட வியன்பரந் தபன்சற்
சரன்சத்தி முற்கலன் கணுவன்.

## தெளிவுரை

கவுதமன், சாபாலன், சுமந்தரன், காசிபன், குண்டலன், விருத்தன், கவுசிகன், போதாயனன், வசு, விண்டு, கானன், காண்டிப்பியன், வாரன், பவுலன், அத்திரி, சுப்பிரன், சரபங்கன், பராசரன், பக்குவன், பவுமன், சவுனகன், மாண்டவியன், பரந்தபன், சற்சரன், சத்தி முற்கலன், கணுவன் ஆகியோரும்.

103. வாமதே வன்றே வலன்பருப் பதன்கை
வல்லியன் சங்கமன் சுமனன்
சாமதக் கினிசா தாதப னிரதி
தன்சம தக்கினி சயனே
தூமபன் கால வன்பாச தரனே
தூயசத் தியனிவர் முதலா
ஏமுறும் பலவே றுருவினார் பலரு
மெய்தியாங் கிருக்குமேல் வையினில்

## தெளிவுரை

வாமதேவன், தேவலன், பருப்பதன், கைவல்லியன், சங்கமன், சுமனன், சாமதக்கினி, சயன், தூமபன், காலவன், பாசதரன், தூயசத்தியன் ஆகிய மற்றவர்களும் இன்பம் அடையும் பல்வேறு உருவினர் பலரும் இருக்கும் நாளில்,

## விளக்கம்

ஏமுறும் - ஏமம் உறும், இன்பம் அடையும்
ஏல்வை - காலம், நாள், பொழுது

104. செஞ்சடை யசைய வெண்பொடி மேனி
திங்களி னிளநிலா வெறிப்ப
வஞ்சனை யகற்று மக்கமா மணித்தாழ்
வடந்திரு மார்பிடைப் புரள
விஞ்சிய செங்கற் றோய்த்தபூங் காவி
வேட்டியு மரையினில் விளங்க
உஞ்சிட வுலகம் புராணமீ ரொன்ப
துரைத்திடு சூதனு மடுத்தான்.

## தெளிவுரை

சிவந்த சடை அசையவும் வெண்திருநீறு அணிந்த உடல், திங்களின் இளநிலா (பிறைநிலா) வீசவும், வஞ்சனையைப் போக்கும் உருத்திராட்சமாலை அழகிய மார்பினில் புரளவும், உயர்ந்த காவிக் கல்லில் தோய்க்கப்பெற்ற அழகிய காவி வேட்டியும் இடையில் விளங்கவும், உலகம் உய்யப் புராணங்கள் பதினெட்டும் உரைக்கும் சூதனும் வந்தடைந்தான்.

## விளக்கம்

வெண்பொடி - வெண்திருநீறு
இளநிலா - பிறைநிலா
எறிப்ப - வீசவும்
அக்கமாமணித்தாழ்வடம் - உருத்திராட்ச மாலை
செங்கல் - காவிக்கல்
விஞ்சிய - மிகுதியான
உஞ்சிட - உய்ந்திட
அடுத்தான் - அடைந்தான், சேர்ந்தான்

105. தொக்கமா தவர்க ளனைவரு மெழுந்து
சூதனை யெதிர்கொடு பணிந்து
மிக்கவா தனத்தி லிருத்தியா கமத்தின்
விதித்திடு பூசனை புரிந்து
துக்கவா தனையைத் தீர்த்திடு புராணஞ்
சொற்றிடு நற்றவ வென்று
தக்கவர் புகழ்ந்து மகிழ்வெனுங் கடலுட்
டாழ்ந்துதாழ்ந் தெழுந்திது புகல்வார்.

## தெளிவுரை

கூடியிருந்த மிக்கதவமுனிவர்கள் அனைவரும் எழுந்து சூதனை எதிர்கொண்டு வணங்கி, உயரிய இருக்கையில் இருத்தி, ஆகமத்தில் விதிக்கப்பட்டுள்ள பூசனைகளைச் செய்து, ''துன்ப வேதனைகளைப் போக்கும் புராணங்கள் கூறுக நல்ல தவமுடைய வரே!'' என்று தகுதியுடைய முனிவர்கள் புகழ்ந்து மகிழ்ச்சி என்னும் கடலுள் மூழ்கி மூழ்கி எழுந்து இதனைக் கூறலாயினர்.

## விளக்கம்

தொக்க - கூடிய
மாதவர்கள் - மிக்க தவம் உடையவர்கள்
எதிர்கொடு - எதிர்கொண்டு
மிக்கவாதனம் - உயரிய ஆசனம், உயரிய இருக்கை
துக்கவாதனை - துன்ப வேதனை
சொற்றிடு - சொல்லுக
தாழ்ந்து தாழ்ந்து - மூழ்கி மூழ்கி.

106. நிகமவா கமங்க ளனைத்தையு முணர்ந்தீர்
நீரறி யாததொன் றில்லை
இகழ்விலீ ரொன்பான் புராணமீ ரொன்பான்
மிருதிநீ ரியம்பநன் குணர்ந்தோம்

துகளிலா வுமது முகாரவிந் தத்திற்
றோன்றிய கதாரச வமுதைத்
திகழும்வார் செவியாற் புசித்தினி திரந்துந்
திருத்தியொன் றிலமிது வரையும்

## தெளிவுரை

வேத ஆகமங்கள் எல்லாவற்றையும் உணர்ந்தவரே! நீங்கள் அறியாதது ஒன்றும் இல்லை; இகழ்ச்சி இல்லாதவரே! பதினெட்டுப் புராணங்களையும் ஸ்மிருதியும் நீங்கள் சொல்ல நன்றாக அறிந்தோம். குற்றமில்லாத உங்களது முகமாகிய தாமரையில் தோன்றிய கதைச் சுவை அமுதத்தை விளங்கும் நீண்ட காதுகளால் உண்டு இனிமையாக இருந்தும் இதவரையிலும் மனநிறைவு இல்லை.

107. முன்னநீ ருரைத்த கதைகளிற் றணிகை
முதுகிரி மான்மிய மெவற்றும்
உன்னிடி னதிக ரகசிய மென்ன
வுரைத்தனிர் யாமது கேட்பான்
மன்னிய வார்வ மிக்குளோ மின்னு
மற்றதை விரித்துரைத் திடுமென்
றன்னமா முனிவர் வினவலு மகிழ்வுற்
றறைகுவன் சூதமா முனியே.

## தெளிவுரை

முன்பு நீங்கள் கூறிய கதைகளில் முதிய தணிகை மலை மான்மியம் எங்கும் எண்ணிப் பார்த்தால், மிகுதியான மறைபொருள் என்ன சொன்னீர்கள்? அதனைக் கேட்டருள நிலைபெற்ற ஆர்வ மிகுதியுடன் உள்ளோம்; அதனை விரிவாகக்கூறுங்கள்!'' என்று அத்தகைய மாமுனிவர்கள் கேட்கவும் மகிழ்ச்சியடைந்து சூதமா முனி சொல்லலானான்.

## விளக்கம்

அதிகரகசியம் - மிக்க இரகசியமாக உள்ளது
உன்னிடில் - எண்ணிப்பார்த்தால்
கேட்பான் - கேட்பதற்கு
மன்னிய - நிலைபெற்ற
மிக்குளோம் - மிகுதியாக உள்ளோம்
அன்ன - அத்தகைய

108. இந்தநற் கதையை ஞாபகஞ் செயலா
லிருடிகா ணீவிரும் யாமும்
உந்திய வுலகிற் றன்னிய ரானோ
மொருவரு மிதன்சிறப் புணரார்
புந்தியி னினைப்போர் பவமெலா நீங்கிப்
புத்தியு முத்தியு மடைவார்
சந்தத நீல மலர்கிரிச் சிறப்புச்
சதகோடி கிரந்தமுண் டாமால்.

## தெளிவுரை

இந்த நல்ல கதையை நினைவு கொள்வதனால், தவ முனிவர்களே! நீங்களும் யாமும், உயர்ந்த உலகில் நற்பேறுடைய வர்கள் ஆனோம்; ஒருவரும் இதன் சிறப்பை உணர மாட்டார்கள்; மனத்தில் நினைப்பவர்கள் பிறப்பனைத்தும் நீங்கி அறிவும் வீடு பேறும் அடைவார்கள். எப்பொழுதும் நீலோற்பலம் இந்திர தீர்த்தத்தில் மலர்கின்ற மலையின் சிறப்பைக் குறித்து நூறு கோடிச் சாத்திரங்கள் உள்ளன.

## விளக்கம்

ஞாபகம் - நினைவு
இருடிகாள் - முனிவர்களே!

நீவிர் - நீங்கள்
உந்திய - உயர்ந்த
தன்னியர் - நற்பேறு பெற்றவர்
புந்தி - புத்தி, மனம்
பவம் - பிறப்பு
முத்தி - முக்தி, வீடுபேறு
சந்ததம் - எப்பொழுதும்
நீலமலர்கிரி - நிலோற்பல மலர் இந்திரதீர்த்தத்தில் மலரும் மலை, தணிகைமலை.
சதகோடி - நூறுகோடி
கிரந்தம் - சாத்திரங்கள்

109. என்றுமோர் கொடியின் மூன்றுபைங் குவளை
யெழின்மலர் தனித்தனி யாகத்
துன்றுமுப் போது மலர்தலா லிதனைச்
சொல்வர்கல் லாரவெற் பெனவே
சென்றெவ ரேனுந் தெரிசனம் புரிந்தோர்
தீவினை யாவுநீக் கிடலால்
குன்றம்யா வினுக்குஞ் சிரேட்டமித் தணிகைக்
குன்றெனப் புகன்றிடப் படுமால்.

## தெளிவுரை

என்றைக்கும் ஒரு கொடியில் மூன்று பசிய அழகிய நீலோற்பல மலர்கள் தனித்தனியாக அடுத்தடுத்து மூன்று வேளைகளில் மலர்தலால், இத்தணிகைமலையைக் 'கல்லாரவெற்பு' (கல்லார மலை) என்று சொல்வார்கள். சென்று எவராவது தரிசனம் செய்தால் அவருக்குத் தீய வினைகள் எல்லாவற்றையும் நீக்குவதனால், மலைகள் எல்லாவற்றையும் விட மேன்மையானது தணிகைமலை என்று சொல்லப்பெறும்.

## விளக்கம்

பைங்குவளை - பசிய நீலோற்பலமலர்
துன்ற - அடுத்து, நெருங்கி
கல்லாரவெற்பு - நீலோற்பலமலை
தெரிசனம் - காட்சி, காணுதல், தரிசனம்
சிரேட்டம் - முதன்மை, மேன்மை, சிறந்தது.

110. மலைகளின் மேரு பறவைபிற் கருடன்
வருணத்திலந்தணர் வித்தை
பலவினுஞ் சுருதி யொளியுடை யோரிற்
பாற்கர னொளிகளி லிந்து
சமலதிற் கங்கை புருடரில் விண்டு
சந்தசிற் காயத்ரி மனுவே
இலையுடை மரத்தி லரசுயோ கியரி
லெழில் பெறு சனகரா மியம்பின்.

## தெளிவுரை

சொல்வதாயின் மலைகளில் மேருவாகவும், பறவைகளில் கருடனாகவும், வருணத்தில் அந்தணராகவும், கலைகள் பலவற்றிலும் ஸ்மிருதி அறிவு உடையோருள் பாஸ்கரனாகவும், ஒளிகளில் நில வாகவும், நீர்களுள் கங்கையாகவும், புருடர்களுள் திருமாலாகவும், சந்தஸில் காயத்ரி மந்திரமாகவும், இலைகளையுடைய மரங்களில் அரசமரமாகவும், யோகியர்களுள் அழகுடைய சனகராகவும் தணிகை யைப்பற்றிப் புகழ்ந்து சொல்லலாம்.

## விளக்கம்

வருணம் - குலம்
வித்தை - கலை
சுருதி - ஸ்மிருதி

ஒளி - அறிவு
பாற்கரன் - பாஸ்கரன்
இந்து - நிலவு, சந்திரன்,
சலம் - நீர்
விண்டு - விஷ்ணு, திருமால்
காயத்ரிமனு - காயத்ரி மந்திரம்
இயம்பின் - சொல்வதாயின்.

111. பத்தரி னந்தி கேசுரன் றேவர்
பலரினு மதிகர்மா தேவர்
சத்திய மதுபோல் வரையிற்கல் லார
சயிலமுத் தமமதைக் கண்டோர்
முத்தியை யடைவ ரிக்கதை பிரமன்
மொழிந்தன னாரதற் கவனும்
வித்தக வியாதற் குரைத்தனன் வியாதன்
விளம்பின னெனக்கதை யுரைப்பேன்.

## தெளிவுரை

பக்தர்களில் நந்திகேசுரன், தேவர்கள் பலரைவிட உயர்ந்தவர் மகாதேவராகிய சிவபெருமான் என்பன உண்மை; அதுபோல், மலைகளில் கல்லாரமலை முதன்மையானது; அதனைக் கண்டோர் வீடுபேறு அடைவர்; நாரதருக்கு இக்கதையைப் பிரமன் சொன்னான்; நாரதனும் அறிஞர் வியாசருக்கு உரைத்தனன்; வியாசன் சொன்னான் என்று கதைசொல்வேன்.

## விளக்கம்

அதிகர் - உயர்ந்தவர்
வரை - மலை
சயிலம் - மலை

உத்தமம் - முதன்மை
முத்தி - முத்தி, வீடுபேறு
மொழிந்தனன் - சொன்னான்
வித்தகர் - அறிஞர்
வியாதன் - வியாசன்
விளம்பினன் - சொன்னான்

(கலி விருத்தம்)

112. என்று சூத னிருடியர் தங்களுக்
கன்று கூறுங்கல் லார கிரிவளம்
இன்றி யானு மிசைக்கலுற் றேன்புவி
ஒன்று மானிடர் யாரு முணரவே

## தெளிவுரை

என்று சூதன் முனிவர்களுக்கு அன்று கூறிய கல்லாரமலையின் வளத்தை இன்று யானும் உலகில் உள்ள மக்கள் அனைவரும் உணருமாறு சொல்லலானேன்.

## விளக்கம்

இருடியர் - முனிவர்கள்
கிரி - மலை
இசைக்கலுற்றேன் - சொல்லலானேன்
ஒன்றுமானிடர் - உள்ள மக்கள்
யாரும் - எவரும், எல்லோரும்

# 7. கல்லாரகிரி மான்மிய அத்தியாயம்

(கதைச்சுருக்கம் : ஒருபோது நாரதர் சத்தியலோகம் சென்று தம் தந்தையாகிய நான்முகனிடம், ''முன்னர் தணிகாசலத்தலப் பெருமையைச் சுருக்கமாகச் சொன்னீர்கள்; அதனை விரித்துரைக்க வேண்டும்.'' என்று வேண்ட, அவரும், தணிகாசலத்தலப் பெருமை, அங்குள்ள முருகரின் சிறப்பு, அத்தலத் தீர்த்தங்களின் சிறப்பு ஆகியவற்றை உரைத்தார்.)

(கலி விருத்தம்)

113. முன்னொர் காலத்தின் முற்றுணர் நாரதன்
மின்னு சத்திய லோகத்தின் மேவியே
தன்னை யீன்ற பிதாவடி தாழ்ந்தெழீஇ
அன்ன வூர்தியை நோக்கி யறைகுவான்.

## தெளிவுரை

முன்னொரு காலத்தில் முற்றுமறிந்த நாரதன் மின்னுகின்ற பிரமலோகத்திற்குச் சென்று தன்னைப் பெற்ற தந்தையின் திருவடிகளை வணங்கி எழுந்து, அன்ன ஊர்தியையுடைய பிரமனைப் பார்த்துச் சொல்லலானான்.

## விளக்கம்

மேவி - பொருந்தி
தாழ்ந்து எழீஇ - வணங்கி எழுந்து
அன்னவூர்தி - அன்னத்தை ஊர்தியாகக் கொண்ட பிரமன்

114. எந்தை நீமுன் னியம்பிடக் கேட்டனன்
உந்து சிரகிலாண்டவுற் பத்தியும்
தந்த மேன்மைத் தலங்களுந் தீர்த்தமும்
விந்தை யான சகலவிர்த் தாந்தமும்

## தெளிவுரை

எம் தந்தையே! உயர்ந்த சிறந்த எல்லா உலக அண்டங்களின் தோற்றமும் தந்த உயர்ந்த தலங்களும், தீர்த்தங்களும், அற்புதமான எல்லாவரலாறுகளும் பற்றி முன்னர் நீ சொல்லக் கேட்டேன்.

## விளக்கம்

எந்தை - எம்தந்தையே!
இயம்பிட - சொல்ல
உந்து - உயர்ந்த, எழுகின்ற
அகில - எல்லா உலகங்கள்

115. ஓதும் புண்ணிய மோங்கு தலங்களுட்
காத லாகிக்கல் லார கிரியமர்
சோதி கந்த சுவாமிதன் மான்மியம்
ஆதி சூக்கும மாக வறைந்தனை.

## தெளிவுரை

சொல்லப்பெறும் புண்ணியம் ஓங்கிய தலங்களுள் அன்புடையவராகிக் கல்லாரகிரியில் அமர்ந்துள்ள சோதியாகிய கந்த சுவாமியின் மகிமையை முதலில் சுருக்கமாகக் கூறினை.

### விளக்கம்

காதலாகி - அன்புடையவராகி
கல்லாரகிரி - தணிகைமலை
மான்மியம் - மகிமை, வரலாறு
ஆதி - முதலில்
சூக்குமமாக - சுருக்கமாக

116. சுருக்க மாமுனஞ் சொல்லிய வக்கதை
விரித்துக் கேட்க விரும்பினன் யானதை
அருத்தி யோடும் விரித்திங் கறைகவென்
றுரைப்ப நாரத னோதும் பிதாமகன்

### தெளிவுரை

நாரதன், ''சுருக்கமாக முன்னர் சொல்லிய அக்கதையை விரிவாக யான் கேட்க விரும்புகிறேன்; இங்கு விரிவாகக் கூறுக'' என்று நாரதன் இரந்து கேட்கவும் பிரமன் சொல்லலானான்.

### விளக்கம்

முனம் - முன்னர்
அருத்தி - இரந்து
பிதாமகன் - பிரமன்

117. கந்தர் மேவுகல் லார கிரிவளம்
அந்த மாதிகண் டியாரறை கிற்பவர்
மைந்த கேட்கும் வலியினர் யாருளர்
எந்த லோகத்து மியாவரு மில்லையே.

## தெளிவுரை

கந்தர் பொருந்தியுள்ள கல்லாரகிரியாகிய திருத்தணிகை மலையின் வளம், அழகு, ஆதி ஆகியவற்றைக் கண்டு சொல்லக் கூடியவர் யார்? மைந்தனே! கேட்கும் வலிமையுள்ளவர்கள் யார் உள்ளனர்? எந்த உலகத்திலும் எவரும் இல்லையே.

## விளக்கம்

மேவு - பொருந்தும்
அந்தம் - முடிவு
ஆதி - தொடக்கம்

118. விரிந்த நூற்றுறை மேவிய பத்தியாற்
பரிந்து கேட்கும் பரிசுளை யாதலாற்
புரிந்த மாதவப் புத்திர னேயெனாற்
றெரிந்த மாத்திரஞ் செப்புவன் கேட்டியால்

## தெளிவுரை

விரிவான நூல்களின் துறைகளில் பொருந்திய அன்பினால் பரிவுடன் கேட்கும் தன்மை உடையாய் ஆதலால், மாதவம் செய்த மகனே! எனக்குத் தெரிந்த அளவு மட்டும் சொல்வேன்; கேட்பாயாக!

## விளக்கம்

நூற்றுறை - நூல்களின் பகுதிகள்
மேவிய - பொருந்திய
பத்தி - அன்பு
பரிந்து - அன்புடன், பரிவுடன்
பரிசு உளை - தன்மை உடையாய்

(அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்)

119. கல்லார கிரிச்சிகரங்காதலுடன் றெரிசித்தோர்
கசிந்து சென்று
வில்லாரும் பைங்கழுநீர் மேவிவளர் பூஞ்சுனையை
விரும்பிப் போற்றிச்
சொல்லாலு மனத்தாலுந் தொடரவொணாச் சண்முகரைத்
தொழப்பெற்றோர்கள்
எல்லாருங் கந்தவுல கெய்திடுவ ரினிப்பிறவி
யில்லைத் தானே

## தெளிவுரை

கல்லாரமலையின் உச்சியைக் காதலுடன் (அன்புடன்) தரிசனம் செய்தவர்கள் உள்ளம் உருகிச் சென்று, கொடியில் நிறைந்த பசிய குவளை மலர்கள் பொருந்தி வளரும் அழகிய இந்திர தீர்த்தத்தை விரும்பிப் போற்றிச் சொல்லாலும் மனத்தாலும் தொடர முடியாத சண்முகரைத் துதிக்கப்பெற்றவர்கள் எல்லோரும் கந்தனுடைய மேலுலகம் அடைவர்; இனிப் பிறவியே இல்லை.

## விளக்கம்

கசிந்து - மனம் உருகி
வில் - கொடி
பூஞ்சுனை - இந்திர தீர்த்தம்
தொடரவொணா - தொடர முடியாத

120. துகளறுசுப் பிரமணியர் தோத்திரத்தைச் சந்நிதியிற்
றொழுது போற்றிப்
புகழ்பெறவே படித்தாலுங் கேட்டாலு மொருவருக்குப்
போதித் தாலும்
மகிழ்வுபெற வரைந்தாலும் வரைபவர்க்குக் கூலிதந்து
வரைவித் தாலும்
அகலிடத்தின் மிகவாழ்ந்திட் டந்தியத்திற் கந்தவுல
கடைவர் மன்னோ

## தெளிவுரை

குற்றமற்ற சுப்பிரமணியர் பற்றிய துதிப்பாடல்களைச் சந்நிதியில் வணங்கிப் போற்றிப் புகழுடையப் படித்தாலும் கேட்டாலும் ஒருவருக்குப் போதித்தாலும், மகிழ்ச்சியையடைய எழுதினாலும், எழுதுபவருக்குக் கூலி கொடுத்து எழுதுவித்தாலும் அகன்ற இடமாகிய அதிகநாள் வாழ்ந்து முடிவில் கந்தனுடைய உலகை அடைவர்.

## விளக்கம்

துகளறு - குற்றமற்ற
தோத்திரம் - துதிப்பாடல்
சந்நிதி - திருக்கோயில்
வரைதல் - எழுதுதல்
அகலிடத்தில் - அகன்ற இடமாகிய உலகில்

121. வருதணிகா சலமெனும்பேர் மன்னிவளர் கல்லார
வரையி லெய்தி
ஒருகணமாத் திரம்வாச முற்றிருந்தோர் யாரேனு
முயர்ந்த சேடன்
சிரமணியாற் றாங்கியிடுஞ் செகதலமெலாம்புரந்து
செங்கோ லோச்சிப்
பெருமணிமா முடிதாங்கி யிந்திரன்போல் வாழ்ந்திருப்பர்
பிணியு றாரே.

## தெளிவுரை

'தணிகாசலம்' என்னும் பெயர் நிலைபெற்று வளருகின்ற கல்லாரமலையை அடைந்து ஒரு கணநேரம் மட்டும் வாழ்ந்தவர்கள் எவராயினும் உயர்ந்த ஆதிசேடன் தலைகளாகிய வரிசைகளால்

தாங்கப்பெறும் உலகம் முழுதும் பாதுகாத்துச் செங்கோல் உயர்த்திப் பெரிய அழகிய முடியை (கிரீடம்) அணிந்து இந்திரனைப் போல் வாழ்ந்திருப்பர்; நோய் அடையமாட்டார்கள்.

## விளக்கம்

மன்னி - நிலைபெற்று
கல்லாரவரை - நீலோற்பலமலை, தணிகை மலை.
சேடன் சிரம் அணி - ஆதிசேடனுடைய ஆயிரம் தலைகளின் வரிசை
செகதலம் - உலகம்
புரந்து - பாதுகாத்து.

122. கல்லாதா ரானாலுங் கடுங்கொலைஞ ரானாலுங்
கருணை சற்றும்
இல்லாதா ரானாலும் யாரேனுந் தணிகைவரை
யெய்தி நீல
மல்லாருஞ் சுனையினையுங் கந்தரையுங் கண்டொருகால்
வணங்கி னாரேல்
பொல்லாத பாதகங்க ளனைத்தினையு மக்கணமே
போக்கு வாரே.

## தெளிவுரை

கற்காதவர் ஆயினும், கொடிய கொலைஞர் ஆயினும், அருள் தன்மை சிறிதும் இல்லாதவர் ஆயினும், எவராயினும் தணிகை மலையை அடைந்து, நீலோற்பலமலர் மலரும் இந்திரதீர்த்தம் என்னும் சுனையினையும், முருகனையும் கண்டு ஒரு முறை வணங்கு வாராயின், பொல்லாத பாதீகங்கள் எல்லாவற்றையும் அந்தக் கண நேரத்திலேயே போக்கிக் கொள்வார்.

## விளக்கம்

நீலமல்லாருஞ் - நீலம் + மல்லாரும்
நீலம் - நீலோற்பல மலர், குவளை மலர்

'மல்லாரும்' என்பது 'மலரும்' என்னும் சொல் எதுகை நோக்கி அவ்வாறு அமைக்கப் பெற்றது.

'சுனை' என்பது இங்கு குவளை மலர்கள் மலரும் இந்திர தீர்த்தத்தைக் குறிக்கிறது.

123. கார்த்திகையிற் கார்த்திகைசேர் பூரணையிற் கல்லார
கிரியிற் கந்த
மூர்த்தியுருத் தெரிசித்தோ ரந்தணரா யெழுபிறவி
முறையிற் றோன்றி
ஆர்த்திபெறு மைசுவர்ய முடையவரா யாரணங்க
ளனைத்து மோர்ந்து
கீர்த்தியுடன் மிகவாழ்ந்து கந்தவுல கினையடைவர்
கீழ்ப்ப டாரே.

## தெளிவுரை

கார்த்திகை மாதத்தில் கார்த்திகை நட்சத்திரம் சேர்ந்த பௌர்ணமியில், கல்லாரகிரி என்னும் தணிகை மலையில், திரு முருகனுடைய வடிவத்தைத் தெரிசித்தோர் அந்தணர்களாக முறை யாக ஏழு பிறவிகளில் பிறந்து, விரும்பிய பொருள்களைப்பெறும் செல்வம் உடையவர்களாக மந்திரச் சொற்களாகிய மறைகளை ஆராய்ந்து மிக்க புகழுடன் வாழ்ந்து, முருகனுடைய மேல் உலகினை அடைவர்; கீழ்ப்பட்ட மண்ணுலகினையடைய மாட்டார்கள்.

## விளக்கம்

கார்த்திகை - கார்த்திகை மாதம்
பூரணை - பௌர்ணிமி

ஆர்த்தி - விரும்பிய பொருள்களை
ஆரணங்கள் - மந்திரச் சொற்கள், மறைகள்
கீர்த்தி - புகழ்
கந்த உலகு - அனுத்திரள்கள் அமைந்த உலகு, முருகனுடைய மேலுலகு
கீழ்ப்படார் - கயவர் ஆகார், மண்ணுலகு அடைய மாட்டார்கள்.

124. திங்கடொறுந் திங்கடொறும் வருமமா வாசையினுஞ்
செறிந்த விந்து
பொங்குகலை பதினாறு நிறைந்திடுபூ ரணைதனிலும்
புக்குச் சென்று
மங்குறொடுந் திருத்தணிகை வரைமிசை வாழ் முருகர்திரு
வடிவைக் கண்டோர்
அங்கவர்சா ரூபமும்பெற் றழகுவளர் கந்தவுல
கடைவர் மாதோ.

## தெளிவுரை

ஒவ்வொரு மாதத்திலும் வருகின்ற அமாவாசை நாளிலும், செறிந்த நிலவு பெருகுகின்ற கலைகள் பதினாறும் நிறையும் பௌர்ணமியிலும் புகுந்து சென்று மேகமண்டலத்தைத் தொடுகின்ற திருத்தணிகை மலையின் மீது வாழ்கின்ற முருகருடைய திருவடிவைக் கண்டவர்கள், அங்கு அவர்கள் கடவுள் வடிவமடைந்து அழகு வளரும் கந்தனது மேலுலகினை அடைவர்.

## விளக்கம்

இந்து - நிலவு
பொங்குகலை - பெருகுகின்ற நிலவின் பிறைகள், வளர்பிறைகள்
புக்கு - புகுந்து
சாரூபம் - கடவுள் வடிவம்

125. அனுதினமுங் கல்லார கிரியிலடைந் தறுமுகவர்
சந்நி தானத்
தினியமறை யோதிடினு மந்திரங்கள் செபித்திடினு
மிறைவர் பாதம்
மனதிலுற நினைத்தடியை வணங்கிடினு முன்செயும் வல்
வினைகள் யாவும்
தினகரன்முன் பனிபோல நீங்கியறு முகருலகஞ்
சேர்கு வாரே

## தெளிவுரை

நாள்தோறும் திருத்தணிகை மலையை அடைந்து, ஆறுமுகங்களைக் கொண்டவருடைய கருவறையில் இனிய மறையை ஓதினாலும், மந்திரங்களை உருவேற்றினாலும் முருகருடைய திருவடிகளை மனதில் பொருத்தி நினைத்து அவர் திருவடிகளை வணங்கினாலும், முன்னர் செய்த தீய வினைகள் எல்லாம் சூரியனுக்கு முன்னால் பனிநீங்குதல் போல் நீங்கி, ஆறுமுகருடைய உலகினை அடைவர்.

## விளக்கம்

சந்நிதானம் - கருவறை, மூலத்தானம்
செபித்தல் - உறுவேற்றுதல்
வல்வினைகள் - தீயவினைகள்
தினகரன் - சூரியன், ஞாயிறு

126. சங்கொலியும் புள்ளொலியுந் தணவாத சரவணதீர்த்
தத்தின் மூழ்கிப்
பொங்குதிரு நீறணிந்து கண்மணித்தாழ் வடமார்பிற்
புனைந்து கொண்டு
செங்கைமுடி மிசைக்கூப்பித் தோத்திரஞ்செய்
தன்பினொடுஞ்
சென்று நீலம்
தங்குதணி கேசரடி பணிந்தவரக் கணந்தீமை
தணந்திட் டாரே.

## தெளிவுரை

சங்கின் ஒலியும் பறவைகளின் ஒலிகளும் நீங்காத சரவணப் பொய்கையில் மூழ்கிப் பெருகுகின்ற திருநீறு அணிந்து, உருத்திராக்கமாலையினை மார்பில் அணிந்து கொண்டு சிவந்த கைகளைத் தலைமுடிமீது கூப்பி வணங்கி, அன்புடன் (பக்தியுடன்) சென்று குவளைமலர்கள் தங்கியுள்ள தணிகேசர் திருவடிகளைப் பணிகின்றவர்கள் அந்தக் கண நேரத்தில் தீமை நீங்கியவர்கள் ஆவர்.

## விளக்கம்

புள் - பறவை
தணவாத - நீங்காத
சரவணதீர்த்தம் - சரவணப்பொய்கை
கண்மணித்தாழ்வடம் - உருத்திராக்க மாலை
மிசை - மேலே
தோத்திரம் - வணக்கம்
நீலம் - நீலோற்பல மலர், குவளை மலர்

127. சமுசார துக்கமெலாந் தணந்திடுகா ரணமாகிச்
சாற்று மன்பர்க்
கெமராசன் சமர்நீக்கும் வீரவா ளெனுந் தணிகை
யிளையோ னாமம்
அமராசை யொடுஞ் செபிப்போ ரளவிறந்த நாட்போக
மனைத்துந் துய்த்து
நமராலு மறிவரிய கந்தவுல கடைகுவர்நா
ரதகே ளின்னும்

## தெளிவுரை

இல்லறத்துன்பங்கள் எல்லாம் நீங்கும் காரணம் ஆகி, சொல்லுகின்ற அன்பர்களுக்கு, எமதர்மன் போர் நீக்கும் வீரவாள்

எனப்பெறும் தணிகை இளையோனாகிய முருகனுடைய பெயரை விருப்பத்துடன் உருவேற்றுகின்றவர்கள் அளவில்லாத நாட்கள் இன்பங்கள் அனைத்தும் அனுபவித்து, நம்மவர்களாலும் அறிவதற்கு அரிய கந்த உலகினை அடைவார்கள். நாரத! இன்னும் கேட்பாயாக!

## விளக்கம்

சமுசாரம் - இல்லறம்
தணந்திடு - நீங்கும்
சமர் - போர்
அமர் - விருப்பம்
செபிப்போர் - உருவேற்றுவோர்
போகம் - இன்பம்
துய்த்து - அனுபவித்து
நமர் - நம்மவர்

128. அந்தவரை யடித்தலத்தி லேனுமறு முகவரா
லயத்தி லேனும்
சிந்தையொரு மித்தவரா யொரு முகுர்த்தந் தலவாசஞ்
செய்த பேர்கள்
முந்தியசென் மங்கடொறும் புரிந்திடுமா பாதகங்கள்
முழுதும் நீங்கிச்
சந்ததமு மழியாத கந்தசா யுச்சியத்தைச்
சார்கு வாரே.

## தெளிவுரை

அந்தமலையின் அடிவாரத்திலாயினும் ஆறுமுகர் திருக் கோயிலில் ஆயினும் மனம் ஒருமித்தவர்களாக ஒரு முகூர்த்தநேரம் (இரண்டு நாழிகை நேரம்) அந்த இடத்தில் உறைந்தவர்கள் முன் பிறவிகளில் செய்த பெரிய பாதகச் செயல்கள் முற்றும் நீங்கி

எப்போதும் அழியாத கந்தனோடு இணையும் வீடுபேறு அடைவார்கள்.

## விளக்கம்

முகுர்த்தம் - முகூர்த்தம், இருநாழிகை நேரம்
சந்ததமும் - எப்போதும்
சாயுச்சியம் - ஒன்றிப்பு, கடவுளோடு இணைதல், மோக்கம்

129. ஒரு தரங்கல் லாரகிரி மிசையேறிச் சண்முகரை
யுவந்து போற்றித்
தெரிசனஞ்செய் வோர்சகல தீர்த்தமா டியபலனுஞ்
செகத்தின் மேலோர்
அருமைபெற விதித்தபல விரதநோற் றிடுபலனு
மடைவ ரீது
சரதமென நம்பினர்க்கே பலித்திடுமை யுற்றவர்பாற்
சார்ந்தி டாவே.

## தெளிவுரை

ஒருமுறை தணிகைமலையின்மீது ஏறிச் சண்முகரை மகிழ்ந்து வணங்கித் தெரிசனம் செய்தவர்கள், அனைத்துப் புண்ணிய தீர்த்தங்களிலும் நீராடிய பலனும், உலகத்தின் சான்றோர்கள் அருமையுடன் விதித்த பல விரதங்கள் நிலைநிறுத்திச் செய்த பலன் களையும் அடைவர்; இது உண்மை என்று நம்பியவர்களுக்கே பலிக்கும்; ஐயம் அடைந்தவர்களிடம் பொருந்தாது.

## விளக்கம்

செகம் - உலகம்
நோற்றல் - பொறுத்தல், நிலைநிறுத்தல்
சரதம் - உண்மை

130. அத்தணிகைச் சண்முகவர் சந்நிதியி லதிதிகட்கு
மந்த ணர்க்கும்
பத்தியுடன் சங்கமர்க்கு மன்னதா னங்கொடுத்தாற்
பால்வெண் ணீற்று
நித்தபரி பூரணர்க்கு மெனக்குமெனை முன்னீன்ற
நெடுமா லுக்கும்
சத்தியுமை வாணிதிரு முதலினர்க்குந் திருத்தியெனச்
சாற்றும் வேதம்.

## தெளிவுரை

அந்தத் தணிகை முருகர் திருக்கோயிலில் பரதேசிகளுக்கும் அந்தணர்களுக்கும் வீரசைவ அடியார்களுக்கும் அன்னதானம் அளித்தால், பால்போல் வெண்திருநீறணிந்த நிலைத்த முழு முதற் கடவுளாகிய சிவபெருமானுக்கும் எனக்கும் என்னை முன்னர் பெற்றெடுத்த திருமாலுக்கும், சத்தியுமையாகிய பார்வதிக்கும், கலைமகளுக்கும், திருமகளுக்கும், மற்றும் பிறருக்கும் மனநிறைவு ஏற்படும் என்று மறைகள் சொல்லும்.

## விளக்கம்

சந்நிதி - கருவறை
அதிதி - பரதேசி, விருந்தினன்
சங்கமர் - வீரசைவ அடியார்
நித்தபரிபூரணர் - சிவபெருமான்
சத்தியுமை - பார்வதி
வாணி - கலைமகள்
திரு - திருமகள்
திருத்தி - திருப்தி, மனநிறைவு
சாற்றும் - சொல்லும்

131. திருத்தணிகை வரைமேவுஞ் செவ்வேளின் மந்திரத்தைச்
செபித்திட் டாலும்
கருத்திலுற நினைத்தாலுந் தோத்திரங்கள் புரிந்தாலுங்
கைகள் கூப்பிச்
சிரத்திலுறப் பணிந்தேத்தித் திருவுருவை விழிகுளிரத்
தெரிசித் தாலும்
விருத்திபெறுஞ் சந்ததிகண் மேன்மேலுந் தழைத்தருளை
மேவு வாரே.

## தெளிவுரை

திருத்தணிகை மலையில் பொருந்தியுள்ள முருகனுடைய மந்திரத்தை உருவேற்றினாலும் உள்ளத்தில் நினைத்தாலும் வணக்கங்கள் செய்தாலும், கைகளைக் குவித்துத் தலையில் வைத்துப் பணிந்து, போற்றித் திருவடிவத்தைக் கண்குளிரும்படிக் கண்டு அன்பு கொண்டாலும், வளரும் சந்ததிகள் மேன்மேலும் தழைத்து முருகனுடைய அருளை அடைவார்கள்.

## விளக்கம்

மேவும் - பொருந்திய
செவ்வேள் - முருகன்
தோத்திரங்கள் - வணக்கங்கள்
சிரம் - தலை
தெரிசித்தல் - கண்டு அன்பு கொள்ளல்
விருத்தி - வளர்ச்சி

(எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்)

132. தணிகைமால் வரைவாழ் முருகர்சந் நிதியிற்
சந்நியா சஞ்செய்து கொண்டு
துணிவதாய் மறைசொல் பிரணவப் பொருளைத்
துகளறத் தியானமே புரிந்து
மணிநிலா வெறிக்கு மவ்வரை தன்னில்
வசிப்பவர் யாவரே யெனினும்
பிணியெலாங் கொடுக்கும் பிறவிநோ யகன்று
பிரமசா யுச்சியம் பெறுவார்.

## தெளிவுரை

உயர்ந்த தணிகை மலையில் வாழும் முருகப் பெருமான் திருக்கோயிலில் துறவறம் மேற்கொண்டு, துணிவாக மறை சொல்லும் பிரணவப் பொருளைக் குற்றம் அறத்தியானம் செய்து அழகிய நில வொளி வீசும் அம்மலையில் வசிப்பவர் எத்தகையவராயினும் எல்லா நோய்களும் அளிக்கும் பிறவியாகிய நோய் நீங்கி இறைவனுடன் ஒன்றுவார்கள்.

## விளக்கம்

சந்நியாசம் - துறவறம்
துணிவதாய் - துணிவாக, முடிவாக
துகள் - குற்றம்
அணிநிலா - அழகிய நிலா
எறிக்கும் - ஒளி வீசும்
பிரமசாயுச்சியம் - இறைவனோடு ஒன்றுதல், வீடுபேறு

133. செக்குறு கரும்பு போலவே யோனிச்
சிறுபுழை வழிவரு துயரும்
விக்கன்மே லெழும்புஞ் சிலேத்தும நெருங்க
மெய்யறி வழிந்துயி ரேகும்
துக்கமுந் துரக்குந் தணிகையந் தலத்திற்
சோடச தானங்கள் செய்தோர்
தக்கபோ கங்க ளனைத்தையு நுகர்ந்து
சரவண பவருல கடைவார்.

## தெளிவுரை

செக்கில் அடையும் கரும்பைப் போன்றே யோனியின் சிறு உள்துளையின் வழியே வரும் பிறவியாகிய துன்பமும், விக்கலுக்கு மேலவே எழுகின்ற கபம் நெருங்க, உடலால் உணரப்பெறும் அறிவு அழிந்து உயிர்நீங்கும் துயரமும் நீக்கும் அழகிய தணிகை முருகன் தலத்தில் பதினாறு வகையான தானங்கள் செய்தவர்கள் தக்க இன்பங்கள் எல்லாவற்றைமு அனுபவித்துச் சரவணபவராகிய முருகர் உலகினை (வீடு பேற்றை) அடைவார்கள்.

## விளக்கம்

புழை - உள்துளை
சிலேத்துமம் - கபம்
சோடசதானம் - பதினாறு வகையான தானங்கள்
சோடம் - மகிழ்ச்சி, பொறுமை.

134. வண்டணி கரத்தோ னருந்தவம் புரிந்து
வண்சுனை யொன்றகழ்ந் திட்டுப்
பண்டருச் சிக்கும் பரிசுகண் டழியாப்
பதமருண் முருகர்சந் நிதியிற்
தொண்டன்மே னியன்றன் னடியருக் கறநூல்
கூறிய தானங்கள் கொடுத்தோர்
விண்டுலோ கத்தை யடைவரே ழிசையின்
விருப்புறு நாரத முனியே.

## தெளிவுரை

ஏழிசையில் விருப்பம் உள்ள நாநரத முனியே! சக்கரம் அணிந்த கையைக்கொண்ட திருமால் அரியதவம் செய்து, வளமான சுனை ஒன்றனைத் தோண்டித்தொன்மையில் அருச்சனை புரியும் தன்மையைக்கண்டு, அழியாத இன்பம் அருளும் முருகர் திருக் கோயிலில் மேகவண்ணமேனியனாகிய திருமால், தன் அடியார் களுக்கு அறநூலில் கூறப்பட்டுள்ள தானங்களை அளித்தவர்கள், திருமாலின் உலகத்தை அடைவர்.

## விளக்கம்

வண்டு - சங்கு
வண்சுனை - வளமான சுனை
பரிசு - தன்மை
பதம் - இன்பம், பதவி, காவல், பொருள்
கொண்டல் மேனியன் - மேகவண்ண மேனியனாகிய திருமால்
விண்டுலோகம் - திருமாலின் உலகம்.

135. நீலமால் வரைவாழ் முருகர்சந் நிதியி
னீண்டகோ புரந்திரு மதில்கள்
ஆலயங் கருப்பக் கிருகமண் டபங்க
ளணிவிமா னங்கள்செம் பொற்றேர்
சோலைக ணந்த வனமடைப் பள்ளி
சுரக்குநீர் வாவிகூ பங்கள்
கோலமா மடங்கள் சமைத்தவர் குமர
லோகத்திற் குலவிவீற் றிருப்பார்

## தெளிவுரை

பெரிய நீலநிற மலையில் வாழும் முருகர் திருக்கோயிலில், நீண்ட கோபுரம், அழகிய மதில்கள், ஆலயம், கருவறை, மண்டபங்கள், அழகிய விமானங்கள், செம்பொன்தேர், சோலைகள், நந்தவனம், மடைப்பள்ளி, நீர் சுரக்கும் குளங்கள், கிணறுகள், அழகிய பெரிய மடங்கள் உருவாக்கியவர்கள் முருகனுடைய உலகில் பொருந்தி வீற்றிருப்பார்கள்.

## விளக்கம்

வாவி - குளம்
கூபங்கள் - கிணறுகள்
கோலமாமடங்கள் - அழகிய பெரிய மடங்கள்
சமைத்தவர் - கட்டியவர்கள்
குமரலோகம் - முருகனுடைய உலகம்
குலவுதல் - அளவளாவுதல், பொருந்தல், கொண்டாடல்.

136. தையமா வாசை யுறுதினந் தணிகை
தழைத்தகல் லாரம்வாழ் சுனைநீர்
மெய்யெலா நனையப் படிந்துகண் மணியும்
விபூதியும் விதிமுறை யணிந்து
துய்யவே லவரைத் தொழுதெதா சத்தி
சோட்ச தானங்கள் புரிவோர்
வெய்யபா தகங்க ளனைத்தையு நீங்கி
விரும்பு நற் கதியினைப் பெறுவார்.

## தெளிவுரை

தைமாதத்தில் அமாவாசை பொருந்தும் நாளில், தணிகை மலையில் தழைத்த நீலோற்பலமலர் வாழும் சுனைநீரை உடல்

முழுதும் நனைய நீராடி உருத்திராக்கமணியும் திருநீறும் விதி முறைப் படி அணிந்து, தூய வேலவராகிய முருகரை வணங்கி இயன்ற அளவு பதினாறு வகையான கொடைகள் செய்பவர் கள் கொடிய பாவங்கள் எல்லாம் நீங்கப்பெற்று விரும்புகின்ற நல்ல வீடுபேற்றினைப் பெறுவார்கள்.

## விளக்கம்

கல்லாரம் - நீலோற்பலமலர்
கண்மணி - உருத்திராக்கமணி
துய்ய - தூய்மையான
எதாசத்தி - இயன்ற அளவு
சோடசதானங்கள் - பதினாறு வகையான தானங்கள்
வெய்ய - கொடிய

137. அழிவிலாத் தணிகை வரைக்கும ரேச
ராலயந் தனையல கிடுவோர்
மெழுகிமொக் கிடுவோர் திருவிளக் கிடுவோர்
விரைமலர் நறுந்தொடை புனைவோர்
வழுவிலாத் திருமஞ் சனமினி தெடுப்போர்
வரைநறுஞ் சந்தன முரைப்போர்
பழியிலாப் போகம் புவிமிசை நுகர்ந்து
பரகதி யினத்தொடும் புகுவார்.

## தெளிவுரை

அழிவில்லாத தணிகைமலைக் குமரேசர் திருக்கோயி லைப் பெருக்குவோர், மெழுகி மாப்பொடியால் கோலம் போடுப வர்கள், திருவிளக்கு ஏற்றுபவர்கள், மணம் வீசும் நறும் மாலையை அணிவிப்பவர்கள், குற்றமில்லாத திருமஞ்சன நீர் இனிதாக ஆட்டு பவர்கள், மலைக்கண் மணமுள்ள சந்தனம் அரைப்பவர்கள்,

பழியில்லாத இன்பங்களை உலகில் துய்த்து உறவினர்களுடன் வீட்டுலகு அடைவார்கள்.

## விளக்கம்

அலகிடுதல் - பெருக்குதல்
மொக்கிடுதல் - மாக்கோலம் போடுதல்
நறுந்தொடை - மணமுள்ள மாலை
வழு - குற்றம்
திருமஞ்சனம் - நீராட்டுதல்
உரைப்போர் - அரைப்பவர்கள்
போகம் - இன்பம்
புவி - உலகம்
மிசை - மேலே
பரகதி - மோட்சம், வீடு பேறு
இனத்தொடும் - சுற்றத்தாரோடும்.

138. அண்ணலந் தணிகைக் கிறைவர்சந் நிதியி
லனலுறு மோமங்கள் புரிந்தோர்
புண்ணிய போகம் புவிமிசை நுகர்ந்து
பொன்னுல கடைந்துபொன் னுருவம்
நண்ணியோர் மனுவந் தரமவண் மருவி
நாகர்கோன் வழுத்திடச் சென்று
திண்ணமார் கந்த லோகத்திற் குலவிச்
சிறந்தசா யுச்சியம் பெறுவார்

## தெளிவுரை

தலைவர் - அழகிய தணிகைக்கு இறைவர் முருகர் திருக் கோயிலில் தீயினில் அடையும் ஓமங்கள் செய்தோர் புண்ணியத் திற்குரிய இன்பங்கள் உலகில் துய்த்து, விண்ணுலகு அடைந்து,

அழகிய வடிவம் பெற்றவர்கள் மனுவின்காலம் அங்குப் பொருந்தி தேவர்களின் அரசன் இந்திரன் வணங்கும்படிச் சென்று உறுதியாகக் கந்தன் உலகில் மகிழ்ந்துலாவிச் சிறந்த வீடு பேறு பெறுவர்.

## விளக்கம்

நண்ணியோர் - சேர்ந்தவர்கள்
மனுவந்தரம் - மனுவின் காலம்
நாகர்கோன் - தேவர்களின் அரசன் இந்திரன்
கந்தலோகம் - சுப்பிரமணியபதம், வீடுபேறு
சாயுச்சியம் - கடவுளோடு ஒன்றுதல், மோக்கம், வீடுபேறு.

139. அரனுரு வான தணிகைவாழ் குகனை
யடுத்தொரு காற்றெரி சித்தால்
பரிமக நூறு புரிந்திடு பலமாம்
பரிந்தொரு காலருச் சிக்கின்
வருமக நூறு செய்திடு பலமு
மறைகணா லெட்டெடன வுரைக்கும்
தரும மோர் கோடி செய்திடு பலமுஞ்
சார்ந்திடும் வீணைமா முனியே

## தெளிவுரை

வினை மா முனியே! (நாரதரே!) சிவனுடைய வடிவ மான தணிகையில் வாழும் முருகனை அணுகி ஒரு முறை தெரிசித் தால் அசுவமேத யாகங்கள் நூறு செய்த வலிமையாகும்; அன்புடன் ஒருமுறை அருச்சனை செய்தால், யாகங்கள் நூறு செய்த வலிமை யும் மறைகள் முப்பத்திரண்டு என்று கூறும் தருமங்கள் ஒரு கோடி செய்த வலிமையும் சேரும்.

## விளக்கம்

அரன் - சிவன்
குகன் - முருகன்
ஒருகால் - ஒரு முறை
பரிமகம் - அசுவமேதயாகம்
பரிந்து - அன்புகொண்டு
நாலெட்டு - முப்பத்திரண்டு
வீணைமாமுனி - நாரதர்.

140. மூலமால் வரைசேர் முருகரை யொருகான்
மும்முறை வலம்புரிந் தவர்கள்
சாலவோ ரடிக்கோ ரயமகப் பலனைச்
சார்குவர் சகத்திர தீபம்
ஆலயந் தனிலா னெய் சொரிந் திடுவோ
ரகனிலத் திட்டகா மியங்கள்
ஏலவே நுகர்ந்து மறுமையிற் கந்த
ரெழில்பெறு முலகிலெய் துவரே.

## தெளிவுரை

தணிகைமலைக்கோயில் கருவறையில் பொருந்தியுள்ள முருகரை ஒரு முறை, மும்முறை வலம் வந்தவர்கள் மிகுதியாக அடிக்கு ஒரு அசுவமேதயாகம் புரிந்த பலனை அடைவர்; ஆயிரம் விளக்குகள் திரக்கோயிலில் பசுநெய் சொரிந்து ஏற்றுவோர் உலகில் விரும்பியவற்றை மிகுதியாக அனுபவித்து, மறு பிறவி இல்லாத அழகிய முருகரது உலகு அடைவார்கள்.

## விளக்கம்

சால - மிகுதியாக
அயமகம் - அசுவமேதயாகம்

சகத்திரம் - சகசிரம்; ஆயிரம்
ஆன்நெய் - பசுவின் நெய்
அகல்நிலம் - உலகம்
இட்ட காமியங்கள் - விரும்பியவை
ஏல - மிக, இயல, முன்னம் பொருந்த
மறுமை இல் - மறு பிறவி இல்லாத
எய்துவர் - அடைவர்.

(அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்)

141. எண்கலனே தூணிமகா நிவேதனஞ்செஞ் சாலியன்ன
மிலையேற் பாதி
வண்கலநா லுடன் பதக்காம் வாயந்தி வேலையைந்து
மரக்கா லன்னம்
தண்டயிர்தே னொடுமளைந்து குளங்கனிகாய் கறிகிருதந்
தணிகை வேலர்
உண்டிடவே நிவேதித்தோர் பெரும்போக நுகர்ந்து முத்தி
யுறுவரன்றே.

## தெளிவுரை

எட்டுக்கலமும் நாலுமரக்காலும் மிகுந்த நிவேதனமாகச் செம்மையான சாலிச்சோறு, இல்லையாயின், பாதி வளமான கலம் நான்குடன் இரண்டு மரக்கால் வாய்க்கும் அந்தி வேளையில் ஐந்து மரக்கால் சோறு, குளிர்ந்த தயிர், தேனோடும் பிசைந்து வெல்லம், கனி, காய்கறி, நெய் ஆகியன தணிகை வேலர் உண்பதற்காக நிவேதனம் செய்வோர் பெரிய இன்பம் துய்த்து வீடுபேறு அடைவார்கள்.

## விளக்கம்

எண்கலனே தூணி - எட்டுக்கலமும் நாலு மரக்காலும்
பதக்கு - இரண்டு மரக்கால்

வாய் அந்திவேலை - வாய்க்கும் அந்தி வேளை
அளைதல் - பிசைதல்
குளம் - வெல்லம்
கிருதம் - நெய்
நிவேதித்தல் - நைவேத்தியம் செய்தல்.

142. இயம்பியமா நிவேதனத்துக் கேலாத விலம்பாட்டோ
ரியன்ற வன்னம்
நயந்துநிவேதித்திடினு முனனவருக் குரைத்தபல
னண்ணி வாழ்வார்
உயர்ந்ததணி கேசருக்கு நறுந்தூபங் கர்ப்பூரத்
தொளிருந் தீபம்
வியந்திடவா ராதனஞ்செய் வித்தகருந் தீமையெலாம்
விடப்பட் டோரே.

## தெளிவுரை

சொல்லப்பெற்ற நிவேதனங்கள் செய்ய முடியாத வறுமை யுடையோர் தங்களால் இயன்ற சோறு விரும்பி நிவேதனம் செய்தாலும் முன்பு சொல்லப்பெற்றவர்களுக்குக் கூறிய பலன் சேர்ந்து வாழ்வார்கள்; உயர்ந்த தணிகேசராகிய முருகருக்கு நறுமணம் உள்ள தூபம், கர்ப்பூரம் ஆகியவற்றால் ஒளிசெய்யும் தீபம் வியப் பையுமாறு பூசை செய்யும் அறிவுடையோர் தீமைகள் அனைத்தும் நீங்கப் பெற்றவராவர்.

## விளக்கம்

இயம்பிய - சொல்லப்பெற்ற
இலம்பாட்டோர் - வறுமை உடையவர்கள்
நயந்து - விரும்பி
நண்ணி - சேர்ந்து

ஆராதனம் - பூசை
வித்தகர் - அறிவுடையோர்.

143. ஆயிரந்தேங் காய்கரும்போ ராயிரம்வா ழைப்பழமா
யிரம் பூபம்
ஆயிரமோ தகங்களுமோ ராயிரம்பிட் டாயிரமா
யிரமாந் தோசை
ஆயிரநா மம்படைத்த சண்முகர்க்கு நிவேதித்தோ
ரவனி யெல்லாம்
ஆயிரமாண் டினித்தாண்டு தங்கிளைஞ ரொடுங்குமர
ரடியிற் சார்வார்.

## தெளிவுரை

ஆயிரம் தேங்காய்கள், ஆயிரம் கரும்புகளுடன் ஆயிரம் வாழைப்பழம், ஆயிரம் வடைகள், ஆயிரம் அப்பங்கள், ஆயிரம் இட்டலிகள், ஆயிரம் தோசைகள் ஆகியவற்றை ஆயிரம் பெயர்கள் கொண்டு முருகருக்கு நிவேதனம் செய்தவர்கள் உலகமெல்லாம் ஆயிரம் ஆண்டுகள் இனிமையாக ஆண்டு, தங்கள் உறவினர்களுடன் குமரருடைய திருவடிகளையடைவார்கள்.

## விளக்கம்

அபூபம் - வடை
மோதகம் - அப்பவருக்கம்
பிட்டு - இட்டலி
நாமம் - பெயர்
அவனி - உலகம்
கிளைஞர் - உறவினர்கள்
குமரர் - முருகர்.

144. முந்துதணி கேசருக்குத் தயிலாதி யவிடேக
முறையி னாட்டிச்
சந்தனங்குங் குமம்புழுகு கத்தூரி பளிதமுஞ்சேர்த்
தரைத்துச் சாத்திச்
சுந்தரப்பொன் னாடைமணி முடிகடகந் தோள்வளையந்
துளக்கி லாரம்
கந்தர்மகிழ்ந் திடவணிவோர் தாம்பெறுபே றெவராலுங்
கழறொ ணாதே.

## தெளிவுரை

பழமையான தணிகேசராகிய முருகருக்குத் தைலங்கள் முதலான நீராட்டுதல்களை முறையுடன் ஆட்டினால், சந்தனம், குங்குமம், புழுகு, கத்தூரி, பச்சைக் கருப்பூரம் ஆகியவற்றைச் சேர்த்து அரைத்து அணிவித்து, அழகிய பொன் ஆடை, அழகிய கிரீடம், கடகம், தோள்வளையம், அசைதல் இல்லாத முத்துமாலை கந்தர் மகிழும்படி அணிவிப்பவர்கள் பெறுகின்ற பேறு எவராலும் சொல்ல முடியாது.

## விளக்கம்

முந்து - பழமையான
பளிதம் - பச்சைக்கருப்பூரம்
சுந்தரம் - அழகு
துளக்குஇல் - அசைத்தல் இல்லாத
ஆரம் - முத்துமாலை
கழறஒணாதே - சொல்ல இயலாது
ஒணாதே - ஒண்ணாதே, முடியாது.

145. சத்திரங்கண் ணாடிகொடி கவரிமயிற் பீலிபிச்சந்
தமைமீந் தோரும்
மெத்தியவாத் தியங்கள்குழல் வீணையுட னாட்டியங்கள்
விளைத்திட் டோரும்
பத்தியுல கெங்கணும்போம் வாகனமூர்ந் தெவ்வுலகும்
பணிய வாழ்ந்து
சித்திதருந் தணிகேசர் திருவருளா லவருலகிற்
செறிவர் மாதோ.

## தெளிவுரை

குடை, கண்ணாடி, கொடி, கவரி, மயில்பீலி, மயிற்பிலியால் செய்த குடை ஆகியவற்றை அளித்தோரும் மிகுந்த வாத்தியங்கள், புல்லாங்குழல், வீணை ஆகியவற்றுடன் நாட்டியங்கள் இயங்கிடச் செய்தவர்களும் பக்தியுலகு எங்கும் செல்லும் வாகனம் ஊர்ந்து எந்த உலகமும் பணியுமாறு வாழ்ந்து, (வேண்டியவற்றை) நிறைவேற்றும் தணிகேசர் திருவருளால் அவருலகில் பொருந்துவர்.

## விளக்கம்

சத்திரம் - குடை
பிச்சம் - மயில்பீலியால் செய்த குடை
மெத்திய - மிகுதியான
பத்தி - பக்தி, இறையன்பு
சித்தி - அறிவு, நிறைவேற்றம், மோக்கம்
செறிவர் - சேர்வர், பொருந்துவர்.

146. செம்பொனா லெனினுமொளிர் வெண்பொனா
லெனினு மிகச்
செய்த காம்போ
டம்பொனார் வெண்குடைகள் சாமரங்கடணிகேசர்க்
களித்திட் டோர்கள்
இம்பராம் பூதலத்தி லிட்டகா மியமனைத்து
மெய்தி யந்தத்
தும்பரார் கவரிகுடை யுவந்தெடுப்பக் கந்தவுல
குறுவர் மாதோ

## தெளிவுரை

செம்மையான பொன்னால் ஆயினும், ஒளிருகின்ற வெள்ளியினால் ஆயினும் மிகுதியாகச் செய்த காம்போடு அழகிய பொன் நிறைந்த வெண்குடைகள், சாமரங்கள், தணிகேசராகிய முருகருக்கு அளித்தவர்கள், இவ்வுலகமாகிய பூதலத்தில் இச்சித்தபொருள்கள் அனைத்தையும் அடையப்பெற்று முடிவில் தேவர்கள், கவரி, குடை ஆகியவற்றை மகிழ்ச்சியுடன் எடுக்குமாறு, கந்த உலகினை அடைவார்கள்.

## விளக்கம்

வெண்பொன் - வெள்ளி
அம்பொன் ஆர் - அழகிய பொன் நிறைந்த
இம்பர் - இவ்வுலகம்
பூதலம் - உலகம்
இட்டகாமியம் - இச்சித்த பொருளை நினைத்தபடி பெறுதல்
அந்தத்து - ஆகாயத்தில், முடிவில்
உம்பரார் - தேவர்கள்

147. ஆன்காதி னளவேனு மந்தணர்க்குப் பூதான
மளித்திட் டோர்கள்
வான்காதல் கொளவாழ்வர் தணிகையறு முகவரெதிர்
வணங்கி நின்று
நான்காகு நான்கெனவே நவிறான மெது செயினு
நண்ணும் பேற்றை
ஊன்பாயு மிவ்வுடம்பி லனுபவித்து மறுமையிலு
முறுவா ரின்பம்

## தெளிவுரை

பசுவின் காதளவாயினும் அந்தணர்களுக்கு நிலக்கொடை வழங்கியவர்கள் வானுலகத்தவர்கள் அன்புகொள்ளும்படி வாழ் வார்கள்; தணிகை ஆறுமுகக் கடவுள் எதிரில் வணங்கி நின்று சொல்லப்பெறுகின்ற பதினாறு கொடைகளுள் எது செய்தாலும் நெருங்கும் நல்லூழை ஊன்பொருந்திய இவ்வுடலில் துய்த்து அடுத்த பிறவியிலும் இன்பம் அடைவார்கள்.

## விளக்கம்

ஆன் - பசு
பூதானம் - நிலக்கொடை
வான்காதல் கொள - வானுலகத்தோர் அன்பு கொள்ள

''நான்கு ஆகு நான்கு ஆகு நவில்தானம்'' என்னும் தொடர் 'சோடசதானம்' எனப்பெறும் பதினாறு வகைப்பட்ட கொடைகளைக் குறிக்கிறது.

நவில் - சொல்லல்
மறுமை - மறுபிறவி
உறுவார் - அடைவார்கள்

148. வந்ததொரு காரியத்தா லேனுமொரு பெண்ணேச
மருவி யேனும்
விந்தைதருங் காணிக்கை கொடுத்தேனும் வேடிக்கை
விரும்பி யேனும்
எந்த விதத் தேனும்போய் நீலகிரி வாழுமிளை
யோனைக் கண்டோர்
நந்துமிக லறச் செகுத்துப் புவிமுழுதாண் டமருலக
நண்ணு வாரே.

## தெளிவுரை

வந்துள்ளதொரு செயலால் ஆயினும், பெண் ஒருத்தியின் காதலைப் பொருந்தியேனும், வியப்பைத் தரும் காணிக்கையைத் தந்தாயினும், விநோதத்தை விரும்பியேனும், எந்த வகையிலாயினும் சென்று தணிகைமலையில் வாழும் சிவனுடைய இளையோனாகிய முருகனைத் தரிசனம் புரிந்தோர், வளரும் பகைவர்கள் அலறும்படி அழித்து உலகம் முழுதும் ஆண்டு தேவர் உலகை அடைவார்கள்.

## விளக்கம்

நேசம் - காதல், நட்பு
வேடிக்கை - விநோதம்
நீலகிரி - தணிகைமலை
நந்தும் - வளரும், கெடுக்கும்
இகல் - பகை
செகுத்து - அழித்து.

149. கற்றுணர்ந்த பெரியவரா யதிதியராய் வந்தவர்க்கோர்
கவள மேனும்
நற்றணிகை மாநகரி லன்னதா னங்கொடுத்தோர்
நவிலும் வேதம்
முற்றுணர்ந்து வேண்டியபோ கங்களையு மனுபவித்து
முடிவிற் கந்தர்
உற்றவுல கினையடைந்து திருவடித்தா மரைநிழலி
லுறுவ ரன்றே.

## தெளிவுரை

கற்றுணர்ந்த சான்றோராகவும் பரதேசியாகவும் வந்தவருக்கு ஒரு கவளம் ஆயினும் நல்ல தணிகை மாநகரில் அன்னதானம் கொடுத்தவர்கள் சொல்லப்பெறும் வேதம் முழுதும் உணர்ந்து விரும்பிய இன்பங்களையும் துய்த்து முடிவில் முருகர் அடைந்துள்ள உலகினை அடைந்து அவரது திருவடியாகிய தாமரை நிழலை அடைவார்கள்.

## விளக்கம்

அதிதி - விருந்தினர், பரதேசி
நவிலும் - சொலல்லப்பெறும்
போகங்கள் - இன்பங்கள்

150. கருநிறத்த விடையினொடு காராவுந் தணிகைவரைக்
கந்தர்க் கன்பாய்
இருநிலத்தில் யாரேனும் விடுத்தனரேற் றீவினைக
ளெல்லா நீங்கிப்
பொருண்மிகுத்தம் புவிவாழ்ந்து மறுமையினும்
பொன்னுலகிற்
போகந் துய்த்துத்
திருமிகுத்த கவுமார வுலகிலடைந்தறுமுகர் தாள்
சேர்வர் மன்னோ

## தெளிவுரை

கரிய நிறமுடைய காளையுடன் காராம்பசுவையும் தணிகை மலை முருகருக்கு அன்புடன் யாராயினும் உலகில் விடுவார்களாயின் தீயவினைகள் அனைத்தும் நீங்கிச் செல்வம் பெருகி உலகில் வாழ்ந்து மறுபிறவியிலும் மேலுலகில் இன்பம் துய்த்துப் புகழ் மிகுந்த குமார உலகினை அடைந்து ஆறுமுகப்பெருமானுடைய திருவடிகளை அடைவர்.

## விளக்கம்

விடை - காளை
காரா - காராம்பசு
இருநிலம் - பெரியநிலம், உலகம்
பொருள் மிகுத்து - செல்வம் பெருகி
மறுமை - மறுபிறவி
பொன்னுலகு - விண்ணுலகு
திருமிகுத்த - புகழ் மிக்க
கவுமார உலகு - குமார உலகு.

151. நந்திநதி பிரமசுனை நாகசுனை விண்டு சுனை
நாகர் கோனாம்
இந்திரனார் சுனையினொடு மெழுமுனிவர் சுனையாதி
யின்னு மங்கண்
முந்தியதீர்த் தங்களெலா மூழ்கினவர் பாதகங்கண்
முற்று நீங்கிச்
சந்ததிக டழைத்தோங்கத் தணிகேசர் திருவருளைத்
தணப்பு றாரே.

## தெளிவுரை

நந்தியாறு, பிரமசுனை, நாகசுனை, திருமால் சுனை, தேவர்க்கு அரசன் இந்திரனுடைய சுனை ஆகியவற்றுடன் ஏழு முனிவர்கள் சுனை, இன்னும் அவ்விடம் உள்ள பழைய தீர்த்தங்கள்

அனைத்திலும் மூழ்கினவர்கள், பாவச் செயல்கள் முழுதும் நீங்கிப் பரம்பரையினர் தழைத்து உயர்ந்து, தணிகேசராகிய முருகருடைய திருவருளை நீங்கப் பெறார்.

## விளக்கம்

விண்டுசுனை - திருமால் சுனை
ஆதி - முதலியன
அங்கண் - அவ்விடம்
பாதகங்கள் - பாவச் செயல்கள்
சந்ததிகள் - பரம்பரையினர்
தணப்பு உறார் - நீங்கப்பெற மாட்டார்கள்.

152. குன்றாகுந் தணிகையிலோர் புண்ணியஞ்செய் தாலுமொரு
கோடி யாகும்
துன்றாத பாவமொன்று புரியினுமோர் கோடியதாய்த்
தொடர்ந்து சூழும்
பொன்றாது சத்தியமே யாதலினாற் றீமையென்றும்
புரிய லாகா
நன்றாகும் புண்ணியமெப் படியேனுஞ் செய்திடுத
னலம தாமே.

## தெளிவுரை

தணிகைமலையில் ஒரு புண்ணியம் செய்தாலும் அது ஒரு கோடிப் புண்ணியமாகும்; நெருங்காத பாவம் ஒன்று செய்தாலும் அது ஒரு கோடியாகத் தொடர்ந்து சூழ்ந்து கொள்ளும்; அழியாது; இது சத்தியமேயாகும்; ஆதலால், என்றும் ஒரு தீமையும் செய்தல் கூடாது; அறமாகிய புண்ணியம் எவ்வாறாயினும் செய்தல் நன்மையாகும்.

## விளக்கம்

துன்றாத - நெருங்காத
பொன்றாது - அழியாது
நன்றாகும் - அறமாகும்

# 8. பிரமன் பேறுபெற்ற அத்தியாயம்

*(கதைச் சுருக்கம் : தணிகாசல மான்மியத்தை மேலும் கேட்க விரும்பிய நாரதருக்குப் பிரமதேவர் கூறலானார்:*

இந்திரன் முதலிய தேவர்களுடன் பிரமன் திருக்கயிலாயம் சென்றபோது, அனைவரும் விளையாடிய வண்ணம் சிறுவனானக விளங்கிய முருகக்கடவுளைப் பிரமன் மட்டும் வணங்கிச் செல்லவில்லை. பிரமன் சிவபெருமானைத் தரிசனம் செய்து விட்டு மீண்டு வரும்போது, முருகக்கடவுள், ''படைக்கும் தொழில் புரிகிறோம் என்னும் செருக்குடையவன் நீ! நீவேதம் ஓதுவாய் என யாவரும் கூறுகின்றனர்; வேதத்தின் முதல் சொல்லாகிய பிரணவத்திற்குப் பொருள் யாது?'' என்று கேட்டார். பிரமன் பொருள் அறியாது விழித்தான்; பிரமன் தலையில் குட்டி வீரவாகுத் தேவர் மூலம் அவனைச் சிறையில் அடைத்து விட்டுப் படைப்புத் தொழிலை முருகரே செய்தார்.

சிவபிரான் இதனை அறிந்தார்; முருகனிடம் ''பிரணவப் பொருளை அறிந்திருந்தால் கூறுக!'' என வேண்டவும், ''குருவாக இருந்து கூறுவேன்'' என்று முருகர் கூறினார். சிவபிரான், முருகர்தம் மைந்தராயினும் குருநிலையில் அவருக்குச் சிங்காதனமளித்து அமர்த்தி, மாணவர் நிலையில் பிரணவப்பொருளைக் கேட்டுணர்ந்தார். பிரமனையும் விடுவிக்கச் செய்தார்.

பிரமன், முருகரை மதியாத குற்றம் (தோடம்) தீரும் பொருட்டுச் சிவபெருமான் கட்டளைப்படி தணிகாசலம் சென்று தவம் புரிந்து, தீர்த்தம் உண்டாக்கி வழிபட்டான். தணிகை முருகர் அருள்புரிந்து, மீண்டும் படைப்புத் தொழில் புரியுமாறு அருளினார்.)

(எழுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்)

153. என்றுநான் முகவ னியம்பநா ரதன்கேட்
டியம்புவா னெவர்க்குமே லாகித்
துன்றுசீர்ப் பகவ னேயடி யவர்க்குச்
சுகந்தரு சற்குண நிதியே
நன்றுகல் லார கிரியின் மான் மியநீ
நவின்றிடக் கேட்டுநா னுலகில்
இன்றுமே லான புண்ணிய மனைத்து
மெய்தின னென்றினு முரைப்பான்.

## தெளிவுரை

என நான்முகன் சொல்ல, நாரதன் கேட்டுச் சொல்ல லாயினன்; ''எவருக்கும் உயர்ந்தவராகி நெருங்கிய சிறப்புடைய கடவுளே! அடியார்களுக்கு இன்பம் அருளும் தூயபண்புள்ள செல்வமே! நன்று! கல்லார கிரியாகிய தணிகைமலையின் பெருமை களை நீ சொல்லக் கேட்டு யான் உலகில் இன்று மேன்மையான புண்ணியங்கள் அனைத்தும் அடைந்தேன்'' என்று மேலும் உரைக்கலாயினன்.

## விளக்கம்

நான்முகவன் - பிரமன்
இயம்புவான் - சொல்வான்
துன்று - நெருங்கிய
மான்மியம் - பெருமை
கல்லாரகிரி - தணிகை மலை.

154. எவ் விதங் களினுஞ் சிரேட்டமாய்ச் சிருட்டி
யிரக்கையோ டிலயகா ரணமாம்
அவ்வித விபுவாம் பிரமநின் முகமா
மம்புய மலரினிற் பிறந்த
திவ்விய கந்தர் கதாமுத பானஞ்
செய்துமென் செவியொடு வாயும்
துவ்வுறு திருத்தி யடைந்தில வினுநீ
சொல்கவக் கிரியின்வை பவமே.

## தெளிவுரை

எவ்வகைகளிலும் சிறந்தனவாக உலகங்களைத் தோற்றுவித்தல், இரக்க உணர்வுடன், அழிதல் காரணமாகும், அத்தகைய ஆகாயமாகும் உன்னுடைய முகமாகிய தாமரை மலரில் தோன்றிய மேன்மையான கந்தருடைய கதையாகிய அமுதபானம் செய்தும், என் காதுகளுடன் வாயும் அனுபவிக்கும் நிறைவு அடைந்தில; அத்தணிகைமலையின் வரலாற்றை மேலும் சொல்வாயாக!

## விளக்கம்

சிரேட்டம் - சிறந்தது
சிருட்டி - உலகங்களின் தோற்றம்
இரக்கை - இரக்க உணர்வு
இலயகாரணமாம் - அழிதல் காரணமாதல்
விபுவாம் - ஆகாயமாதல்
அம்புய மலர் - தாமரைமலர்
திவ்வியம் - மேன்மை
கதாமுதபானம் - கதையாகிய அமுதபானம்
துவ்வுறுதல் - அனுபவித்தல்
கிரி - மலை
வைபவம் - வரலாறு.

155. கயிலைமால் வரையில் வீற்றிருந் தருளுங்
கண்ணுத லுமைநடு வாகப்
பயிலுமோர் கருணைக் கடலெனுங் கந்தர்
பிரிந்தவ ணடைந்தகா ரணமும்
இயலுமவ் வரையி னீலமுப் போது
மென்று மூன் றலர்ந்திடு திறமும்
மயலற வெனக்குத் தெரித்தரு ளென்று
மறைமுனி பின்னுமொன் றுரைப்பான்.

## தெளிவுரை

உயரிய கயிலை மலையில் வீற்றிருந்து அருளுகின்ற நெற்றிக் கண்ணராகிய சிவபெருமானுக்கும் உமைக்கும் நடுவாகப் பழகும் ஒரு கருணைக் கடல் என்னும் முருகர் பிரிந்து தணிகைமலையை அடைந்த காரணமும், அம்மலையில் குவளை மலர்கள் காலை, நண்பகல், மாலை என்னும் மூன்று பொழுதுகளிலும் எந்நாளும் மூன்று மலர்ந்திடக்கூடிய தன்மையும் மயக்கமற எனக்குத் தெரிவித்தருள்க என்று மறைமுனி பிறகும் ஒன்று உரைக்கலாயினன்.

## விளக்கம்

இயலல் - இசைதல், ஏலுதல், கூடியதாயிருத்தல்
மயலற - மயக்கம் அற, தெளிவாக
நீலம் - நீலோற்பலமலர், குவளை மலர்
மறைமுனி - பிரமன்.

156. அத்தகு மலைவாழ் கந்தரை மகவா
னருச்சனை முனம்புரிந் தானோ
வித்தகப் பூசை நீபுரிந் தனையோ
விண்டுபூ சனைபுரிந் தானோ
பத்தியா லின்னும் பூசனை புரிந்தோர்
பலரையுஞ் சம்பிர தாயக்
கொத்தொடுந் தைரியக் கூறென முனிவன்
கூறலு மறையவன் கூறும்.

## தெளிவுரை

அத்தகைய மலையில் வாழும் முருகரை இந்திரன் முன்னர் அருச்சனை செய்தானோ? அதிசயமான பூசனை நீயும் செய்தனையோ? திருமால் பூசனை செய்தானோ? இறையன்பால் இன்னும் பூசனை செய்தவர்கள் பலரையும் பரம்பரை வாக்கோடுவரும் குடும்பத் தோடும் தெரியும் முறையில் கூறுக என நாரதமுனிவன் கூறலும் பிரமன் கூறலானான்.

## விளக்கம்

மகவான் - இந்திரன்
வித்தகப் பூசை - அதிசயமான பூசை
விண்டு - திருமால்
சம்பிரதாயம் - பாரம்பரிய வாக்கு
கொத்து - குடும்பம்; வர்க்கம்

157. ஆரண முனிவ வெனக்குநீ மைந்த
னாதலா லறைகுவ னகிலத்
தேரண வியகல் லாரமால் வரையி
னிருஞ்சிறப் பெவற்றினு மதிகம்
பூரண மாமென் வயதுநூ றாண்டு
புகலினும் புகலொணா வனைத்தும்
காரண மதனி லறிந்தமாத் திரநான்
கழறுவன் கேட்டியென் றுரைப்பான்.

## தெளிவுரை

வேதமுனிவனே! எனக்கு நீ மகன் ஆதலால், சொல்வேன்; உலகமாகிய தேர்பொருந்திய தணிகை மலையின் பெருஞ்சிறப்பு எவற்றையும் விட அதிகமாகும்; என்வயது நூறாண்டு முற்றும் வரை

சொன்னாலும் முழுதும் சொல்ல முடியாது. அதனைப் பற்றி அறிந்த மூலத்தை மட்டும் நான் சொல்வேன்; கேட்பாயாக!'' என உரைத்தான்.

## விளக்கம்

ஆரணம் - மறை
அகிலத்தேர் - உலகமாகிய தேர்
அணவிய - கிட்டிய, பொருந்திய
காரணம் - மூலம்

158. பூருவந் தனிற்கல் லாரமா கிரியிற்
பூந்தவி சிருந்தசண் முகரை
நாரத நான்முன் னருச்சனை புரிந்த
நயத்தினை யறைகுவன் கேட்டி
சீரிய கயிலை வாழ்பர சிவனைத்
தெரிசனஞ் செய்யமுன் னொருகால்
வீரிய மகவான் முதலிய தேவர்
விண்டுவோ டணுகினன் யானும்.

## தெளிவுரை

நாரதனே! முன்காலத்தில் பெரிய தணிகைமலையில் அழகிய இருக்கையில் இருந்த முருகரை நான் முன்னர் அருச்சனை செய்த மேன்மையைச் சொல்வேன்; கேட்பாயாக! சிறந்த கயிலையில் வாழும் பழமையான சிவபெருமானைத் தரிசனம்புரிய முன்பு ஒரு சமயம் வீரமுள்ள இந்திரன், தேவர்கள் முதலியவர்களுடனும் திருமாலுடனும் அணுகினான், யானும்,

## விளக்கம்

பூருவம் - முன்காலம்
பூந்தவிசு - அழகிய இருக்கை
நயம் - இன்பம், நன்மை, மேன்மை
அறைகுவன் - சொல்வேன்
கேட்டி - கேட்பாயாக
பரசிவன் - கடவுள்
மகவான் - இந்திரன்
விண்டு - திருமால்
பரகுதல் - துதித்தல்
பரம் - பழமை, கடவுள், மோக்கம்.

159. அதுபொழு தென்று மழிவிலாக் கயிலை
யசலமேற் போமிடை வழியிற்
கதிதரு முருக ராட்டயர்ந் திருப்பக்
கண்டவிண் ணவரரி மகவான்
முதலினர் வணங்கி யவரருள் பெற்று
முடுகினர் பரசிவ னிடத்தே
மதியறு மொருநான் குழவியென் றவரை
வணங்கிடா தவரொடுஞ் சென்றேன்.

## தெளிவுரை

அப்போது என்றும் அழிவில்லாத கயிலைமலைமேல் போகும் இடைவழியில் அடைக்கலம் தரும் முருகர் விளையாட்டில் திளைத்திருப்பதனைக்கண்ட தேவர்கள், திருமால், இந்திரன் முதலியவர்கள் அவரை வணங்கி அவர் அருள் பெற்றுப் பரமசிவனிடம் நெருங்கினர்; அறிவற்ற நான் ஒருவன் மட்டும் குழந்தை என்று கருதி முருகரை வணங்காமல், அவர்களோடு சென்றேன்.

## விளக்கம்

அசலம் - மலை
போமிடை - போகும் இடையில்
கதி - அடைக்கலம், ஆதரவு, மோட்சம்
ஆட்டு அயர்ந்திருப்ப - விளையாட்டில் திளைத்திருப்பவும்
அரி - திருமால்
மகவான் - இந்திரன்
முடுகினர் - நெருங்கினர்.

160. ஆலய மடைந்து கோபுர வாய்த
லமர்ந்திடு நந்திதாள் வணங்கி
மாலொடு தேவர் குழாங்களும் யானும்
வழுத்தியங் கவனருள் பெற்றுச்
சாலவுட் புகுந்தே யுருத்திரர் சித்தர்
சாரண ரியக்கர்கந் தருவர்
சீலமார் சனகன் முதலயோ கியர்கள்
திறல்வசிட் டாதிமா முனிவர்.

## தெளிவுரை

ஆலயத்தை அடைந்து கோபுர வாயிலில் அமர்ந்திருந்த நந்தியின் திருவடிகளை வணங்கித் திருமாலோடு தேவர் கூட்டங்களும் யானும் வணங்கி அங்கு அவனுடைய அருளைப்பெற்று மிகவும் உள்ளே புகுந்து உருத்திரர், சித்தர், சாரணர், இயக்கர்கள், வலிமையுடைய சனகன் முதலிய துறவிகள், திறமையுடைய வசிட்டர் முதலிய பெரிய முனிவர்கள்,

## விளக்கம்

கோபுரவாய்தலம் - கோபுரவாயில் இடம்
தாள் - திருவடிகள்

குழாங்கள் - கூட்டங்கள்
வழுத்தி - துதித்து, வணங்கி
சால - மிகுதி
சீலம் ஆர் - ஒழுக்கம் நிறைந்த
திறல் - திறமை
வசிட்டாதிமா முனிவர் - வசிட்டர் முதலிய பெரிய முனிவர்கள்.

161. மற்றுள கணங்க ளனைவரு மேத்தி
வணங்கமா ணிக்கமண் டபத்திற்
பொற்றவி சதனி லுமையொடு மிருந்த
புராரியைக் கண்டனை வரும்போய்
உற்றிடும் பயபத் தியினொடும் வணங்கி
யுவந்தெழுந் தனேகதோத் திரங்கள்
சொற்றனம் பேரா னந்தவா ரிதியிற்
றோய்ந்தனம் பரவச மாகி.

## தெளிவுரை

மற்றுமுள்ள கூட்டத்தினர் அனைவரும் போற்றி வணங்க மாணிக்க மண்டபத்தில் பொன் இருக்கையில் உமையோடு வீற்றிருந்த சிவ பெருமானைக்கண்டு அனைவரும் சென்று அடைந்த பயபக்தி யுடன் வணங்கி உவந்து எழுந்து பலவணக்கங்கள் சொன்னோம்; பரவசமடைந்து பெரிய மகிழ்ச்சிக் கடலில் தோய்ந்தோம்.

## விளக்கம்

கணங்கள் - கூட்டங்கள்
ஏத்தி - போற்றி
பொன்தவிசு - பொன் இருக்கை, பொன் ஆசனம்
புராரி - சிவபிரான்
தோத்திரம் - வணக்கம்
பேரானந்தவாரிதி - பெரிய மகிழ்ச்சிக்கடல்
பரவசம் - மிக்க மகிழ்ச்சி

162. வந்தகா ரியங்க ளனைத்தையு முரைப்ப
மகிழ்ந்தர னவரவர்க் கேற்ற
சிந்தனைப் படியே கட்டளை புரியத்
திருந்தடி வணங்கியே விடைபெற்
றந்தர மிசைவாழ் விண்டுவே முதலா
மனைவரு மவரவ ருலகம்
முந்தினர் யானு மவருடன் கயிலை
முதுகிரி தனில்வருங் காலை.

## தெளிவுரை

வந்த செயல்கள் எல்லாவற்றையும் உரைக்க மகிழ்ந்து, சிவபெருமான் அவரவர்களுக்கு ஏற்ற எண்ணப்படியே கட்டளை புரிய அவருடைய தூய அடிகளை வணங்கி விடைபெற்று விண் மீது வாழும் திருமால் முதலிய அனைவரும் அவரவர் உலகங்களுக்கு முற்பட்டுச் சென்றனர்; யானும் அவர்களுடன் கயிலை என்னும் தொன்மையான மலையில் வரும்போது,

## விளக்கம்

அரன் - சிவன்
அந்தரமிசை - ஆகாயத்தின் மேல்
முந்தினர் - முற்பட்டுச் சென்றனர்
முதுகிரி - தொன்மையான மலை.

163. முன்னமாட் டயர்ந்த சடானன ரென்றன்
முகத்திணைச் செருக்கொடு நோக்கி
மன்னுகிங் கரரை விடுத்தழைப் பித்து
மாற்றருஞ் சீற்றமீக் கொண்டே

இன்னவா னவரில் யார்கொனீ முகநான்
செய்திய தென்னைகொல் சிருட்டி
என்னுமோர் தொழிலா லெனைமதி யாம
லிகழ்துராங் காரதுன் மதியோய்.

## தெளிவுரை

முன்னர் விளையாட்டில் திளைத்திருந்த ஆறுமுகக் கடவுள் என் முகத்தைச் செருக்குடன் பார்த்து, நிலைபெற்ற ஏவலர்களை அனுப்பி அழைக்கச் செய்து, நீக்க அரிய சினம் மிகுதியாகக் கொண்டு இத்தகைய தேவர்களுள் நீயார்? முகங்கள் நான்கு அடைந்தமை எதனால்? படைத்தல் என்னும் ஒரு தொழிலால் என்னை மதியாமல் இகழ்கின்ற கெட்ட செருக்குடைய தீய அறிவுடையவனே!

## விளக்கம்

சடானனர் - ஆறுமுகர்
கிங்கரர் - ஏவல் செய்வோர்
மீக்கொண்டு - மிகுதியாகக் கொண்டு
சிருட்டி - படைப்பு
துர் ஆங்கார துன்மதியோய் - கெட்ட செருக்குடைய தீய அறிவுடையவனே.

164. மறைகளுன் முகத்திற் றோன்றிய வெனவே
வயங்குல கெலாமுரைத் திடலால்
அறையுமச் சுருதிக் கிறைவனா னெனவே
யகங்கரித் தனைவிதி யதன்முன்
உறையுமோ மெனுமோர் பதார்த்தமே ததைநீ
யுரைத்திடென் முனமதிற் குலவும்
இறைவன்யா ரறிது மெனக்குக னார்தா
மிசைத்தன ரேழிசை முனியே.

## தெளிவுரை

ஏழிசை முனியே! ஒளி செய்யும் உலகங்களில் உள்ளவர்கள் எல்லாரும், ''மறைகள் உன் முகத்தில் தோன்றியவை'' என்று கூறுவதனால், சொல்லப் பெறுகின்ற, ''மறைகளுக்கு இறைவன் நான்'' என்றே செருக்கடைந்தனை; விதிக்கு முன்னால் நிலவி வரும் 'ஓம்' என்னும் சொல்லின் பொருள் என்ன? என்முன் அதனை உரைத்திடுக! அதில் விளங்கும் இறைவன் யார்? அறிவோம் என்று குகனார் கூறினர்.

## விளக்கம்

வயங்கும் - ஒளிசெய்யும், நடக்கும்
சுருதி - இசை, மந்திரம், வேதம்
அகங்கரித்தனை - செருக்கடைந்தனை
பத அர்த்தம் - சொல்லின் பொருள்
முனம் - முன்னால்
குலவுதல் - குலாவுதல், அளவளாவல்
அறிதும் - அறிவோம்
இசைத்தனர் - கூறினர்

165. சிவனருள் குமரர் வினவிய பதார்த்தந்
தெரிகிலா மையினுள மயங்கி
மவுனமா யானு மூமர்போ லிருப்ப
மற்றது கண்டுசெவ் வேளும்
கவினுறு செந்தா மரைமலர் புரையுங்
கைத்தலத் தங்குலி முடக்கித்
தவமுனி வரகே ளெனதுட னடுங்கத்
தாக்கினர் சிரங்குழி படவே.

## தெளிவுரை

சிவனால் அருளப்பெற்ற குமரர் முருகர் கேட்ட சொல்லுக்குப் பொருள் தெரியாததனால், உள்ளம் மயங்கி, மௌனமாக நானும் ஊமர் போல் இருக்கவும், அதனைக்கண்ட முருகரும் அழகிய செந்தாமரை மலர்போன்ற உள்ளங்கையை மடக்கிக் கொண்டு, தவமுனிவரே! கேள்! எனது உடல் நடுங்குமாறு தலை குழியடையும் படித் தாக்கினார். (குட்டினார்)

## விளக்கம்

ஊமர் - ஊமை
செவ்வேள் - முருகர்
கவின் - அழகு
புரையும் - போன்ற
அங்குலி - உள்ளங்கை

166. அருகுறும் வீர வாகுவை நோக்கி
யருஞ்சிறை புரிகென வவனும்
மருவியென் றனையீர்த் தேகியே சிறையில்
வைத்தனன் வைத்தபின் னெனது
கரமுறு மக்க மாலையும் புதுநீர்க்
கமண்டலந் தனையுந்தங் கைக்கொண்
டுரமுறு முலகை வாலலீ லையதா
யொருதனிச் சிருட்டிசெய் திருந்தார்.

## தெளிவுரை

அருகில் அடைந்த வீரவாகுவைப் பார்த்து ''அரியசிறை செய்க!'' எனக் கட்டளையிட, அவனும், பொருந்தி என்னை இழுத்துச் சென்று, சிறையில் வைத்தான்; வைத்தபிறகு எனது கையில் இருந்த

உருத்திராக்க மாலையையும் புதிய நீர்க்கமண்டலத்தையும் முருகர்தம் கையில் எடுத்துக் கொண்டு வலிமையான உலகை இளமை விளையாட்டாக, ஒப்பற்ற முறையில் படைத்துக் கொண்டு இருந்தார்.

## விளக்கம்

மருவி - பொருந்தி
அக்கமாலை - உருத்திராக்கமாலை
வாலலீலை - இளமை விளையாட்டு
ஒருதனி - ஒப்பற்ற முறை
சிருட்டி - படைப்பு.

167. இப்படி நடந்த செய்தியைச் சிவன்கேட்
டெழுந்திள முறுவல்பூத் திளையோன்
ஒப்பற விருந்த விடந்தனி லெய்தி
யுவந்துதா மரைமுக நோக்கி
வைப்பெனு மதலாய் பிரமனைச் சிறைநீ
வைத்ததென் னவனுல காக்கும்
அப்பெருஞ் சிருட்டித் தொழிலினாற் றேவ
ரனைவரும் பூசிக்கப் படுவான்.

## தெளிவுரை

இவ்விதம் நடந்த செய்தியைச் சிவபெருமான் கேட்டு எழுந்து புன்முறுவல் பூத்து, இளையவனாகிய முருகன் இணையில்லாமல் இருந்த இடத்தை அடைந்து, மகிழ்ந்து, அவனுடைய தாமரை முகத்தைப் பார்த்து, பெருமை என்னும் பிள்ளையே! பிரமனை நீ சிறைவைத்தது ஏன்? அவன் உலகுபடைக்கும் அப்பெரிய படைப்புத் தொழிலால் தேவர்கள் அனைவராலும் வழிபடப் பெறுபவன்.

## விளக்கம்

வைப்பு - உண்டாக்கல், பெருமை
மதலை - பிள்ளை, மழலை.

168. என்றுமா தேவர் வினவா சேன
ரியம்புவா ரோமொழிப் பொருளை
நன்றறி கல்லா மூடனிவ் வுலகை
நவிற்றிடுங் குயவனைப் போல
அன்றெனப் படைக்குஞ் சத்திமாத் திரமே
யடைந்தனன் வேறொரு சத்தி
மன்றவே யவனுக் கிலையென வுரைப்ட
மதலைதன் மதிமுக நோக்கி.

## தெளிவுரை

என மகாதேவராகிய சிவபெருமான் கேட்க, மகாசேனை உடையவராகி முருகர் சொல்லலானார்; '' 'ஓம்' என்னும் சொல்லின் பொருளை நன்றாகக்கற்றறியாத மூடன் சொல்லப்பெறும் குயவனைப் போன்றவன் அன்று, உலகைப்படைக்கும் ஆற்றல் மட்டுமே அடைந்தான்; வேறொரு ஆற்றல் நிச்சயமாகவே அவனுக்கு இல்லை' என்று உரைக்கப் பிள்ளையின் நிலவுபோன்ற முகத்தைப் பார்த்து,

## விளக்கம்

மாதேவர் - சிவபெருமான்
மாசேனர் - மகாசேனர், பெரிய சேனையையுடைய முருகர்
'ஓம்' மொழிப்பொருள் - 'ஓம்' என்னும் சொல்லின் பொருள்
நவிற்றிடும் - சொல்லப்பெறும்
மன்றம் - நிச்சயம்.

169. உலகெலாம் படைக்கும் பிரமனு மறியா
தோங்கிய பிரணவப் பொருளை
இலைகுலாம் பைம்பொன் மணிப்பணி தரித்த
விளஞ்சிறு குழவிநீ தெரியின்
நலமதா யுரைத்தி யெனப்பிதா வினவ
நாந்தகஞ் சுமந்த செங் கமல
மலரைநேர் தடக்கைக் கோமள வுருவம்
வயங்கிய குகனெதிர் வகுப்பான்.

## தெளிவுரை

உலகங்கள் எல்லாவற்றையும் பிரமனும் அறியாது உயர்ந்த 'ஓம்' என்னும் பிரணவப் பொருளை, தாமரை இலையில் கொண்டாடிய பசும்பொன் மணி அணியை அணிந்த இளஞ்சிறு குழந்தையாகிய நீ அறிந்திருப்பின், நன்றாக உரைப்பாயாக'' என்று தந்தையாகிய சிவபெருமான் கேட்டருள ஈரநீரகமாகிய சரவணப் பொய்கை சுமந்த சிவந்த செந்தாமரை மலருக்கு இணையான நீண்டகைகளைக் கொண்ட இளமை உருவம் ஒளிசெய்யும் குகன், எதிரே விளக்கலானான்.

## விளக்கம்

குலாவுதல் - கொண்டாடுதல்
பைம்பொன் - பசும்பொன்
பணி - ஆபரணம், அணிகலன்
குழவி - குழந்தை
பிதா - சிவனாகிய தந்தை
நாத்தகம் - இலையிடம்
நேர் - ஒப்பான
தடக்கை - நீண்டகை
கோமள உருவம் - இளமை வடிவம்

வயங்கிய - ஒளிசெய்த
வகுப்பான் - விளக்கலானான்

'நாத்தகம்' ஈரநீரை அகத்தில் கொண்ட சரவணப் பொய்கை என்று பொருள்படும்.

170. எனக்கது தெரியு மாயினு மதிக
விராசியப் பிரணவார்த் தத்தைத்
தனக்கிணை யில்லாக் குருவொடு சீடத்
தன்மையிற் புகல்வதே யல்லால்
இனப்பட வாளா வுரைத்திட லாகா
தென்னலும் பரசிவன் கேட்டுப்
பனப்படு குருநீ சீடன்யா னாகப்
பரிந்துப தேசியென் றிசையா

## தெளிவுரை

''எனக்குப் பிரணவப்பொருள் தெரியுமாயினும், மிகுந்த மறைபொருளான (இரகசியம்) பிரணவத்தின்' பொருளைத் தனக்கு இணையில்லாத குருவுடன் சீடன் என்னும் தன்மையில் சொல்வதே யல்லாமல், தந்தைக்கு மகன் சொல்லும் முறையில்) பரம்பரை முறையில் வீணாக உரைத்தல் ஆகாது'' என்று கூறவும், பரமசிவன் கேட்டு, ''சொல்வதற்குரிய குருநீயாகவும் சீடன் யானாகவும் அன்புடன் உபதேசம் செய்வாயாக!'' என்று இசைந்து,

## விளக்கம்

இராசியம் - இரகசியம், மறைபொருள்
பிரணவார்த்தம் - பிரணவ அர்த்தம், பிரணவத்தின் பொருள்
இனப்பட - பாம்பரை முறையில்
வாளா - வீணாக
பனப்படு - பன்னப்படு, சொல்லப்பெறும்
உபதேசி - போதனை செய்க

171. அரியணை மீதிற் றன்மக வான
வறுமுகன் றனையினி திருத்திப்
பரசிவன் றாழ்ந்து வலச்செவி கொடுப்பப்
பரிந்துப தேசமே புரிந்தான்
பிரணவப் பொருளைக் கேட்டுமா தேவன்
பெரிதுள மகிழ்ந்துபுத் திரனாம்
குருபரன் றன்னை யெடுத்துமார் பணைத்துக்
குஞ்சிமோந் தரியணை யிருத்தி

## தெளிவுரை

அரியணையின்மேல் தன் குழந்தையாகிய ஆறு முகனை இனிதாக அமரச் செய்து, பரமசிவன் தாழ்ந்து, வலக்காது கொடுத்துக் கேட்க, அன்புடன் போதனை செய்தான்; பிரணவத்தின் பொருளைக் கேட்டு, மகாதேவனாகிய சிவபெருமான் பெரிதும் மனம் மகிழ்ந்து மகனாகிய குருபரனை எடுத்து மார்பில் அணைத்துக் கொண்டு, தலைமுடியின் உச்சிமோந்து அரியணையில் இருக்கச் செய்து,

## விளக்கம்

மாதேவன் - மகாதேவன், சிவபெருமான்
புத்திரன் - மகன்
குஞ்சி - ஆணின் தலைமுடி.

172. எனக்கு நீ குரவ னாதலாற் செகத்துக்
கெலாங்குரு நாதனா யிருத்தி
புனிற்றிளங் குமர வெனலுமப் பொழுது
புராரியை நானிரந் திடலும்

தனிச்சிவன் மதலைக் கினியன வுரைத்தென்
றான்விலங் கினைவிடு வித்தான்
இனிப்புறு மிசைதேர் நாரத முனிவ
யான்சிறை தணந்ததிவ் விதமே.

## தெளிவுரை

"ஈன்ற அணிமையுடைய இளம் குமரனே!

எனக்கு நீகுருவாதலால் உலகுக்கெல்லாம் குருநாதனாக இருப்பா யாக!" என்று கூறவும், அப்பொழுது சிவபெருமானை நான் இரந்து கேட்கவும் ஒப்பற்ற சிவபெருமான் குழந்தையாகிய முருகனுக்கு இனியன கூறி, என் கால்களில் இருந்து விலங்கினை விடுவித்தான்; இனிமையான இசையில் தேர்ந்த நாரதமுனிவனே! யான் சிறை யினின்றும் நீங்கியது இவ்விதந்தான்!"

## விளக்கம்

குரவன் - குரு, தந்தை
செகம் - உலகம்
புனிற்று இளம் குமர - ஈன்ற அணிமையுடைய இளம் குமாரனே!
புராரி - சிவபெருமான்
மதலை - குழந்தை
தாள் - கால்
தணந்தது - நீங்கியது.

173. பின்புமா தேவர் திருவடி வணங்கிப்
பெரிதெழுந் தஞ்சலி யுடனே
முன்புநின் றொருநா னின்னவிண் ணப்ப
மொழிந்தன னெவர்க்குமே லாகி

இன்புறு கருணை யுருவமாய் விளங்கு
மீசனே சம்புவே யான்முன்
வன்புறப் புரிந்த தீமைக ளனைத்து
மாற்றிடப் பொறுத்தருள் புரிக.

## தெளிவுரை

பிறகு, சிவபெருமானுடைய திருவடிகளைப் பெரிதும் வணங்கி எழுந்து கும்பிட்டவாறு முன்னர் நின்று, நான் ஒருவன், இன்ன வேண்டுகோளைக் கூறினன்; ''எவருக்கும் உயர்ந்தவராகி இன்பம் அடைவதற்குரிய அருள்வடிவமாக விளங்கும் கடவுளே! தானாகத் தோன்றியவனே! யான் முன்பு வன்செயலாகப் புரிந்த தீமைகள் எல்லாவற்றையும் நீக்கிப் பொறுத்தருள்க!''

## விளக்கம்

அஞ்சலி - கும்பிடல், வணக்கம்
சம்பு - சுவயம்பு, தானாகத்தோன்னறியவன், கடவுள், சிவன்
வன்புற - வன்மையுற
மாற்றிட - நீக்க

174. அறிவிலேன் சிறியேன் மிகவுமஞ் ஞானி
யாயினு மதான்மிக னெனினும்
குறைவிலா தளித்தா யென்னைநின் மகன்சற்
குமாரனா மியல்பையு மவன்றன்
மறமுலா வியதோள் வலியையு மகிமை
மாண்பையு மறிகிலா மையினால்
வறியனே னவனை மதித்திடா திகழ்ந்த
மதத்தினால் வருபலன் புசித்தேன்

## தெளிவுரை

அறிவில்லாதவன், கயவன், சிறிதும் தெய்வ அறிவு இல்லாதவன் எனினும், அறமற்றவன் எனினும், குறைவில்லாமல் அருள் செய்தாய்; என் ஐயனே! நின் மகன், நல்ல மகனாகிய தன்மையையும் அவனுடைய ஆண்மை தோள் வலிமையையும், பெருமையாகிய மாண்மையும் அறியாமையினால், வறியவனாகிய நான் அவனை மதிக்காமல், இகழ்ந்த செருக்கினால் வரும் விளைவைத் துய்த்தேன்.

## விளக்கம்

அஞ்ஞானி - தெய்வ அறிவு இல்லாதவன்.
அதான்மிகன் - அதார்மிகன் - அறமற்றவன்
அளித்தாய் - அருள் செய்தாய்
என்னை - என் ஐ, என் தலைவனே!
சற்குமாரன் - நல்லமகன்
மறம் உலாவியதோள் - ஆண்மை பொருந்திய தோள்
மகிமை - பெருமை
வறியனேன் - வறியவனாகிய நான்
மதம் - செருக்கு
புசித்தேன் - உண்டேன், துய்த்தேன், அனுபவித்தேன்.

175. தான்முனம் புரிந்த சுபாசுப மனைத்துந்
தானனு பவித்திட லுண்மை
வான்முறை பிறழா தெனமுனம் பெரியோர்
வகுத்தவாச் சியத்தைநன் றுணர்ந்தேன்
யான்முனம் வணங்கா தியற்றுதீ வினையா
லென்னதி காரத்தை மாற்றி
நான்மறைப் படிசெய் யுலகினைப் படைத்தா
னாதவென் றனக்கென்ன கதியே.

## தெளிவுரை

தான் முன்னர் செய்த புண்ணிய பாவங்கள் எல்லாவற்றையும், தான் துய்த்தல் உண்மை; மகத்துவ முறை தவறாது என்று முன்னர் பெரியோர்கள் வகுத்த பொருளை நன்றாக உணர்ந்தேன்; நான் முன்னர் முருகரை வணங்காமல் செய்த தீவினையால் (படைக்கும்) என் அதிகாரத்தை மாற்றி நான்மறைப்படி அமைக்கின்ற உலகைப் படைத்தான்; நாதனே! எனக்கு என்ன வழி?''

## விளக்கம்

சுபாசுபம் - புண்ணியபாவம்
வான்முறை - மகத்துவமுறை
வாச்சியம் - பொருள்
கதி - அடைக்கலம், ஆதரவு, வழி

176. எவ்விதத் தாலென் பாலருு ணோக்க
மிளையவன் வைத்தருள் புரியும்
அவ்வித வுபாயந் தனையெனக் குரைத்தி
யத்தனே கருணைவா ரிதியே
திவ்விய பத்த பராயண வெனயான்
செப்பலுஞ் சங்கரன் மகிழ்ந்திட்
டிவ்விதம் புகன்றா னாரத முனியே
யினியகெம் பீரவா சகத்தால்

## தெளிவுரை

''எந்தவிதம் என்னிடம் அருள் பார்வை இளையவனாகிய முருகன் வைத்து அருள் செய்வான்? அந்த வகையான தந்திரத்தை எனக்குக் கூறுவாயாக! தந்தையே! அருட்கடலே! தூய அடியார்களையே மேலான இருப்பிடமாக உடையவனே!'' என்று நான்

சொல்லவும், சிவபெருமான் மகிழ்ந்து, இனிமையான பொருளாழமுடைய சொற்களால் இவ்வாறு கூறினான் நாரத முனியே!

## விளக்கம்

பால் - இடம்
உபாயம் - தந்திரம், வகை
உரைத்தி - உரைப்பாயாக
அத்தனே - தந்தையே, கடவுளே
கருணைவாரிதியே - அருள்கடலே
திவ்வியம் - இனிமையானது, தெய்வீகமானது, மேன்மையானது.
பத்தபராயணன் - அடியார்களையே மேலான இருப்பிடமாக உடையவன்.
சங்கரன் - சிவன்
கெம்பீர வாசகம் - பொருளாழமுடைய சொற்கள்.

177. என்முக நோக்கிப் பரசிவ னுரைத்த
தென்னெனிற் பிதாமக விளையோன்
தன்முகங் கோப மாகிநின் மீது
சந்தத மிருப்பினு நீங்கி
நன்முக மாகி யுனக்கரு ளுபாய
நவிலுதும் பராமுக மின்றி
நின்முக மலர்ந்து மனதொரு மித்து
நின்றுகே ளம்புவி தனிலே.

## தெளிவுரை

என்னுடைய முகத்தைப்பார்த்துக் கடவுளாகிய சிவன் சொன்னது என்னவெனில், ''பிரமனே! இளையோனாகிய முருகன் தன்முகம் எப்போதும் உன்மீது கோபமுடன் இருப்பினும், கோபம் நீங்கி, நல்ல (இனிய) முகமாகி உனக்கு அருள்செய்தற்குரிய

தந்திரத்தைச் சொல்வேன்; அசட்டை இல்லாமல், அழகிய உலகில், உன்னுடைய முகம் மலர்ந்து உள்ளம் ஒன்றி நின்று கேட்பாயாக!''

## விளக்கம்

பரசிவன் - கடவுளாகிய சிவன்
பிதாமகன் - பிரமன்
இளையோன் - முருகன்
சந்ததம் - எப்பொழுதும்
பராமுகம் - அசட்டை
அம்புவி - அழகிய உலகம்

(கலி விருத்தம்)

178. காசியெனு மாநகர் தெனாதுகரை யெல்லை
யோசனையி ரண்டுசத முற்றுவளர் காஞ்சி
வாசமுறு நாயகிகா மாட்சியிட மன்னும்
ஈசரொரு மாநிழலி லென்றுமமர் கிற்பார்.

## தெளிவுரை

காசியென்னும் மாநகரின் தெற்குக்கரை எல்லையிலிருந்து இருநூறு யோசனை தொலைவில் உள்ள வளரும் காஞ்சி மாநகர் அடைந்து வாழும் தலைவி காமாட்சியம்மையாரிடம் நிலை பெற்ற சிவபெருமான் என்றும் ஒருமாமரத்தின் நிழலில் அமர்ந் திருப்பார்.

## விளக்கம்

தெனாது கரை - தெற்குக்கரை
யோசனை - ஓர் எல்லை அளவு

சதம் - நூறு
நாயகி - தலைவி
மன்னும் - நிலைபெறும்
மாநிழலில் - மாமர நிழலில்

179. புத்தியொடு முத்திநரர் பொற்றவருள் கம்பர்
சித்திமகிழ் கூர்தரு சிவாலய மதற்கே
உத்தரதி சைக்கணிரண்டி யோசனையி னெல்லை
வித்தகசீ பூரணமெ னுந்தலமொன் றுண்டால்.

## தெளிவுரை

அறிவுடன் மனிதர்கள் போற்ற முத்தியை அருளும் ஏகம்பர் மனம் மிகவும் மகிழ்தற்குரிய சிவாலயத்திற்கு வடக்குத் திசையில் இரண்டு யோசனை எல்லையில் வித்தக சீபுரணம் என்னும் தலம் ஒன்று உள்ளது.

## விளக்கம்

புத்தியொடு - அறிவோடு
முத்தி - வீடுபேறு
நரர் - மனிதர்கள்
பொற்ற - போற்ற
இம்பர் - ஏகம்பர்
சித்தி - அறிவு, நிறைவேற்றம்
மகிழ்கூர்தரும் - மகிழ்ச்சி மிகும்
உத்தரதிசை - வடதிசை
வித்தகம் - அதிசயம்
சீ - இலக்குமி, பார்வதி, சரசுவதி
பூரணம் - கடல், புரட்சி, முழுமை.

180. மேதகுவீ ரேசரவண் மேவுநில யத்துக்
கோதலுறு மேற்றிசையி லோங்குமணி மைக்கண்
மீதலமெ லாம்புகழ்வி சித்திரகல் லார
பூதரம்விளங்குமதன் மீது புல வோர்கள்

## தெளிவுரை

மேன்மையுள்ள வீரட்டேசுவரர் பொருந்தியுள்ள நிலைய மாகிய திருக்கோயிலுக்குச் சொல்லப்பெறும் மேற்குத் திசையில் உயர்ந்த அண்மை இடத்தில் உலகம் அனைத்தும் புகழும் அதிசய கல்லாரமலை என்னும் திருத்தணிகை மலை விளங்குகிறது; அதன் மீது புலவர்கள்,

## விளக்கம்

வீரேசர் - வீரட்டேசுவரர்
மேதகு - மேன்மையான
அவண் - அவ்விடம்
மேவும் - பொருந்தும்
அணிமை - அண்மை
மீதலம் - உலகம்
விசித்திரம் - அதிசயம்
கல்லார பூதரம் - திருத்தணிகை என்னும் மலை.

181. கந்திருவர் சித்தர்க ளியக்கர்கண நாதர்
இந்திரன்முன் னாகியிடு மெண்டிசை புரப்போர்
சந்திரர்கள் சூரியர்கள் சாரணர்கள் சூழ
நந்தெழில ரம்பைமுத னால்வரு நடிக்க

## தெளிவுரை

கந்தர்வர்கள், சித்தர்கள், இயக்கர்கள், கணநாதர், இந்திரன், அவன் முன்னர் உள்ள எட்டுத்திசைகளைப் பாதுகாப்போர், சந்திரர் கள், சூரியர்கள், சாரணர்கள் ஆகியோர் சூழ, அழகுகொழிக்கும் அரம்பை முதல் நால்வரும் நடனம் ஆடவும்,

## விளக்கம்

முன் ஆகியிடும் - முன்னர் இருக்கும்
புரப்போர் - பாதுகாப்போர்
நந்து - கொழிக்கும்; செழிக்கும்
நடிக்க - நடனமாட
அரம்பை முதல் நால்வர் - அரம்பை, மேனகை, உருப்பசி, திலோத்தமை.

182. சனகர்முதல் யோகியர்கள் சவுனகரை முன்னா
முனிவரர்கள் கந்தர முழைக்கண்மகிழ் கூரப்
பனகர்முத லாகியொளிர் பாதலர் வணங்க
இனியபொழி லூழ்த்தமல ரெங்குமணம் வீச

## தெளிவுரை

சனகர் முதலிய துறவிகள், சவுனகரை நினைக்காத முனிவர் கள் ஆகியோர் கந்தருடைய குகையில் மகிழ்ச்சிமிகவும், ஒளிரும் நாகர்கள் முதலிய பாதாள உலகத்தினர் வணங்கவும், இனிய சோலையில் உதிர்ந்த மலர்கள் எங்கும் மணம் வீசவும்,

## விளக்கம்

சவுனகர் - ஒரு முனிவர்
முன்னா - நினைக்காத

முழை - குகை
கந்தர் அம்முழை - முருகருடைய அழகிய குகை
பனகர் - பன்னகர் - நாகலோகத்தவர்கள்
பாதலர் - பாதாள உலகத்தவர்கள்
ஊழ்த்த - உதிர்ந்த

183. மாங்குயில்கள் காளமென வாழ்த்தியிசை கூவப்
பூங்கிளிம கிழ்ந்துபுகழ் பூவையொடு பேசப்
பாங்கருறு பூஞ்சுனை படிந்துவரு தென்றல்
ஓங்குகுளிர் நுண்டிவலை யோடெதிருலாவ

## தெளிவுரை

மாமரக்குயில்கள் எககாளம் என்னும்படி வாழ்த்தி இசையுடன் கூவவும், அழுகிய கிளிகள் மகிழ்ந்து குயில்களுடன் பேசவும், பக்கத்தில் அழகிய சுனையில் படிந்து வந்தடைந்து தென்றல் உயர்ந்த குளிர்ச்சியுடைய நுண்ணிய திவலையோடு எதிரில் உலாவவும்

## விளக்கம்

காளம் - ஏக்காளம் என்னும் ஊதுகுழல்
பூவை - குயில்
பாங்கர் - பக்கம்
திவலை - மழைத்துளி, துளி

184. பார்த்தவர் நினைத்தவர் பணிந்தவர்கள் பாவம்
தீர்த்துவர மேயுதவு சேந்தனமர் கிற்பான்
கார்த்திகைம கன்விழைகல் லாரகிரி நஞ்சீர்
ஆர்த்தகயி லைக்கிரியி னுக்கதிக மாமால்

## தெளிவுரை

பார்த்தவர்கள், நினைத்தவர்கள் வணங்கியவர்கள் பாவங் களைத் தீர்த்து, வரங்களை உதவியருளும் குமரன் வீற்றிருப்பான், கார்த்திகை மகளிரின் மகனாகிய முருகன் விரும்பும் கல்லாரகிரி (தணிகை மலை) நம் சிறப்புடன் ஒளிவீசி மின்னும் கயிலை மலையை விட உயர்ந்ததாகும்.

## விளக்கம்

சேந்தன் - குமரன்
அமர்கிற்பான் - வீற்றிருப்பான்
கார்த்திகைமகன் - கார்த்திகைப் பெண்டிரின் மகனாகிய முருகன்
விழை - விரும்பும்
கல்லார கிரி - தணிகை மலை
சீர் - சிறந்த
ஆர்த்தல் - ஒளிவீசி மின்னுதல்

185. அம்மலைய டைந்துதவ மாற்றிலய னேநம்
செம்மலெதி ருற்றுனது சிந்தையக லாத
விம்மலையொ ழித்துவரம் வேண்டிய - தளிப்பன்
பொம்மலைய டைந்திடுவை போதிமலர்ப்போது.

## தெளிவுரை

அத்தணிகை மலையை அடைந்து தவம் செய்தால், பிரமனே! நம் புதல்வன் எதிரே தோன்றி உனது உள்ளத்தில் நீங்காத ஏக்கத்தை ஒழித்து வேண்டிய வரங்களை அளிப்பான்; அழகிய மலையை அடைவாயாக! உன்மலரிருப்பிடத்தை அடைவாயாக!

## விளக்கம்

அயன் - பிரமன்
செம்மல் - பெருமையில் சிறந்தவன், புதல்வன்
சிந்தை - உள்ளம்
விம்மல் - ஏக்கம்
பொம்மலை - பொன்மலை, தணிகைமலை
மலர்ப்போது - தாமரைமலர்

186. என்றிறைவ னேவலுமி றைஞ்சிவிடை பெற்றுச்
சென்று!தணி கைக்கணமர் சேயினெதிர் கீழ்பாற்
குன்றினிடை யென்பெயர்கு லாவியிடு தீர்த்தம்
துன்றுசுனை யொன்றுசுத னேயினிது தொட்டேன்.

## தெளிவுரை

என்று சிவபெருமான் கட்டளையிடவும், வணங்கி விடை பெற்றுச் சென்று, தணிகையில் அமர்ந்துள்ள குழந்தையாகிய முருகனுக்கு எதிரில் கீழிடம் மலையின் இடையில் என்பெயரில் அமைந்துள்ள தீர்த்தம் நெருங்கும் சுனையொன்றனை, மகனே இனிது தோண்டினேன்.

## விளக்கம்

இறைவன் - சிவபெருமான்
ஏவல் - கட்டளையிடுதல்
இறைஞ்சி - வணங்கி
சேய் - முருகன்
துன்று - நெருங்கும்
சுதன் - மகன்
தொட்டேன் - தோண்டினேன்.

187. அப்பனலின் மூழ்கிடினு மங்கைகொடு சென்னி
ஒப்பறுபு ரோக்கண முஞற்றிடினு முள்ளே
துப்புறவ ருந்தினுந் தொழப்பெறினு மன்னோர்
எப்பிணியு நீங்கியென திவ்வுலகில் வாழ்வார்

## தெளிவுரை

அந்த நீரில் மூழ்கினாலும், உள்ளங்கையில் கொண்டு தலையில் இணையற்ற அத்தீர்த்தத்தைத் தெளித்துக் கொண்டாலும், உள்ளே உணவாக அருந்தினாலும், அதனை வணங்கினாலும், அத்தகையவர் எந்த நோயும் நீங்கி என்னுடைய இவ்வுலகில் வாழ்வார்கள்.

## விளக்கம்

அங்கை - அகங்கை, உள்ளங்கை
கொடு - கொண்டு
சென்னி - தலை
புரோக்கணம் - தெளித்துக்கொள்ளுதல்
உஞற்றுதல் - செய்தல்
துப்பு - உணவு

*(வேறு)*

188. புனலதின் மூழ்கிமுப் போதுஞ் சந்திசெய்
தனனடு விருந்துகண் ணருக்க னோக்கியே
மனமொரு மித்தறு முகவன் மந்திரந்
தனையெணி யவனிரு தாளை யுன்னியே

## தெளிவுரை

நீரில் மூழ்கி மூன்று பொழுதும் (அவன் பெயரையே) இசைத்து, அனல் நடுவில் இருந்து, கண்களால் அச்சத்துடன் பார்த்து,

மனம் ஒருமித்து, ஆறுமுகனுடைய மந்திரத்தை எண்ணி அவன் இரு திருவடிகளை நினைத்து,

## விளக்கம்

புனல் - நீர்
சந்தி - இசைப்பு
அருக்கல் - அச்சம்
எணி - எண்ணி
தாள் - திருவடிகள்
உன்னி - நினைத்து

189. அருந்தவ நெடும்பக லாற்றி னேனதைத்
தெரிந்தறு முகனருள் செய்ய வென்முனே
பரிந்தெழுந் தருளினன் பசிய தோகைமேல்
திருந்தொரு கோடிசூ ரியரிற் றேசுற

## தெளிவுரை

அரியதவம் நீண்ட நாட்கள் புரிந்தேன், அதனைத் தெரிந்து, ஆறுமுகப்பெருமான் அருள் செய்தற்குப் பசிய மயிலின் மீது தூய ஒரு கோடி சூரியர்களைவிட ஒளியுடன் விளங்கி என்முன்னே தோன்றி அருள் செய்தான்.

## விளக்கம்

நெடும்பகல் - நீண்ட நாட்கள்
முனே - முன்னே
பரிந்து - அன்புகொண்டு
தோகை - மயில்
தேசு - அழகு, ஒளிகாங்கை

190. கந்தகத் தூரிகுங் குமங்க ருப்புரச்
சந்தன மணிந்துபொன் னாடை சாத்தியே
எந்தநற் பணிகளு மிசைத ரப்புனைந்
திந்திரன் முதலிமை யவர்க ளேத்தவே

## தெளிவுரை

நறுமணம் பொருந்திய கத்தூரி, குங்குமம், கருப்பூரம், சந்தனம் பூசிப் பொன் ஆடை சாத்தி, எத்தகைய நல்ல பணிகளையும் பொருத்தமுடன் புனைந்து, இந்திரன முதலிய தேவர்கள் போற்ற,

## விளக்கம்

கந்தம் - நறுமணம், வாசனை
கருப்புரம் - கருப்பூரம்
இசைதர - பொருத்தமுற
இமையவர்கள் - தேவர்கள்

191. பற்பல பூதரும் பாங்கர் சூழ்வர
உற்பல விழியரு ளொழுக லோங்குகந்
தற்பரோர் கோடியிற் றயங்கு சுந்தரப்
பொற்பினை யுளமகிழ் பூப்பக் கண்டனன்.

## தெளிவுரை

பற்பல பூதகணத்தவர்களும் பக்கத்தில் சூழ்ந்துவர குவளை மலர்போன்ற கண்களில் அருள் ஒங்கும் உயர்ந்த ஒருகோடி மன் மதர்கள் விளங்கும் அழகிய தணிகைமலையினை உள்ளத்தில் மகிழ்ச்சி மலரக் கண்டேன்.

### விளக்கம்

பூதர் - பூதகணங்கள்
பாங்கர் - பக்கம்
சூழ்வர - சூழ்ந்துவர
உற்பலம் - குவளை மலர்
கந்தற்பர் - மன்மதர்
சுந்தரம் - அழகு

192. கண்டவக் கணந்தனிற் கதுமென் றேயெழீஇத்
தெண்டனிட் டேனெதிர் சிலம்பு கொஞ்சிய
புண்டரி கப்பதம் போற்றிப் பின்னரும்
மண்டனி லடிக்கடி வணங்கி யேத்தினேன்.

### தெளிவுரை

கண்ட அந்தநேரமே விரைந்து எழுந்து, வணங்கினேன்; எதிரில் சிலம்பு கொஞ்சும், தாமரைப் பாதங்களைப் போற்றிப் பிறகும், மண்ணில் அடிக்கடி வணங்கிப் போற்றினேன்.

### விளக்கம்

கதுமென - விரைய
கதுமெனல் - சீக்கிரக்குறிப்பு
எழீஇ - எழுந்து
புண்டரிகப்பதம் - தாமரைப் பாதங்கள்
மண்டனில் - மண்தனில்
ஏத்துதல் - போற்றி வணங்குதல்

(அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்)

193. சாந்தனே போற்றி யெங்கள் சங்கரன் மகனே போற்றி
சேந்தனே போற்றி வள்ளி தெய்வயா னைக்கி சைந்த
காந்தனே போற்றி மேலாங் கந்தனே போற்றி விண்ணோர்
வேந்தனே போற்றி மாயா விகாரனே போற்றி போற்றி

## தெளிவுரை

அமைதியானவனே போற்றி! எங்கள் சங்கரன் மைந்தனே போற்றி! குமரனே போற்றி! வள்ளிக்கும் தெய்வயானைக்கும் இசைந்த தலைவனே போற்றி! மேன்மையான கந்தனே போற்றி! தேவர்களுக்கு வேந்தனே போற்றி! அழியாத விளையாடல் புரிபவனே போற்றி! போற்றி!

## விளக்கம்

சேந்தன் - குமரன்
காந்தன் - கணவன், தலைவன்
மாயாவிகாரன் - அழியாத விளையாடல் புரிபவன்
விகாரன் - விளையாட்டுக்காரன்

194. புகழுமா சேனா போற்றி பொருஞ்சேனா பதியே போற்றி
மகிழ்பர மான்மா போற்றி வருஞ்சர சன்மா போற்றி
திகழ்வாகு லேயா போற்றி சிறந்திடுங் குகனே போற்றி
இகழ்விலாக் குமரா போற்றி யிளையவா போற்றி போற்றி!

## தெளிவுரை

புகழுக்குரிய பெரியபடையைக் கொண்டவனே போற்றி! போரிடும் சேனைக்குத் தலைவனே போற்றி! மகிழ்தற்குரிய மேலான

கடவுளே போற்றி! சரசன்மனே போற்றி! விளங்கும் முருகா போற்றி! சிறந்தகுகனே போற்றி! இகழ்ச்சி இல்லாத குமரா போற்றி! இளையவனே போற்றி! போற்றி!

## விளக்கம்

பொரும்சேனாபதி - போரிடும் சேனாதிபதி
பரமான்மா - பேரான்மா, கடவுள்
சரசன்மன் - முருகன்
வாகுலேயா - முருகக்கடவுளே!
வாகுலம் - பாகுலம், கார்த்திகை

195. பத்தருக் கெளியாய் போற்றி பாற்கார் கோடி யொன்றாய்
மெத்திய வொளியின் மிக்கு விளங்கிய வுருவா போற்றி
சத்தியத் தத்தாய் போற்றி சகலவா யுதனே போற்றி
சுத்தகந் தர்ப்ப கோடி சுந்தர போற்றி போற்றி

## தெளிவுரை

அடியார்க்கு எளியவனே போற்றி! கோடி சூரியர்கள் ஒருங்கிருந்து மிகுந்த ஒளியைவிட மிகுந்த ஒளிவிளங்கும் வடிவனே போற்றி! வாய்மைக்குக் கடவுளே போற்றி! அனைத்து ஆயுதங்களும் உடையவனே போற்றி! தூய மன்மதர்கள் கோடிபேர் அழகையும் கொண்டவனே போற்றி! போற்றி!

## விளக்கம்

பாற்கரர் - சூரியர்கள்
மெத்திய - மிகுந்த
அத்தாய் - கடவுளே, தந்தையே, குருவே
சகல ஆயுதன் - எல்லா ஆயுதங்களையும் உடையவன்
சுத்தம் - தூய்மை
கந்தர்ப்பர் - மன்மதர்

196. எனச்சொலி யேத்திப் பின்னீ திரந்திட்டேன் முனியே
யெங்கும்
துனிச்செறி பகவ னேநற் சுப்பிர மணிய னென்னும்
தனிப்பெயர் படைத்து வீறுந் தயாநிதி யடியேன் செய்த
கனப்படு மபரா தத்தைக் கமித்தருள் கடைக்கண் வைத்தே.

## தெளிவுரை

என்று சொல்லி வணங்கிப் பின்னர் இதனை இரந்து கேட்டேன் நாரதமுனியே! ''அச்சத்தைக் களையும் கடவுளே! நல்ல சுப்பிரமணியன் என்னும் ஒப்பற்ற பெயர்படைத்துப் பெருமை கொண்ட அருட்செல்வனே! அருள்கண்வைத்து அடியேன் செய்த மிகுதியான பிழைகளைப் பொறுத்தருள்வாயாக!''

## விளக்கம்

சொலி - சொல்லி
ஏத்தி - வணங்கி
துனிச்செறிபகவன் - அச்சம்களையும் கடவுள், துன்பம் நீக்கும் கடவுள்
வீறுதல் - பெருமையுறுதல்
கனப்படும் அபராதம் - மிகுதியான பிழைகள்
கமித்தருள் - க்ஷமித்தருள், பொறுத்தருள்க

197. காத்தரு ளபய மென்னைக் கைவிடே லென்று பத்தி
வாய்த்திடு முளத்தினோனடும் வழுத்துமென்
மொழியைக் கந்த
மூர்த்தியு முவந்து கேட்டு மொழிந்தனன் பிரம னேநீ
மாத்தவ நெடுநாள் செய்த வாற்றினான் மனம் கிழ்ந்தேம்.

## தெளிவுரை

''காத்தருள்க! அடைக்கலம்! என்னைக் கைவிடேல்!'' என்று இறையன்பு வாய்க்கும் உள்ளத்தோடும் வணங்கும் என் சொற்களைக் கந்தமூர்த்தியும் மகிழ்ந்துகேட்டு, ''பிரமனே! நீ பெரியதவம் நீண்ட நாட்கள் செய்த நெறியினால் மனம் மகிழ்ந்தோம்'' என்று சொல்லியருளினான்.

## விளக்கம்

அபயம் - அடைக்கலம்
வழுத்தும் - வணங்கும்
மாத்தவம் - பெரிய தவம்
ஆற்றினால் - நெறியினால்.

198. அடிக்கடி நமக்க ரித்தே யற்புதத் துதிகள் செய்தாய்
கடிக்கம லாச னாநின் கருத்துறு வரங்களெல்லாம்
நொடித்திடி னனைத்து மீது நோக்கிடேல் வேறு சிந்தை
விடுத்திடென் றண்ணல் கூற வியந்தியா
னிவைபு கன்றேன்.

## தெளிவுரை

''அடிக்கடி வணங்கி அற்புத வணக்கங்கள் புரிந்தாய்; நறுமணமுள்ள தாமரைமலர் இருக்கையனே! உன் கருத்தில் உள்ள வரங்களை எல்லாம் சொன்னால், அனைத்தையும் அளிப்போம்; வேறு எண்ணாதே! துன்பத்தை விடுக!'' என்று தலைவனாகிய முருகன் சொல்ல, வியந்து நான் இவற்றைச் சொன்னேன்.

## விளக்கம்

நமக்கரித்தே - வணங்கியே
கடிக்கமல ஆசனா - நறுமணமுள்ள தாமரை மலரை இருக்கையாகக் கொண்டவனே
நொடித்திடின் - சொன்னால்
சிந்தை - துன்பம்.

(வேறு)

199. கார்த்தி கேய மாசேன கவினார் பத்த வச்சலனாம்
தீர்த்த யான்முன்னறியாமற் செய்யு மபராதம் பொறுத்தாள்
மூர்த்தி வாகு லேயனெனு முருக னேகுக் குடத்துவச
ஆர்த்த கருணை வாரிதியே யழகார் சரவ ணோற்பவனே.

## தெளிவுரை

கார்த்திகேயனே! பெரிய படையைக் கொண்டவனே! அழகு நிறைந்த பக்தவச்சலனாகிய ஆசானே! நான் முன்பு அறியாமல் செய்த குற்றங்களைப் பொறுத்தாள்க! மூர்த்தியே! வாகுலேயன் என்னும் முருகனே! கோழிக்கொடியை அணிந்த அருட்கடலே! அழகிய சரவணப் பொய்கையில் தோன்றியவனே!

## விளக்கவுரை

தீர்த்தன் - ஆசான்
அபராதம் - குற்றம், பிழை
குக்குடத்துவசன் - கோழிக்கொடி உடையவன்
ஆர்த்த - அணிந்த
சரவணோற்பவன் - சரவணப் பொய்கையில் தோன்றியவன்.

200. ஆக்க லளித்த லழித்திடுத
லாமுத் தொழிற்குங் காரணனே
போக்கும் வரவு மிலாதபரி
புரண வடிவே பொன்றுடலும்
வாக்கு மனமுங் கடந்தொளிரும்
வள்ள லேசந் ததநீலம்
பூக்குந் தணிகை மால்வரைவாழ்
புனித னேநின் றரிசனத்தால்

## தெளிவுரை

ஆக்கல், காத்தல், அழித்தல் ஆகிய மூன்று தொழில்களுக்கும் காரணமானவனே! போக்கும் வரவும் இல்லாத எங்கும் நிறைந்த வடிவானவனே! அழியும் உடலும் வாக்கும் மனமும் கடந்து ஒளிசெய்யும் வள்ளலே! எப்பொழுதும் குவளை மலர் மலரும் உயர்ந்த தணிகைமலையில் வாழும் தூய்மையானவனே! நின் தரிசனத்தினால்,

## விளக்கம்

பரிபுரணவடிவே - பரிபூரணவடிவே, எங்கும் நிறைந்த உருவம் உடையவனே
பொன்றும் உடல் - அழியும் உடல்
சந்ததம் - எப்பொழுதும்
நீலம் - குவளைமலர்
மால்வரை - உயர்ந்த மலை
புனிதன் - தூய்மையானவன்.

201. புனித னானேன் யான்மிகவும்
புனித னானே னின்றிறைவ
எனது பதவி யருளெனயா
னிரப்ப மகிழ்ந்து கருணையுடன்

வனையுமுலக சிருட்டியக்க
மாலை கரகந் தமையீந்து
நினையும் வரமெ லாமளித்து
நிமல வொளியாய் மறைந்தனனே.

## தெளிவுரை

''இறைவனே! தூயவன் ஆனேன்; இன்று நான் மிகவும் தூயவன் ஆனேன்; எனது (படைத்தற்குரிய) பதவியை அருள்க!'' என நான் இரக்க, மகிழ்ச்சியடைந்து, அருளுடன், உலகைப் படைத்து அமைப்பதற்குரிய உருத்திராக்ஷ மாலையையும் கமண்டலத்தையும் கொடுத்து, நினைக்கின்ற வரங்கள் அனைத்தும் அளித்து, குற்றமற்ற ஒளியாக மறைந்தனன்.

## விளக்கம்

புனிதன் - தூய்மையானவன்
வனையும் - செய்யும்
சிருட்டி - படைத்தல்
அக்கமாலை - உருத்திராக்கமாலை
கரகம் - கமண்டலம்

202. தந்த வரமெ லாம்பெற்றுத்
தணிகை மலையை வணங்கிநான்
இந்த வுலகி லடைந்துமுன்போ
லெல்லாஞ் சிருட்டி செய்திருந்தேன்
முந்த யான்செய் பிரமசுனை
முழுகி முருக னடிபணிந்தோர்
கந்த வுலக மடைந்திடுவர்
கானம் பயினா ரதமுனியே.

## தெளிவுரை

முருகன் அளித்த வரங்கள் அனைத்தையும் பெற்றுக் கொண்டு, தணிகை மலையை வணங்கிவிட்டு, இந்த உலகை அடைந்து, முன்போல் எல்லாவற்றையும் படைத்துக் கொண்டு இருந்தேன். முற்பட்டு நான் செய்த பிரமசுனையில் மூழ்கி முருகனுடைய திருவடிகளை வணங்கியவர்கள், கந்தனுடைய உலகை அடைவர்; இசைபயிலும் நாரதமுனியே!

## விளக்கம்

முந்த - முற்பட்டு
கானம் - இசை

203. உண்மை யிதுநீ யறியெனலு
முவந்து முனிநா ரதன்பணிந்து
தண்மை பெறுசெந் தாமரைவாழ்
சதுமா முகவ தணிகைமலை
வண்மை பெறும்வை பவமினுநீ
வகுப்பக் கேட்கும் வாஞ்சையுளேன்
ஒண்மை பெறும்வா கீசவெனக்
குரைத்தி யெனவே தியனுரைப்பான்.

## தெளிவுரை

''இந்த உண்மையை நீ அறிவாயாக'' எனலும் மகிழ்ச்சி யடைந்து, நாரத முனிவன் வணங்கி, ''குளிர்ச்சி பெறும் செந்தாமரை மலரில் வாழும் நான்முகனே! தணிகை மலையின் வளம் பெறும் வரலாறு மேலும் நீ வகுத்துக் கூறக் கேட்கும் விருப்பம் உடை

போன்; அறிவும் பெறும் கலைமகள் ஈசனே! எனக்கு உரைப்பாய்''

என்று வேதியன் சொல்லலானான்.

### விளக்கம்

சதுமாமுகவன் - நான்குமுகங்கள் கொண்ட பிரமன்
வண்மை - வளம்
வைபவம் - வரலாறு
வாஞ்சை - விருப்பம்
ஒண்மை - அறிவு
வாகீசன் - பிரமன்
வாக்கு - கலைமகள்

## 9. அகத்தியன் கல்லாரகிரி அடைந்த அத்தியாயம்

(**கதைச்சுருக்கம் :-** முன்னர் ஒரு காலத்தில் கங்கைக் கரையில் வீற்றிருந்து சித்தகணங்களுக்கு அனைத்துச் சாத்திரங்களையும் உரைத்தருளினார். அங்கிருந்த அகத்திய முனிவர் சிவனை வணங்கி எழுந்து, ''சிவதருமோத்தரம் என்றும் சாத்திரத்தைக் கேட்கும் விருப்புடையேன்; திருவாய் மலர்ந்தருளல் வேண்டும்'' என வேண்டிக் கொண்டார்; சிவபெருமான், தென்திசையில் கந்தாசலம் சென்று தவம்புரியின் முருகன் தோன்றி உனக்குச் சிவதருமோத்தரத்தை உபதேசம் செய்வான்'' எனக் கூறினார்.

அகத்திய முனிவர் இடையில் பல தலங்களைத் தரிசித்த பிறகு தணிகாசலம் அடைந்து, வீரட்டேசுவரரைத் தரிசித்து வணங்கினர்.)

(எழுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்)

204. சானவி தீரந் தனின்முன மொரு நாள்
சங்கரன் சகலசாத் திரமும்
மேனவில் சித்த கணங்களுக் குரைத்து
வீற்றிருந் தருளுமேல் வையினில்
நூனய முணர்ந்த வகத்திய னணுகி
நுதற்கணான் சேவடி வணங்கித்
தானெழுந் திருகை தலைமிசைக் கூப்பிச்
சார்பய பத்தியோ டுரைப்பான்.

## தெளிவுரை

கங்கைக்கரையில் முன்னர் ஒரு நாள் சிவபெருமான் அனைத்துக்கலைகளையும் உயர்த்திச் சொல்லப்பெறும் சித்தகணங்களுக்கு உரைத்து வீற்றிருந்து அருளும் நாளில், நூல் நயம் அறிந்த அகத்திய முனிவன் நெருங்கி, நெற்றிக்கண்ணனாகிய சிவபெருமானுடைய திருவடிகளை வணங்கி எழுந்து, இரு கைகளையும் தலையின் மீது கூப்பிச் சார்ந்த அச்சம் பொருந்திய இறையன்புடன் உரைக்கலானான்.

## விளக்கம்

சானவிதீரம் - கங்கைக்கரை
மேல்நவில் - உயர்த்திக்கூறப்பெறும்
அருளுமேல் வையினில் - அருளும் எல்வையினில், அருளும் நாளினில்
நுதற்கணான் - நெற்றிக் கண்ணையுடைய சிவபெருமான்
சேவடி - சிவந்த திருவடிகள்.
மிசை - மேலே.

205. இறைவனே புவியி லுளநர ரெல்லாம்
மிழைத்திடு தீவினை நீங்கி
மறைபுகல் புத்தி முத்தியிற் புகுநல்
வழியருள் சிவதன்மோத் திரமென்
றறைதரு நாமம் படைத்தசாத் திரத்தை
யடியனேன் கேட்குமா சையினால்
நிறைதரு மனத்த னாயினே னதனை
நீயருள் புரிகென விரந்தான்.

## தெளிவுரை

'கடவுளே! உலகிலுள்ள மனிதர்கள் அனைவரும் புரி கின்ற தீய செயல்கள் நீங்கி மறை நூல்கள் கூறும் அறிவு, மோட்சம் புகும் நல்வழி ஆகியவற்றை அருளும் 'சிவதன்மோத்திரம்' என்று கூறப்பெறும் பெயர்படைத்த கலையைக் கேட்டருளும் ஆசையி னால், நிறைந்த மனத்தன் ஆயினேன்; நீயதனை அருள் புரிக'' என்று வேண்டினான்.

## விளக்கம்

நரர் - மனிதர்கள்
இழைத்திடும் - செய்யும்
புத்தி - மோட்சம், வீடுபேறு
சிவதன்மோத்திரம் - சைவநூல்
சாத்திரம் - கலை.

206. அம்மொழி யிறைகேட் டகத்தியன் முகம்பார்த்
தறைகுவன் கும்பமா முனிவ
செம்மைசே ரிந்தக் கங்கைமா நதிக்குத்
தெற்கு நூறுயோ சனையில்
நம்மையே மகிழ்செய் காசிபோற் றுவரை
நாரணற் கிட்டமா னதுபோல்
தம்மைநேர் கந்தற் கிட்டமாங் கந்தா
சலமென வோர்கிரி தயங்கும்

## தெளிவுரை

அவ்வுரையைச் சிவபெருமான் கேட்டு அகத்தியனுடைய முகத்தைப்பார்த்துச் சொல்லலாயினன்; ''அகத்திய முனிவனே! அழகுபொருந்திய இந்தக் கங்கை மாநதிக்குத் தெற்கில் இருநூறு யோசனை தொலைவில், நம்மை மகிழ்ச்சியடையச் செய்யும் காசி போல், துவாரகைக் கண்ணனுக்கு விருப்பானதுபோல், அவருக்கு இணையான முருகருக்கு விருப்பானதாகும் கந்தாசலம் என்று ஒரு மலை விளங்கும்.

## விளக்கம்

அறைகுவன் - சொல்லாயினன்
கும்பமாமுனிவ - அகத்திய முனிவனே!
செம்மை - செப்பம், அழகு
மகிழ்செய் - மகிழ்ச்சியடையச் செய்யும்
துவரை நாரணன் - துவாரகையின் கண்ணன்
இடம் - விருப்பு
கந்தாசலம் - தணிகை மலைக்குரிய பெயர்களுள் ஒன்று.

207. சந்தத மகலா தங்கண்வீற் றிருப்பன்
சரவணோற் பவனவ ணீபோய்
பந்தனை செயுமைம் பொறிவழி புலனிற்
படர்தரு மனத்தினை யடக்கி
ஐந்தழ னடுவ ணருந்தவம் புரியி
னறுமுகன் விழியெதிர் தோன்றிச்
சிந்தனைப் படிநின் செவிப்புல னறியச்
சிவன்மோத் தரத்தினைத் தெருட்டும்.

## தெளிவுரை

எப்போதும் நீங்காது அவ்விடம் சரவணப்பொய்கையில் தோன்றிய முருகன் வீற்றிருப்பான்; அங்கு நீ சென்று, ஐம்பொறிகள் வழியாகக் கட்டுப்படுத்தும் புலன்களில் பரவும் மனத்தினை அடக்கி ஐந்து தீக்களுக்கு நடுவில் அரிய தவம் செய்தால், ஆறுமுகன் கண்ணெதிரில் தோன்றி எண்ணப்படி உன்னுடைய காதுகளில் கேட்கும்படி, சிவதன்மோத்திரத்தை அறிவுறுத்துவான்.

## விளக்கம்

சந்ததம் - எப்போதும்
அங்கண் - அவ்விடம்
சரவணோற்பவன் - சரவணப்பொய்கையில் தோன்றியவன்
அவண் - அவ்விடம்
பந்தனை - கட்டு
ஐந்தழல் - ஐந்து தழல், ஐந்து நெருப்புகள், பஞ்சாக்கினி நான்கு திசைகளில் மூடப்பட்ட நெருப்புக்களும் சூரியனும்
நடுவண் - மையம்
தெருட்டும் - அறிவுறுத்துவான்.

208. அகத்திய முனிவ செல்கென விறைவ
னருளலு மகமகிழ்ந் திறைஞ்சித்
தகத்தனி விடைபெற் றவாமியத் திசையிற்
சார்தலும் பருப்பத மெனுமோர்
நகத்தினை விழிகண் டதன்முடி மிசைவாழ்
நாயகி பிரமராம் பிகையோ
டுகைத்திடு விடையான் மல்லிகார்ச் சுனனை
யுவந்துதாழ்ந் தெழுந்துள முருகி.

## தெளிவுரை

''அகத்திய முனிவனே செல்க!'' என்று சிவன் அருளவும் உள்ளம் மகிழ்ந்து வணங்கித் தக்கபடிச் சிறப்பாக விடைபெற்றுத் தெற்குத் திசையடைதலும், ஸ்ரீசைலம் என்னும் மலையைக் கண் களால் கண்டு அதன் உச்சிமீது வாழும் தலைவி பிரமராம்பிகை யுடன் செலுத்தும் எருதுவாகனனாகிய மல்லிகார்ச்சுனனை மகிழ்ச்சி யுடன் வணங்கி எழுந்து, உள்ளம் நெகிழ்ந்து,

## விளக்கம்

இறைஞ்சி - வணங்கி
தக - தக்கபடி
தனி - சிறப்பாக
அவாமியத்திசை - தெற்குத்திசை
பருப்பதம் - ஸ்ரீசைலம்
நகத்தினை - மலையை
பிரமராம்பிகை - ஸ்ரீசைலத்து அம்பிகையின் பெயர்.
உகைத்திடு - செலுத்தும்
விடையான் - எருதுவாகனமுடையவனாகிய சிவபெருமான்.

209. தோத்திரம் பலசெய் தரிதவ ணகன்று
தூமுனி தென்றிசை வருங்கால்
ஆர்த்தலை யெறிபொன் முகரிதீ ரத்தி
னமர்ந்தகா ளத்திநா யகனைப்
பார்த்தடி வணங்கி ஞானப்பூங் கோதை
பதமலர் சிரமுறப் பணிந்து
மாத்துதி புகன்று தெக்கண நோக்கி
வரநந்தி யாறெதிர் கண்டான்.

## தெளிவுரை

வணக்கங்கள் பல செய்து அரிதாக அந்த இடத்தை விட்டு நீங்கி தூய அகத்திய முனிவன் தென்திசை நோக்கி வரும்போது, ஆரவாரத்துடன் அலைவீசும் பொன்முகரி ஆற்றின் கரையில் வீற்றிருக்கும் காளத்தி நாயகனைக் கண்டு திருவடிகளை வணங்கி, ஞானப்பூங்கோதை நாயகியின் திருவடிகளைத் தலையால் பணிந்து, பெரிதும் வணக்கங்கள் கூறித் தெற்கு நோக்கி வரவும், நந்தியாற்றினை எதிரில் கண்டான்.

## விளக்கம்

தோத்திரம் - வணக்கம்
அவண் - அவ்விடம்
தூமுனி - தூய முனிவன் அகத்தியன்
ஆர்த்து - ஆரவாரம் செய்து
தீரம் - கரை
பதமலர் - திருவடி மலர்
சிரம் - தலை
மாத்துதி - பெரிய வணக்கங்கள்
தெக்கணம் - தெற்கு

210. புண்ணிய கங்கா நதியினு மேலாம்
புண்ணியம் படைத்தது தூநீர்
நண்ணிய குருகு சலசரங் கமல
நறுமலர் நீலமுங் கஞலித்
தண்ணிய நறும்பூம் பொழிலிரு மருங்குஞ்
சார்ந்துகண் டவர்பவ நீக்கித்
திண்ணிய கதியைத் தரும்பிர வாகச்
செறிவினைக் குறித்தெதிர் வணங்கி.

## தெளிவுரை

புண்ணிய கங்கையாற்றை விட மேன்மையான புண்ணியம் கொண்டது; தூய நீரை நெருங்கிய குருகு, நீரில் உலவும் மீன் முதலியன, நறுமணமுள்ள தாமரை மலர் ஆகியவற்றுடன் குவளை மலரும் நிறைந்து, குளிர்ந்த நறுமலர்கள் உள்ள சோலைகள் இருப்பக்கங்களிலும் சார்ந்து, கண்டவர்களின் பாவங்களை நீக்கித் திண்ணமான வீடுபேற்றைத்தரும் வெள்ளத்தின் மிகுதியை நோக்கி எதிரில் வணங்கி,

## விளக்கம்

நண்ணிய - நெருங்கிய
குருகு - பறவை
சலசரம் - நீரில் உலவும் மீன் முதலிய உயிரினங்கள்
நீலம் - குவளைமலர்
கஞலி - நிறைந்து, நெருங்கி
பொழில் - சோலை
மருங்கு - பக்கம்
பவம் - பாவம், பிறப்பு
பிரவாகச் செறிவினை - வெள்ளத்தின் மிகுதியை
கதி - அடைக்கலம், புகலிடம், மோட்சம், வழி.

211. எழுந்ததின் மூழ்கிப் பூதிகண் டிகையு
மியல்புற வணிந்தனுட் டானம்
விழைந்துசெய் துந்தி வடகரைத் தளிவாழ்
விமலவீ ரேசரைக் காணூஉத்
தழுந்தனி யார்வத் தொடுமெதிர் தண்டிற்
றாழ்ந்தெழுந் திருகையுஞ் சிரமேல்
அழுந்திடக் கூப்பி மெய்ம்மயிர் பொடிப்ப
வகத்தியன் றுதியிவை புகல்வான்.

## தெளிவுரை

எழுந்து அதில் மூழ்கித்திருநீறும் உருத்திராட்ச மாலையும் இயல்புடன் அணிந்து வழிபாட்டைக் கைக்கொண்டு விரும்பிச் செய்து நந்தியாற்றின் வடகரையில் உள்ள கோயிலில் வீற்றிருக்கும் குற்றமற்ற வீராட்டகாசகரைக் கண்டு தழுவும் தனி ஆர்வத்துடன் எதிரில் தடிக்கம்பு போல விழுந்து வணங்கி எழுந்து இரு கரங்களையும் தலைமேல் அழுந்திக்கூப்பி மெய்மயிர்கள் சிலிர்க்க அகத்தியன் இத்துதிகளைச் சொல்லலானான்.

## விளக்கம்

பூதி - திருநீறு
கண்டிகை - உருத்திராக்கமாலை
அனுட்டானம் - வழிபாட்டைக் கைக்கொள்ளுதல், கைக்கொள்ளுகை
உந்தி - ஆறு, நந்தியாறு, நந்தினி
தளி - கோயில்
விமலவீரேசர் - குற்றமற்ற வீராட்டகாசர்.
காணூஉ - காணவும்
தழூம் - தழுவும்
தண்டில்தாழ்ந்து - தடிக்கம்புபோல விழுந்து வணங்கி
பொடிப்ப - புளகம், மயிர் சிலிர்த்தல்.

212. அரகர போற்றி சம்புவே போற்றி
யாதிமா தேவனே போற்றி
பரசிவ போற்றி சங்கர போற்றி
பார்ப்பதி பாகனே போற்றி
வரமரு ணீல கண்டனே போற்றி
வளர்விசு வேசனே போற்றி
திரமுறு மமர வல்லபா போற்றி
செயங்கொள்வீ ரேசனே போற்றி

## தெளிவுரை

சிவசிவ போற்றி! சுயம்புவே போற்றி! தொன்மையான மகாதேவனே போற்றி! கடவுளாகிய சிவனே போற்றி! சங்கரா போற்றி! பார்வதியைப்பாகமாகக் கொண்டவனே போற்றி! வரம் அருளும் நீலகண்டனே போற்றி! வளரும் விசுவேசனே போற்றி! வலிமையுள்ள தேவர்களைத் தம் ஆணைவழியே நடத்தும் ஆற்றலனே போற்றி! வெற்றி கொள்ளும் வீரேசனே போற்றி!

## விளக்கம்

அரகர - சிவசிவ
சம்பு - சுயம்பு, தானாகத் தோன்றியவன்.
ஆதி - தொன்மை, கடவுள்
பார்ப்பதிபாகன் - பார்வதியைத் தன் ஒருபாகமாகக் கொண்டவன்
விசுவேசன் - சிவபிரான்
அமரவல்லபா - தேவர்களைத்தன் ஆணைவழியே நடத்தும் ஆற்றல் உடையவனே.
செயம் - வெற்றி.

213: என்னுட லின்று நல்லுட லாயிற்
றியான்பரி தவமுநற் றவமே
மன்னுமென் ஞானம் பலன்கொண்மெய்ஞ் ஞானம்
வாய்ந்ததுன் பாதசே வையினாற்
புன்மைதீர் புனித னாயினன் புனித
னாயினன் புனிதனா யினன்யான்
துன்னிய பிறவி தொலைத்திடு முனது
துணைப்பதந் துதித்திடு திறத்தால்

## தெளிவுரை

உன்பாத சேவையினால், என் உடல் இன்று நல்ல உடல் ஆயிற்று; நான் செய்த தவமும் நல்லதவமே; நிலைபெற்ற என் ஞானம் பலன் கொண்ட மெய்ஞானம்; சிறுமை நீங்கிய தூயவன் ஆயினேன்; தூயவன் ஆயினேன்; நான் தூயவன் ஆயினேன். உன்னுடைய இரு திருவடிகளையும் வணங்கும் தன்மையால் நெருங்கும் பிறவியை அது போக்கும்.

## விளக்கம்

மன்னும் என்ஞானம் - நிலைபெற்ற என் மெய்யறிவு
பாதசேவை - திருவடிகட்குத் தொண்டு இயற்றல்
புனிதன் - தூயவன்
துன்னிய - நெருங்கிய
துணைப்பதம் - இருதிருவடிகள்
திறம் - தன்மை

214. முன்பிறந் தோரி லினிப்பிறப் போரின்
முதிர்கருப் பத்துற வோரில்
உன்பத நினையா தன்னிய தெய்வ
முவப்பரே லவர்குலம் வேண்டேன்
என்குலந் தனக்குத் தெய்வமாதலினீ
யிசைந்திடு முலகமுன் றினும்யான்
துன்பறு சுத்த னாயினேன் சுத்த
னாயினேன் சுத்தனா யினனே.

## தெளிவுரை

முன்னர் பிறந்தவர்களில், இனிமேல் பிறப்பவர்களின் முதிர்ந்த கருப்பத்தினின்றும் அடைந்தவர்களில் உன்னுடைய திருவடி

களை நினைக்காமல், வேறு தெய்வத்தை விரும்புவார்களாயின், அவர் குலத்தை விரும்பேன்; என்குலத்திற்கு நீ தெய்வம் ஆதலால், நீ பொருந்தியுள்ள மூன்று உலகங்களிலும் துன்பம் நீங்கிய தூயவன் ஆயினேன்; தூயவன் ஆயினேன்; தூயவன் ஆயினேன்.

### விளக்கம்

உன்பதம் - உன்திருவடிகள்
அன்னிய தெய்வம் - வேறு கடவுள்
உவப்பரேல் - விரும்புவார்களாயின்

215. அனேகசன் மங்க டொறும்பரி சுத்த
ராயனுட் டானநித் தியராய்க்
கனாவிலுந் தீமை புரிகிலா தவர்க்கே
கருத்தில் வந் துறுஞ்சிவ பத்தி
பினாகபாணியனா யொளிர்சிவன் சம்பு
பேருருவாஞ்சிவன் சம்பு
எனாதனாஞ் சிவனே சம்புவென் றுரைத்திட்
டிவ்விதங் கழிகவென் வாணாள்.

### தெளிவுரை

பல பிறவிகள் தோறும் முழுதும் தூயவர்களாகவும், வழிபாட்டை நாள்தோறும் கைக்கொள்பவர்களாகவும், கனவிலும் தீமை செய்யாதவர்களுக்கே எண்ணத்தில் வந்தடையும் சிவபக்தி, வில்லுடையவனாக விளங்கும் சிவன், தானாகத் தோன்றியவன், பேருருவமுடைய சிவனாகிய சுயம்பு என் தலைவனாகிய சிவனே! சம்பு! என்று போற்றி உரைத்தவாறு என் வாழ்நாள் கழிவதாக!

## விளக்கம்

அனேகசன்மங்கள் - பல பிறவிகள்
பரிசுத்தராய் - முழுமையான தூயவராக
அனுட்டானம் - கைக்கொள்ள வேண்டிய வழிபாடு
நித்தியம் - நாள்தோறும்
கனா - கனவு
பினாகம் - இறைவனது வில்
எனாதனாம் - என் நாதனாம், என் தலைவனாம்.

216. மனஞ்சிவ பத்தி விழிசிவ பத்தி
வாய்சிவ பத்தியுண் மையவாய்
நினைந்திடக் காண வுரைத்திட வெனக்கு
நிரந்தர நீதரல் வேண்டும்
தனந்தனி யான தேவதே வாமுன்
சகலமுந் தருஞ்செக நாதா
கனந்தரு கருணா கரமகா தேவ
காத்தருள் சங்கர வெனவே.

## தெளிவுரை

மனம், கண்கள், வாய் ஆகியன சிவபக்தி உள்ளனவாக, நினைத்திடவும் காணவும் உரைக்கவும் எனக்கு எப்போதும் நீ அளித்திடல் வேண்டும் மிக்க தனிமையான தேவ தேவா! முன்னவனே! எல்லாவற்றையும் அளிக்கும் உலகநாதா! பெருமை தரும் அருளுள்ள மகாதேவனே! காத்தருள்க சங்கரா!'' என்று,

## விளக்கம்

உண்மையவாய் - உள்ளனவாக
நிரந்தரம் - எப்போதும்

தனந்தனி - தன்னந்தனி, மிக்கதனிமை
தேவதேவா - தேவர்களுக்கெல்லாம் தேவனே
சகலமும் - அனைத்தையும்
கனம் - பெருமை

217. மதியணி சடைவீ ரேசனைக் கும்ப
மாமுனி துதித்தக மகிழ்ந்தான்
விதியுட ணிவற்றை யாவரே யெனினும்
விருப்பொடு சிவனெதிர் நின்று
துதி செயி னேழு செனனமந் தணராய்த்
தோன்றியா கமமெலா முணர்ந்து
கதியினை யடைவர் நாரத முனிவ
காசினி தனிற்பிற வாரே

## தெளிவுரை

நாரத முனியே! நிலவை அணிந்த சடையுடைய வீரேசனை அகத்திய முனிவன் வணங்கி உள்ளம் மகிழ்ந்தான். எவராயினும் விருப்பத்தோடு சிவனுக்கு எதிரில் நின்று விதிப்படி வணங்கினால் ஏழு பிறவிகளில் அந்தணர்களாகப் பிறந்து ஆகமங்கள் எல்லாவற்றையும் அறிந்து வீடு பேறு அடைவர்; உலகில் பிறக்க மாட்டார்கள்.

## விளக்கம்

மதி - பிறைநிலவு
கும்பமாமுனி - அகத்திய முனிவர்
துதிசெயின் - வணங்கினால்
செனனம் - பிறவி
கதி - வீடுபேறு, மோட்சம்
காசினி - உலகம்

# 10. அகத்தியனுக்குச் சிவதன்மோத்தரம் உரைத்த அத்தியாயம்

*(கதைச் சுருக்கம்:-* பிறகு, அகத்திய முனிவர் தணிகை மலையைத் தரிசனம் செய்து, அங்குள்ள மரங்கள், விலங்குகள், பிறகாட்சிகள் ஆகியவற்றைக் கண்டு மகிழ்ந்தார். தணிகை மலையை வலம் வந்தார்; குமாரதீர்த்தத்தில் நீராடினார்; முருகக்கடவுளை நினைந்து தவம் செய்தார். முருகக்கடவுள் அவர் முன் தோன்றினார்; அகத்தியர் பலவாறு தோத்திரம் புரிந்தார்; தணிகைப் பிரானாகிய முருகர் மகிழ்ந்து, அவர் விருப்பப்படி சிவதருமோத்தரத்தை உபதேசம் செய்து மறைந்தார். பிறகு அகத்தியர் தம் ஆசிரமத்தை அடைந்தார்.)

(கலி விருத்தம்)

218. ஆரண முனிவகே ளதன்பின் சீபரி
பூரண நகரியைப் போற்றிக் கும்பசன்
வாரணத் துவசனை மனத்தி ருத்தியே
சீரண வியநதித் தெனாது தீரத்தில்

## தெளிவுரை

வேதமுனிவனே கேட்பாயாக! அதன்பிறகு, திருமகளின் தன்மை முழுமையாக உடைய தணிகை நகரத்தைப் போற்றி அகத்தியன், கோழிக் கொடியுடைய முருகனை மனத்தில் கொண்டு, சிறப்புப் பொருந்திய நந்தியாற்றின் தென் கரையில்,

## விளக்கம்

ஆரணம் - வேதம்

சீ பரிபூரண நகரி - திருமகளின் தன்மை, முழுமையாக உடைய தணிகை நகரம்.

கும்பசன் - அகத்தியன்
வாரணத்துவசன் - கோழிக்கொடியையுடைய முருகன்
சீர் அணவிய நதி - சிறப்புப் பொருந்திய நந்தியாறு
தெனாது தீரம் - தெற்குக் கரை
சீ - அடக்கம், இலக்குமீகரம்.
பரிபூரணம் - முழுமை
நகரி - நகரம்.

219. வந்தன னணிமையில் வாரு ணத்திசை
சந்ததங் காவிமுச் சந்தியுந்தரும்
விந்தையே ருத்தம வெற்ப தாகிய
கந்தமால் வரைவிழி களிப்பக் கண்டனன்.

## தெளிவுரை

மேற்குத்திசை அருகே வந்தான்; எந்நாளும் நீலோற்பல மலர் மூன்று பொழுதும் அளிக்கும் வியப்புடைய உத்தம மலை யாகிய காந்தருடைய உயரிய தணிகைமலையைக் கண்கள்களிப் படையக்கண்டான்.

## விளக்கம்

அணிமையில் - அருகில்
வாருணத்திசை - மேற்குத்திசை
சந்ததம் - எந்நாளும்
காவி - நீலோற்பல மலர், குவளை மலர்
முச்சந்தியும் - மூன்று வேளைகளிலும்
விந்தை - வியப்பு
வெற்பு - மலை
கந்தமால்வரை - கந்தனுடைய உயர்ந்த தணிகைமலை

220. தேவரு முனிவருந் திக்குப் பாலரும்
மேவுகந் தருவரும் விறலி யக்கரும்
தாவிலாச் சித்தசா ரணருந் தாழ்ந்தெழீஇ
மாவரம் வேண்டியே வழுத்துந் தன்மையும்.

## தெளிவுரை

தேவர்களும், முனிவர்களும், திக்குப் பாலகர்களும், பொருந்தும் கந்தர்வர்களும், வலிமையுள்ள இயக்கர்களும், கேடு இல்லாத சித்தர்களும், சாரணர்களும் வணங்கி எழுந்து பெரிய வரங்களை வேண்டித் துதிக்கும் தன்மையும்,

## விளக்கம்

மேவும் - பொருந்தும்
விறல் இயக்கர் - வலிமையுள்ள இயக்கர்கள்
இயக்கர் - யக்ஷர்
தாவு இலா - கேடு இல்லாத
தாழ்ந்து - வணங்கி
எழீஇ - எழுந்து
வழுத்தும் - துதிக்கும்

221. பன்மரங் களுநிழல் பரப்பிப் பூவுதிர்
தன்மையுந் தென்றன்மெய் தடவு நீர்மையும்
கன்மலி பூஞ்சுனை கஞலும் பான்மையும்
வின்மலி பிரமர விளரிக் கானமும்

## தெளிவுரை

பலமரங்களும் நிழலைப் பரப்பி மலர்களை உதிர்க்கும் தன்மையும், தென்றல் காற்று உடல்களைத் தடவும் தன்மையும்,

கற்கள் மிகுந்து மலர்களைக் கொண்ட சுனைகள் நிறைந்திருக்கும் பான்மையும், ஒளி மிகுந்த வண்டுகளின் விளரிப்பண்ணும்,

## விளக்கம்

நீர்மை - தன்மை
பூஞ்சுனை - மலர்களைக் கொண்ட சுனை
கஞலும் - நெருங்கும், நிறையும்
வில்மலி - ஒளிமிகுந்த
பிரமரம் - வண்டு
விளரிக்காளம் - விளரி என்னும் பண்

222. மயிலினஞ் சிறைவிரித்தாடு மாட்சியும்
குயிலின மாவினிற் கூவுஞ் சீர்மையும்
வெயிலின மணிக்கதிர் விரிக்கு மண்டபத்
தயிலின மருள்விழி யரம்பை யாடலும்

## தெளிவுரை

மயிற் கூட்டங்கள் சிறகுகளை விரித்து ஆடுகின்ற மாண்பும், குயிற்கூட்டங்கள் மாமரங்களில் கூவுகின்ற சிறப்பும், வெயிலின் அழகிய கதிர் விரிக்கும் மண்டபத்தில், வேல் போன்ற மயக்கும் விழிகளைக் கொண்ட அரம்பையின் ஆடலும்,

## விளக்கம்

இனம் - கூட்டம்
சிறை - சிறகு, இறக்கை
மாவினில் - மாமரங்களில்
சீர்மை - சிறப்பு
வெயிலின மணிக்கதிர் - வெயிலின் அழகிய கதிர்
அயில் - அழகு, வேல்
மருள் - மயக்கம்.

223. அரசொடு குங்கும மகரு சந்தனம்
குரவுபா டலம்வழை கொன்றை புன்னையா
விரைகடம் பார்மகிழ் வேணு மாதவி
மருதுகிஞ் சுகம்பலா மாவ சோகமே.

## தெளிவுரை

அரசுடன், குங்குமம், அகில், சந்தனம், குரா, பாதிரி, சுரபுன்னை, கொன்றை, புன்னை, ஆவிரை, செங்கடம்பு, ஆத்தி, மகிழும் மூங்கில், மாதவி, முள் முருங்கை, பலா, மா, அசோகம் ஆகிய மரங்கள்.

## விளக்கம்

அரசு - அரசமரம்
அகரு - அகில்
குரவு - குராமரம்
பாடலம் - பாதிரி
வழை - சுரபுன்னை
ஆவிரை - செங்கடம்பு
ஆர் - ஆத்தி
வேணு - மூங்கில்
கிஞ்சுகம் - முள்முருங்கை.

224. சம்புகுந் துருணிநீடமாலங் கூவிளம்
நிம்பமா லத்தியா ணீப மாசினி
விம்பமா லதிகர வீரம் பித்திகை
வம்புறு கோங்குகூ தாள மாழையே.

## தெளிவுரை

நாவல்மரம், குந்துருணி, நீண்ட பச்சிலை மரம், வில்வ மரம், வேப்ப மரம், ஆலமரம், அத்திமரம், ஆண்மரம், வெண் கடம்பு, வேர்ப்பலா, கோவைக்கொடி, மாலதி, அலரி, சிறுச ண்பகம், வாசனையுடைய கோங்கு, கூதாளம், புளிமாமரம்,

## விளக்கம்

சம்பு - நாவல் மரம்
குந்துருணி - ஒருவகை மரம்
தமாலம் - பச்சிலை மரம்
கூவிளம் - வில்வம்
நிம்பம் - வேம்பு
ஆண் - ஆண்மரம்
நீபம் - வெண்கடம்பு
ஆசினி - வேர்ப்பலா
விம்பம் - கோவைக்கொடி
மாலதி - ஒருவகைப் பூங்கொடி
கரவீரம் - அலரி
வம்பு - வாசனை
மாஎழ - புளிமாமரம்

225. சாலமாச் சாமரந் தான்றி சாதிதக்
கோலமா தவிகடு குருந்தம் பூவைகச்
சோலநாரத்தைகச் சூரஞ் சம்பகம்
தாலமே முதலிய தருவின் சோலையும்

## தெளிவுரை

சாலம், ஆச்சாமரம், தான்றி, சாதிதக்கோலம், மாதவி, கடுமரம், குருந்தம், காசாமரம், கச்சோலம், நாரத்தை, கச்சூரம், சம்பகம், பனை முதலிய மரங்களின் சோலையும்,

## விளக்கம்

சாலம் - ஒருவகை மரம்
கடு - கடுமரம்
பூசை - காசாமரம்
கச்சோலம் - வாசனைப்பொருளைத் தரும் ஒருவகை மரம்
கச்சூரம் - பேரீச்சமரம்
தாலம் - பனை.

226. அரிகரி புலிகளா மாவெண் கொட்டகம்
சரபமான் மரைகள்கர்ச் சனையு முச்சியிற்
கருமுகில் சூழ்தரு கவினுங் கண்ணுறீஇ
இருடிய ரொடு மகிழ்ந் தினிது சென்றனன்.

## தெளிவுரை

சிங்கம், யானை, புலிகள், காட்டுப்பசு, கரடி, ஒட்டகம், வரையாடு, பசு, மான்கள் ஆகியவற்றின் முழக்கங்களும் , உச்சியில் கரிய மேகங்கள் சூழ்ந்திருக்கும் அழகையும் கண்டு, முனிவர்களுடன் மகிழ்ந்து இனிமையாகச் சென்றான்.

## விளக்கம்

சரபம் - வரையாடு
ஆன் - பசு
மரைகள் - மான்கள்
கவின் - அழகு
கண்ணுறீஇ - கண்டு
இருடியர் - முனிவர்கள்
கர்ச்சனை - முழக்கம்.

'சரபமான் மரைகள்' என்னும் தொடரை, 'சரபம் ஆன் மரைகள்' என்று பிரித்துப் பொருள்காண வேண்டும். 'சரபம்' என்பது வரையாடு, 'ஆன்' என்பது பசு 'மரைகள்' என்பது 'மான்கள்' எனப் பொருள்படும்.

227. சருவினில் வச்சிரந் தரள முந்தியே
அருவிக ளிழிதரு மழகுங் கந்தரத்
திருடியர் செறிதரு மியல்புங் கண்டகம்
மருவிறும் பூதொடு வலம்வந் தானரோ.

## தெளிவுரை

மலைச்சரிவில் வைரங்கள், முத்துக்கள் ஆகியவற்றைத் தள்ளிக் கொண்டு அருவிகள் வீழும் அழகும் விண்ணில் இருடியர்கள் நெருங்கியுள்ள இயல்பும் கண்டு உள்ளம் பொருந்தும் வியப்புடன் வலம் வந்தனன்.

## விளக்கம்

சருவு - மலைச்சரிவு
வச்சிரம் - வைரம்
தாளம் - முத்து
இழிதரும் - இறங்கும், வீழும்
அந்தரம் - ஆகாயம்
இருடியர் - முனிவர்கள்
இறும்பூது - வியப்பு

228. அக்கிரி சூழ்தரு மாசை நான்கினும்
மிக்கபூந் தடத்தினின் மேவு மோதிமம்
சக்கர வாகநீள் சம்பங் கோழிகள்
கொக்கினங் கரண்டம் வெண் குருகொ லிப்பதும்

## தெளிவுரை

அம்மலையில் சூழ்ந்துள்ள திசைகள் நான்கிலும் மிகுந்த அழகிய நெறியில் பொருந்திய மயில், சக்கரவாகம், நீள் சம்பங்கோழிகள், கொக்கினங்கள், நீர்க்காக்கைகள், வெண்ணிற நாரைகள் ஆகியன ஒலிப்பதும்,

## விளக்கம்

ஆசை - திசை
ஓதிமம் - மயில்
கரண்டம் - நீர்க்காக்கை
குருகு - நாரை வகை

229. மணிதெளித் தாலென வயங்கு நீர்குலாய்க்
கணிதமி னவமணி கஞலித் தாமரை
புணரிதழ்க் குவளைசே தாம்பல் பூத்தளி
அணியலங் காரங்கண் டதிச யித்தெழீஇ

## தெளிவுரை

பளிங்கு தெளித்ததுபோல் ஒளிசெய்யும் நீரில் வளைந்து அழகிய தம்இன நவமணிகள் நிறைந்து, தாமரை மலர்கள் இதழ்கள் சேர்ந்த குவளை மலர்கள், சேதாம்மல் மலர்கள் மலர்ந்து வழங்கும் அழகிய புனைவுகள் கண்டு வியந்து எழுந்து,

## விளக்கம்

வயங்கும் - ஒளிசெய்யும்
குலாய் - வளைந்து
கருவி - நிறைந்து, நெருங்கி
புணர்இதழ் - சேர்ந்த இதழ்கள்

230. குறுமுனி யவ்வரைக் குணக்கி லுற்றனன்
செறிதரு குமாரதீர்த் தத்தைச் சேவியாப்
பிறவிவே ரறுத்துயர் பேரின் பத்தினை
உறுநரர்க் களித்திடு முதனிற் றோய்ந்தனன்.

## தெளிவுரை

குறுமுனியாகிய அகத்தியன் அம்மலையின் கிழக்குத் திசை அடைந்தனன்; செறிந்த குமாரதீர்த்தத்தை வணங்கி, பிறவியை வேரோடு அறுத்து உயர்ந்த பேரின்பத்தை அடைந்த மக்களுக்கு அளிக்கும் அத்தீர்த்தத்தில் நீராடினன்.

## விளக்கம்

குறுமுனி - அகத்தியமுனிவன்
வரை - மலை
குணக்கு - கிழக்கு
சேவியா - சேவித்து, வணங்கி
நரர் - மனிதர்கள்
உதனில் - அத்தீர்த்தத்தில்

231. பூதியு மணிந்துமெய் புனைந்து கண்டிகை
ஓதனுட் டானமு முஞற்றிக் கந்தவேள்
பாதபங் கயமனப் பங்க யத்துள் வைத்
தேதமி லிருந்தவ மியற்றன் மேயினான்.

## தெளிவுரை

உடலில் திருநீறு அணிந்து, உத்திராக்க மாலை அணிந்து, சொல்லப்படுகின்ற அனுட்டானங்களைச் செய்து, முருகப்பெருமானின் திருவடிகளாகிய தாமரை மலர்களைத் தம் மனத்தாமரையுள் வைத்துத் துன்பம் இல்லாத மிக்க தவம் செய்யத் தொடங்கினான்.

### விளக்கம்

பூதி - திருநீறு
கண்டிகை - உத்திராக்கமாலை
ஓது - சொல்லப்படுகின்ற
உஞற்றி - செய்து
பாதபங்கயம் - திருவடித்தாமரை
மனப்பங்கயம் - மனத்தாமரை
ஏதமில் - துன்பம் இல்லாத
இருந்தவம் - மிக்க தவம்

232. நாசியி னுனியிரு நயனம் வைத்துப
வாசனா யருந்தவம் வருட மாற்றலும்
தேசிக னானசெவ் வேண்ம கிழ்ந்தருள்
வீசிட வவனெதிர் விரைந்து தோன்றினான்.

### தெளிவுரை

மூக்கின் நுனியில் இருகண்களைச் செலுத்தி, உண்ணா நோன்புடையவனாக மிக்க தவம் ஓராண்டு புரிந்தும், ஆசானாகிய முருகன் மகிழ்ந்து அருள் வழங்கிட அவன் (அகத்தியன்) எதிரில் விரைந்து தோன்றினான்.

### விளக்கம்

நாசி - மூக்கு
நயனம் - கண்
உபவாசன் - உண்ணாநோன்பு இருப்பவன்
தேசிகன் - ஆசான், குரு
செவ்வேள் - முருகன்
வீசிட - வழங்க

233. வாயுவே கத்தினு மனத்தி னுஞ்செலும்
தூயதா மயூரமேற் றோன்றுங் கீழ்த்திசை
ஞாயிறா மெனவொளி நல்கு மேனிமேற்
றேய்வையாங் குங்குமச் செச்சை பூசியே.

## தெளிவுரை

காற்றின் வேகத்தைவிடவும் மனவேகத்தை விடவும் விரைந்து செல்லும் தூய்மையான மயிலின் மீது, கிழக்குத் திசையில் தோன்றும் சூரியன் என ஒளி அளிக்கும் உடலின்மீது குங்குமக்குழம்பு முதலிய மெய்ப்பூச்சுகளைப் பூசி,

## விளக்கம்

மயூரம் - மயில்
ஞாயிறு - சூரியன்
தேய்வை - அரைக்கப்பட்ட குழம்பு
செச்சை - மெய்ப்பூச்சு

234. முத்தணி தாழ்வட முயங்க மார்பிடைச்
சித்தரு முனிவருந் தேவ ருந்தொழத்
தத்துவங் கடந்தொளிர் சச்சிதானந்த
நித்திய வுருவொடு நிலாவுங் கந்தனை

## தெளிவுரை

மார்பின் இடையில் முத்துமாலை தழுவ, சித்தர்களும் முனிவர்களும் தேவர்களும் வணங்க, தத்துவத்தைக்கடந்து ஒளி வீசும் சிவமாகவும் அறிவாகவும் பேரின்பமாகவும் அமைந்த நிலைத்த உருவத்தோடு நிலவுகின்ற முருகனை,

## விளக்கம்

தாழ்வடம் - மாலை
முயங்க - தழுவ
சத்சித் ஆனந்தம் - சத் - சிவம்; சித் - அறிவு, அருபம்
ஆனந்தம் - பேரின்பம்
நித்திய உரு - அழியாத வடிவம்.

235. கண்டன னக்த்தியன் கதுமென் றேயெழீஇ
மண்டனின் மும்முறை வணங்கிக் கண்கணீர்
கொண்டுமெய்ப் புளகனாய்க் குதுகு துப்பொடு
மிண்டுபே ரானந்த வெள்ள மூழ்கியே.

## தெளிவுரை

அகத்தியன் கண்டான்; திடீரென எழுந்து, மண்ணில்படிந்து மூன்று முறை வணங்கிக் கண்களின் கண்ணீர் கொண்டு மெய் மயிர்கள் சிலிர்த்தவனாகி மிக்க மகிழ்ச்சியோடு, நெருங்கும் பேரானந்தத்தில் மூழ்கி,

## விளக்கம்

கதும் என்று - திடீரென்று, விரைவுக்குறிப்பு
எழீஇ - எழுந்து
மெய்ப் புளகனாய் - மெய்ம்மயிர்சிலிர்த்தவனாய்
குதுகுதுப்பு - மிக்கமகிழ்ச்சி
மிண்டுதல் - நெருங்குதல்

236. தறியெனப் பரவசஞ் சார்ந்து நின்றெதிர்
வெறிமலர்க் கரஞ்சிர மீது கூப்பிநெஞ்
சுறுமன லரக்கென வுருகி யற்புதம்
செறிதரு துதிபல செப்பன் மேயினான்.

## தெளிவுரை

தூண் என்றும்படி, தன்வயமற்று நின்று எதிரே நறுமண மலர்க்கைகளைத் தலையின்மீது கூப்பி நெஞ்சில் அடைந்த அனலில் அரக்கு என உருகி அற்புதங்கள் மலிந்த வணக்கங்கள் பல சொல்லத் தொடங்கினான்.

## விளக்கம்

தறி - தூண்
வெறி - வாசனை, நறுமணம்
கரம் - கை
சிரம் - தலை
துதி - வழிபாடு, வணக்கம்
செப்பல் - சொல்லுதல்
மேயினான் - தொடங்கினான்.

*(எழுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்)*

237. சரணநா னுனக்குச் சுப்பிர மணிய
சடானனன் மூர்த்தியே சரணம்
சரணமா சேனா சரணஞ்சண் முகவ
சரணம்பார்ப் பதியருள் குமரா
சரணங்கார்த் திகையார் தன்னிய பானா
சரணநான் குக்குடத் துவசா
சரணநா னுனக்குக் குங்கும வருணா
சரணநான் சரவணோற் பவனே

## தெளிவுரை

சுப்பிரமணியனே! நான் உனக்கு அடைக்கலம். ஆறுமுக மூர்த்தியே! அடைக்கலம்; மாசேனனே! அடைக்கலம்; சண்முகனே!

அடைக்கலம். உலகநாயகன் அருளிய குமரனே! அடைக்கலம்; கார்த்திகை மாதர்களின் முலைப்பால் உண்டவனே! அடைக் கலம்; கோழிக்கொடி உடையவனே! நான் அடைக்கலம்; குங்கும வண்ணனே! நான் உனக்கு அடைக்கலம்; சரவணப் பொய்கை யில் தோன்றியவனே! நான் அடைக்கலம்.

## விளக்கம்

சரணம் - அடைக்கலம்
சடானனன் - ஆறுமுகன்
மாசேனா - பெரிய சேனையை உடையவனே
பார்ப்பதியருள்குமரா - உலகக்கடவுள் சிவன் அருளிய குமரனே
தன்னியபாலா - முலைப்பாலைக் குடித்தவனே
குக்குடம் - கோழி
உற்பவன் - உண்டானவன்
குங்குமவருணா - குங்கும வண்ணனே

238. வேதமார்க் கத்தா லநேகநாட் டவஞ்செய்
விண்ணவர் மனத்தினுக் கெட்டாச்
சோதியா முனது திருவடி காணத்
தொண்டுநா னெத்தவம் புரிந்தேன்
ஆதிநா யகனாம் பினாகபா ணியனன்
றளித்தவே லங்கையி லேந்திக்
காதுதா னவரைச் செகுத்திடா யெனின்விண்
காக்குமோ புரந்தர னினுமே.

## தெளிவுரை

வேதநெறியினால் பல நாட்கள் தவஞ்செய்யும் தேவர்களின் மனத்துக்கு எட்டாத ஒளியாகிய உனது திருவடிகளைக் காணப் பழமையில் நான் எத்தகைய தவம் புரிந்தேன்! ஆதித்தலைவ

னாகிய சிவபிரான் அன்ற வழங்கிய வேலினை உள்ளங்கையில் ஏந்தி மோதுகின்ற அரக்கர்களை அழிக்கமாட்டாய் எனில், விண்ணுலகை உன்னைவிட இந்திரன் காப்பானோ?

## விளக்கம்

மார்க்கம் - நெறி
சோதி - ஒளி
தொண்டு - தொன்மை, பழமை
ஆதிநாயகன் - பழமைத்தலைவன்
பினாகபாணி - சிவபிரான்
காது - மோதுகின்ற
புரந்தரன் - இந்திரன்

239. அங்கமோ ராறு மாயையோ ராறு
மவிர்தரு குணங்களோ ராறும்
தங்குசத் திகளோ ராறுநல் லிரதஞ்
சார்ந்திடு சுவைகளோ ராறும்
பொங்குமா கமங்க ளாறுமே லாகப்
புகன்றிடு பதார்த்தமோ ராறும்
இங்கணா றாறு விதங்களா மெவையு
மிறைவநின் சடானனத் துதித்த

## தெளிவுரை

அங்கங்கள் ஆறும், மாயைகள் ஆறும், ஒளி செய்யும் குணங்கள் ஓர் ஆறும், தங்குகின்ற சத்திகள் ஓர் ஆறும், நல்ல விரதங்கள் சார்ந்த சுவைகள் ஓர் ஆறும், மிகுந்த ஆகமங்கள் ஆறும் மேன்மையாகக் கூறும் பதார்த்தங்கள் ஓர் ஆறும் என இவ்வாறு ஆறாறு வகைகளாகும் எவையும் இறைவனே! நின் ஆறு முகங்களில் தோன்றியவை.

## விளக்கம்

அவிர்தரும் - ஒளிசெய்யும்

மாயை ஆறு - ஜீவன், ஜீவசுவரபேதம், ஜீவபரஸ்பரபேதம், ஜகஜ்ஜீவபேதம், ஈசுவர ஜகத்பேதம், ஜகத்திற்குள்ள பரஸ்பரபேதம் என்பன.

குணங்கள் ஆறு - சமம், தமம், உபரதி, திதீக்ஷை, சிரத்தை, சமாதானம், தர்மம், ஞானம், வைராக்கியம், ஸ்ரீ, யசஸ், பராக்கிரமமென வேறு ஒரு வகையும் கூறப்படுகின்றது.

சக்திகள் ஆறு - இச்சாசக்தி, கிரியாசக்தி, ஞானசக்தி, மேதாசக்தி, பிரபுசக்தி, ஐசுவரியசக்தி.

பதார்த்தம் ஆறு - திரவியம், குணம், கர்மம், சாமான்யம், விசேஷம், சமவாயம் (நியாய சாஸ்திரப்படி); பிரமம், தர்மம், மாயை, யோகம், சித்தி, புருஷார்த்தம் என்பன.

240. சீரிய புராணங் களுக்குமுன் னிறையோன்
சேயென வுரைப்பர்நின் றனையே
பாரிசா தம்போற் கொடுப்பைநீ யதுதான்
பிஞ்சசா கையினொடு பொருந்தும்
நேரிலா நினக்கங் குலிசெறி கரமா
நீள்பஞ்ச சாகைமே வுதலாற்
கூரிய மதிஞ ரதற்குமே லாகிக்
கூறுவர் விசாகனென் றுனையே.

## தெளிவுரை

சிறந்த புராணங்களுக்கு முன்பு இறைவனானகிய சிவபிரானுக்குக் குழந்தை என்று உன்னைப்பற்றிக் கூறுவார்கள். நீ பாரிசாதம் போல் அளிப்பாய். அதுதான் மரக்கிளைகள் ஐந்துடன் பொருந்தும்; இணையில்லாத உனக்கு விரல்கள் செறிந்த

கைகளாக நீண்ட வேதங்களின் ஐந்து கூறுகளுடன் பொருந்தலால், கூரிய அறிவுடையோர், அதற்கும் மேலாக உன்னை எங்கும் பரவி இருப்பவன் என்று கூறுவர்.

## விளக்கம்

இறையோன் சேய் - கடவுளாகிய சிவபெருமானுக்குக் குழந்தை
பாரிசாதம் - ஒருவகைக் கற்பகம்
பஞ்சசாகை - ஐந்துகிளைகள், வேதம்
பஞ்சகம் - ஐந்தின்கூட்டம்
நேரிலா - நிகரில்லாத, இணையில்லாத
விசாகன் - விசாக நட்சத்திரத்தில் தோன்றியவன்; எங்கும் பரவி யிருப்பவன் என்பதும் ஒரு பொருள்.
மதிஞர் - அறிவுடையோர்.

241. நாரணன் றனக்குப் புயமொரு நான்கே
நவிற்றுமா றிருபுய நினக்குண்
டாரணன் றனக்குச் சென்னிநான் கவனி
னதிகமூ விருசிரம் படைத்தாய்
பூரணன் றனக்கு வதனமோ ரைந்தே
புண்ணிய வதனமன் னாறுளைநீ
காரண மிவற்றைக் கண்டுமங் கவரைக்
கருத்தரென் றுரைப்பதென் னுலகே.

## தெளிவுரை

திருமாலுக்குத் தோள்கள் நான்கே; சொல்லப்பெறும் பன்னிருதோள்கள் உனக்கு உள்ளன; பிரமனுக்குத் தலைகள் நான்கு; அவனைவிட அதிகமாக ஆறுமுகங்கள் கொண்டுள்ளனை. சிவபிரானுக்கு முகங்கள் ஐந்தே; புண்ணிய முகங்கள் ஆறு கொண்டுள்ளனை நீ. காரணமாக இவற்றை அறிந்தும், அங்கு அவரைக் கருத்தர் என்று உலகம் சொல்வது ஏன்?

## விளக்கம்

நாரணன் - திருமால்
புயம் - தோள்
நவிற்றும் - சொல்லப்பெறும்
ஆரணன் - பிரமன்
சென்னி - தலை
அவனின் அதிகம் மூவிருசிரம் படைத்தாய் - அவனைவிட அதிகமாக ஆறுமுகங்கள் கொண்டுள்ளனை.
பூரணன் - சிவபெருமான்
வதனம் - முகம்
கருத்தர் - கருத்தா

242. துவமுறு மசுரர் நாசமாம் பொருட்டுஞ்
சுரரெலாம் விசயமாம் பொருட்டும்
சிவனொடு சிவைக்கும் புத்திர னாகித்
திருவவ தாரநீ செய்தாய்
தவமுறு சகலா தாரனே யசரஞ்
சரமதாய் விளங்கிய வுலகை
நவமுறு வால லீலையாப் படைத்தாய்
நாதகல் யாணகா ரணனே.

## தெளிவுரை

அழிக்கின்ற அரக்கர்கள் அழியும்பொருட்டும், தேவர்கள் அனைவரும் வெற்றியடையும் பொருட்டும், சிவனோடு உமா தேவிக்கும் மகனாகித் தோன்றினாய் நீ! தவமுடைய எல்லாவற்றிற்கும் ஆதாரமாக இருப்பவனே! அசையும் பொருட்களையும் அசையாத பொருட்களையும் கொண்டு விளங்குகின்ற உலகினைப் புதியதாகிய இளமைப் பருவ விளையாட்டாகப் படைத்தனை. தலைவனே! வீடுபேற்றுக்குக் காரணமானவனே!

## விளக்கம்

துவம் - அழித்தல், 'துவம்சம்' என்பதன் சிதைவு.
நாசம் - அழிவு
சுரர் - தேவர்கள்
விசயமாம் பொருட்டு - வெற்றியடையும் பொருட்டு
சிவைக்கும் - பார்வதிக்கும், உமாதேவிக்கும்
சகல ஆதாரன் - எல்லாவற்றிற்கும் ஆதாரமாக இருப்பவன்
அசரம் - அசைவில்லாதது
சரம் - அசைவது
வாலலீலை - இளமைப்பருவ விளையாட்டு
கல்யாணம் - முத்தி, வீடுபேறு.

243. சுவேச்சையா லுலகந் தோன்றிய துன்பாற்
றுகளறு நினதுசன் னிதியிற்
றவாப்புவ னங்க ளனைத்துநின் னருளாற்
றழைத்திடு நினக்கொரு செயலின்
றுவாப்பொலி கடல்போ லகிலலோ கங்க
ளுனையன்றி நிகழ்வுறா வென்றே
அவாப்பொருப் பறுத்த நுண்ணுணர் வுடையோ
ரனைவரு மறைகுவ ரன்றே.

## தெளிவுரை

தன்னிச்சையாக உலகம் தோன்றியது; உன்னிடம், குற்ற மற்ற உன்னுடைய சன்னிதியில், வழுவாத உலக்ஙகள் அனைத்தும், உன்னுடைய அருளினால் தழைக்கின்றன; உனக்கு ஒரு செயல் இல்லை; முழுமதி அழகுடன் விளங்கும் கடல்போல் எண்ணற்ற உலகங்கள் உன்னையல்லால் இயங்கமாட்டா என்றே, ஆசையாகிய மலையை அறுத்த நுண்ணிய அறிவுடைய வர்கள் அனைவரும் சொல்லுவார்கள் அல்லவா?

## விளக்கம்

சுவேச்சையால் - தன்னிச்சையால்
துகள் அறு - குற்றம் நீங்கிய
சன்னிதி - சன்னிதானம், சமூகம், கருவறை
வவாப்புவனங்கள் - வழுவாத உலகங்கள்
உவாப்பொலிகடல் - முழுநிலவு அழகுடன் விளங்கும் கடல்
அலகில் லோகங்கள் - எண்ணற்ற உலகங்கள்
அவாப்பொருப்பு - ஆசையாகிய மலை.

244. புகலரு முனது பொறுமையே யிந்தப்
பூமியென் றுரைத்திடப் படுமால்
உகலரு முனது கருணையே திருமா
லுறங்குறு பாற்கட லாமால்
இகலறு முனது காந்தியே வன்னி
யியங்குநின் சுவாசமே வாயு
நிகரறு நினது சொரூபமே யழியா
நிலைபெறு விசும்பெனப் படுமே.

## தெளிவுரை

சொல்லுதற்கு அரிய உனது பொறுமையே இந்த உலகு என்று கூறப்பெறும்; சொரிதற்கு அரிய உன்னுடைய அருளே திருமால் உறங்குதற்குரிய பாற்கடல் ஆகும்; உன்னுடைய தீயே பகைவர்களை அழிக்கும்; சிறப்பாக இயங்கும் உன்னுடைய மூச்சே காற்று; இணையற்ற உன்னுடைய உருவமே அழியாமல் நிலைபெற்ற ஆகாயம் எனப்படும்.

## விளக்கம்

புகல் அரு - சொல்லுதற்கு அரிய
உகல் அரும் - சொரிதற்கு அரிய, கழலுதற்கு அரிய

இகல் அறு - பகையற்ற
காந்தி - அழகு, ஒளி,
வன்னியியங்கும் நின் சுவாசமே வாயு - சிறப்பாக இயங்கும் உன்னுடைய மூச்சே காற்று
சொரூபம் - வடிவம்
விசும்பு - ஆகாயம், வெளி

245. நிற்குண னானகி நின்றிடு மொருநீ
நிகழ்குணா தாரனு மானாய்
முற்படு சுருதிக் களவிடா தவனீ
மொழிந்திடு சுருதியு மானாய்
சொற்படு முயிருக் குயிரதாய் நிறைந்துந்
துக்கமுஞ் சுகமுநீ மருவாய்
எற்குரு பரநின் னியல்பினை யாவ
ரெடுத்தியம் புறுவலி யினரே.

## தெளிவுரை

குணமில்லாதவனாகி நின்றிடம் ஒப்பற்றநீ, நிகழுகின்ற குணத்திற்கு அடிப்படையானவனும் ஆயினை; முற்பட்ட வேதத்தினாலும் அளவிட்டுக்கூற முடியாதவன் நீ; சொல்லுகின்ற மறை; மொழியாகவும் ஆயினை; சொல்லப்பெறும் உயிருக்கு உயிராய் நிறைந்தும், துன்பத்திலும் இன்பத்திலும் நீ பொருந்தாதவன்; என் குருபரனே! உன்னுடைய தன்மையை எவர் எடுத்துக்கூறும் வலிமையுடையவர்?

## விளக்கம்

நிற்குணன் - குணமில்லாதவன்
ஒருநீ - ஒப்பற்றவன்
ஆதாரனும் ஆனாய் - அடிப்படையானவனும் ஆனாய்

சுருதி - மந்திரம், வேதம்
அவனி - உலகம்
எல்குருபர - ஒளியுடைய ஆசானாகிய கடவுளே
இயம்புறு - சொல்லுதற்குரிய
வலியினர் - வலிமையுடையவர்.

246. இன்னணங் கலச முனிபுகழ்ந் தேத்த
வெம்பிரான் மனமகிழ்ந் துரைப்பான்
நன்னய முணர்ந்த வகத்திய முனிவ
நவிற்றுமித் தோத்திரத் தானும்
பன்னருந் தவஞ்செய் பான்மையி னானும்
பரிந்துள முவந்தன மினிநீ
உன்னிய வரந்தந் தருளுதுங் கேளென்
றுரைத்தலு மகத்திய னுரைப்பான்.

## தெளிவுரை

இவ்வாறு அகத்திய முனிவன் புகழ்ந்து வணங்கவும், எம் கடவுளாகிய முருகன் மனம் மகிழ்ந்து உரைக்கலாயினன்;'' நன்மையை உணர்ந்த அகத்திய முனிவனே! சொல்லிய இந்த வணக்கத்தாலும், சொல்வதற்கு அரிய தவஞ்செய்த தன்மையினாலும், அன்புகொண்டு உள்ளம் மகிழ்ந்தோம்; இனி நீ எண்ணிய வரத்தை அளித்தருள்வேன்; கேட்பாயாக!'' என்று உரைத்ததும், அகத்தியன் சொல்லலானான்.

## விளக்கம்

இன்னனம் - இவ்வாறு
கலசமுனி - அகத்திய முனிவன்
எம்பிரான் - எம்கடவுளாகிய முருகன்
நன்னயம் - நன்மை

தோத்திரம் - துதி
பன்னரும் - சொல்லுதற்கு அரிய
உவந்தனம் - மகிழ்ச்சியடைந்தோம்
உன்னிய - நினைத்த, கருதிய

247. வெகுவித மான தருமங்க ளனைத்தும்
விமலனம் பிகைக்குரைத் திடும்போ
தகமகிழ்ந் தொருங்கே கேட்டறிந் தனைமுன்
னாதலி னெவற்றினு மேலாய்
மிகவருள் விளங்குஞ் சிவதன்மோத் தரத்தை
வினாவுற வார்வமிக் குடையேன்
தகவுற வதனை யுரைத்தியென் றிரப்பச்
சரவணோற் பவனுள மகிழ்ந்து.

## தெளிவுரை

''பல வகையான அறங்கள் அனைத்தும் விமலனாகிய சிவபெருமான் உமாதேவிக்குச் சொல்லும்போது உள்ளம் மகிழ்ந்து முன்பு ஒருங்கே கேட்டறிந்தாய்; ஆதலால், எவற்றையும்விட மேலானவனே! மிகுந்த அருள் விளங்கும் சிவதருமங்களைக் கூறும் நூலைக் கேட்டருள ஆர்வம் மிக உடையவனாக உள்ளேன்; தகுதியுடன் அதனை உரைப்பாயாக!'' என்று இரந்து கேட்க, சரவணப் பொய்கையில் தோன்றிய முருகனும் மகிழ்ந்து,

## விளக்கம்

வெகுவிதமான - பலவிதமான
விமலன் - குற்றமற்றவன்
அம்பிகை - உமாதேவி
வினாவுற - கேட்டருள
சிவதன்மோத்தரத்தை - சிவதருமங்களைக் கூறும் நூலை
தகவு - அறிவு, உரிமை, தகுதி, தெளிவு
சரவணோற்பவன் - சரவணப் பொய்கையில் தோன்றியவன்.

248. பத்தியின் வடிவா மகத்தியன் றனக்குப்
பற்பல தருமத்தின் மேலாய்
முத்தியை யளிக்குஞ் சிவதன்மோத்தரத்தை
மொழிந்துவான் மின்னென மறைந்தான்
உத்தம சிவதன் மோத்தர முழுது
முணர்ந்திடு கும்பமா முனியும்
அத்தகு தணிகை மலையகன் றேதன்
னாச்சிர மந்தனை யடைந்தான்.

## தெளிவுரை

இறையன்பின் வடிவமாகிய அகத்திய முனிவனுக்குப் பற்பல அறங்களுக்கு மேலாகிய வீடு பேற்றினை அளிக்கவல்ல சிவதருமங்ளைக் கூறும் நூலைச் சொல்லியருளி வானில் மின்னல் போல் மறைந்தான். உத்தம 'சிவதன்மோத்தரம்' முழுதும் அறிந்த அகத்திய முனிவனும் அத்தகைய தணிகைமலையினின்றும் நீங்கித் தன்னுடைய ஆச்சிரமத்தினை அடைந்தனன்.

## விளக்கம்

முத்தி - வீடுபேறு
மொழிந்து - சொல்லி
மின்என - மின்னல்போல்
கும்பமாமுனி - அகத்திய முனிவன்.

# 11. தாரகனைக் கொன்ற அத்தியாயம்

(**கதைச்சுருக்கம் :-** அகத்திய முனிவர் தணிகாசலத்தைத் தரிசனம் செய்த வரலாற்றை அறிந்தபிறகு, நாரதர் இந்திரன் பூசித்த வரலாற்றைக் கேட்கவிரும்பவே, பிரமதேவர் கூறலானார்:

காசிபமுனிவருக்கு அதிதி என்னும் மனைவிமூலம் முப்பத்து முக்கோடி தேவர்கள் பிறந்தனர்; திதி என்னும் மற்றொரு மனைவி வாயிலாக அறுபத்தாறு கோடி அசுரர்கள் பிறந்தனர். இருசாராரும் பகைத்துப் போரிட்டனர். காசிபமுனிவர், இந்திர னைத் தேவர்களுக்கு மன்னனாக்கினான்; அவன் விண்ணுலகை ஆண்டான்; இரணியனை அசுரர்களுக்கு மன்னனாகச் சோணித புரியிலிருந்து அரசாளும் படியும் காசிப முனிவர் ஆணையிட்டார்.

தாரகன் என்பவன் அசுரர்களுள் வலியவன்; 'மாயாபுரம்' என்னும் இடத்தில் இருந்தீ 'கிரவுஞ்சம்' என்னும் பெரிய மலை யினை அமைத்தான். அம்மலையின் மாயத்தால் தேவர்கள் துன்புற்றனர்; இந்திரன் தாரகனுடன் போரிட்டுத் தோற்றான்.

இந்திரன் திருமாலிடம் முறையிட்டான்; திருமால் சக்கரப் படையை ஏவினார்; அப்படை தாரகனை ஒன்றும் செய்யாமல் மழுங்கி நின்றது; அச்சக்கரப்படையினைத் தன்மார்பில் பதக்கமாக அணிந்தனன்; திருமால் இயலாமல் தம்மிருப்பிடம் திரும்பினார்.

இந்திரன் இச்செய்திகளை என்னிடம் கூறவே, அவனை யும் தேவர்களையும் அழைத்துக் கொண்டு தணிகாசலத்துக்குச் சென்று முருகக்கடவுளை நினைத்துத் தவம் செய்தேன். முருகக் கடவுள் என் முன் தோன்றிக்குறையறிந்தார்; தேவாசுரர் பற்றிய வரலாற்றைச் சொன்னேன்.

''இரணியன் மகன் நாசன்; அவனுடைய மகன் தாரகன்; அவனுக்குப் புறந்தவன் வித்யுன்மாலி; அவனிடம் அரசாட்சியை ஒப்படைத்த தாரகன் காட்டுக்குச் சென்று என்னை நோக்கித் தவம் செய்தான்; அழிவில்லாத வரம் பெற்றான்; எங்களைத் துன்புறுத்தியதால் திருமால் அவனிடம் போரிட்டுத்தம் சக்கரப் படையை இழந்தார்; தாரகன், வக்கிரன் என்னும் அசுரனிடம் எங்களைச் சிறை வைத்தான். வக்கிரனைப் புகழ்ந்து இரந்து சிறை யினின்றும் விடுதலைபெற்று உன்னை அடைந்தோம்'' என்று கூறினேன்.

முருகக்கடவுள், தேவகணங்களும் பூதகணங்களும் நவ வீரர்களும் தம்மோடுவர மாயாபுரிக்குச் சென்று தாரகனோடு போரிட்டார்; தாரகன் கிரவுஞ்சமலையின் குகைக்குள் சென் றான்; அவனைப்பின் தொடர்ந்து தேவர்களும் வீரவாகுத் தேவர் முதலியவர்கள் சென்றனர்; வெளியே வரமுடியாமல் திகைத்த னர்; முருகக்கடவுள் தம் வேலை ஏவிக் கிரவுஞ்சமலை யைப் பிளந்தார்; தேவர் மற்றோர் வெளியே வந்தனர்; முருகக் கடவுள் தாரகனுடன் போரிட்டு அவனை அழித்தார்.''

*(கொச்சக்கலிப்பா)*

249. கந்தமல ரயனிந்தக் கதையுரைப்ப நாரதனும்
சிந்தனமகிழ் கூர்ந்திறைஞ்சிச் செப்புவனான் முகமுடைய
எந்தையகத் தியன்பூசித் திடுசரித மினிதுணர்ந்தேன்
இந்திரன்பூ சித்தகதை யெனக்கறிய வியம்பென்றான்.

## தெளிவுரை

நறுமணமலரில் தோன்றிய பிரமன் இந்தக் கதையைச் சொல்ல நாரதனும் மனம் மகிழ்ச்சிமிகுந்து வணங்கிச் சொல்ல லாயினன். ''நான்கு முகங்கள் உடைய என் தந்தையே! அகத்தியன் முருகனைப் பூசனை புரிந்த வரலாற்றை இனிது அறிந்தேன்;

இந்திரன் முருகனைப் பூசித்த கதையை எனக்கு அறிதற்குக் கூறுக! என்றான்.

## விளக்கம்

கந்தமலர் - நறுமணமலர்
அயன் - பிரமன்
இறைஞ்சி - வணங்கி
எந்தை - என்தந்தை

250. நாரதமா முனியுரையை நான்முகன்கேட் டகமகிழ்ந்து
சீரியமா னதபுதல்வா செப்புதுங்கேள் காசிபற்குப்
பாரியரா வாரிருவர் பகரதிதி திதியென்பார்
காரிகையா ரிவர்கள்பல காதலரை முனம்பயந்தார்.

## தெளிவுரை

நாரதராகிய மகா முனியின் சொல்லைப் பிரமன் கேட்டு உள்ளம் மகிழ்ந்து என்மனத்திலிருந்து தோன்றிய சிறந்த மகனே! சொல்வேன்; கேட்பாயாக! காசிபனுக்கு இருமனைவியர்; சொல்லப் பெறும் அதிதி என்பவரும் திதி என்பவரும் ஆகிய மகளிர் இருவர் பலபிள்ளைகளை முன்னர் பெற்றனர்.

## விளக்கம்

மானதபுதல்வா - என் மனத்திலிருந்து உண்டான மகனே
பாரியர் - மனைவியர்
பகர் - சொல்லப்பெற்ற
காரிகையார் - மகளிர்
காதலரை - பிள்ளைகளை

251. அங்கவரி லதிதியெனு மரிவைமுப்பான் முக்கோடி
புங்கவரை யுயிர்த்திட்டாள் புனையுமெழிற் றிதியென்பாள்
தங்கறுபத் தறுகோடி தானவரை யுவந்தளித்தாள்
பொங்கியதா னவர்களொடு புங்கவடு மமர்புரிந்தார்.

## தெளிவுரை

அங்கு அவர்களுள் அதிதி என்றும் பெண் முப்பத்து மூன்றுகோடி தேவர்களைப் பெற்றாள்; புனைந்துகொள்ளும் அழகுடைய திதி என்பவள் அறுபத்தாறு கோடி அசுரர்களை மகிழ்ச்சியுடன் பெற்றாள்.

## விளக்கம்

அரிவை - இருபத்து வயதுடைய பெண்; பெண்பொது
புங்கவர் - தேவர்கள்
உயிர்த்திட்டாள் - பெற்றாள்
தானவர் - அசுரர்கள்

252. காசிபனங்கதுகண்டு கடவுளருக் கிறையாக்கி
வாசவனை விண்ணுலகில் வைத்தரசு புரிகென்றான்
ஆசையுறு மிரணியனை யவுணர்களுக் கிறையாக்கி
ஏசலிலாச் சோணிதாக் கியநகரி லிருத்தினான்.

## தெளிவுரை

அதுகண்ட காசிபன் தேவர்களுக்கு இந்திரனை அரசனாக்கி விண்ணுலகில் இருந்து ஆட்சிபுரிக என்றனன்; ஆசைமிக்க இரணியனை அசுரர்களுக்கு மன்னனாக்கிப் பழியில்லாச் சோணிதம் என்னும் நகரில் இருக்கச் செய்தான்.

## விளக்கம்

வாசவன் - இந்திரன்
அவுணர்கள் - அசுரர்கள்
இறை - அரசன்
ஏசல் - பழி

'சோணிதாக்கியம்' என்பது 'சோணிதம்' என்னும் பெயரைக் கொண்ட நகரைக்குறிக்கிறது.
ஆக்கியம் - பெயர்

253. தானவரில் வலிபடைத்த தாரகனா முயர்வீரன்
ஈனமின்மா யாபுரமா மிராசதா னியிலிருந்தே
ஊனமுறு வஞ்சனையே யுருக்கொள்குகை பற்பலசேர்
வானமுறு கிரவுஞ்ச மாமாயப் பொருப்பமைத்தான்.

## தெளிவுரை

அசுரர்களுள் வலிமைகொண்ட தாரகன் என்னும் உயர்ந்த வீரன் இழிவு இல்லாத மாயாபுரம் என்னும் தலைநகரில் இருந்து தீமையுடைய வஞ்சகங்கள் வடிவாகக் கொண்ட குகைகள் பல பொருந்திய வானளாவிய 'கிரவுஞ்சம்' என்னும் மாயத்தைச் செய்யும் மலையை அமைத்தான்.

## விளக்கம்

ஈனமில் - இழிவில்லாத
மாயாபுரம் - தாரகனுடைய தலைநகரம்
இராசதானி - தலைநகரம்
ஊனம் - ஈனம், குறைபாடு, தீமை
வஞ்சனை - பொய், மாயம், வஞ்சகம்
மாயப்பொருப்பு - மாயத்தைச் செய்யும் மலை.

254. அக்கிர வுஞ்ச மாயையிற் சிக்கி
யமரர்க ளருந்துய ருழந்தார்
உக்கிர மிகுவச் சிரப்படை யேந்தி
யுறுபடை நான்குந்தற் சூழப்
புக்குவிண் ணவர்கோன் றாரக னொடுபோர்
பொருதுடைந் தோடினன் றனதூர்
'துக்கமுற் றவன்பின் பாற்கட லடைந்து
துயில்புரி மாயனை யடுத்தான்.

## தெளிவுரை

அக்கிரவுஞ்சமலையின் மாயத்தில் சிக்கித் தேவர்கள் அரியதுன்பம் அடைந்தனர்; சினம் மிகுந்த வச்சிரப்படையை ஏந்தி மிகுந்த படைகள் நான்கும் சூழப் புகுந்து தேவர்களின் அரசன் தாரனோடும் போரிட்டுத் தோற்றுத்தன் ஊருக்கு ஓடினன்; துயரம் அடைந்த அவன் பிறகு பால்கடலை அடைந்து உறங்கிக் கொண் டிருந்த திருமாலை அடைந்தான்.

## விளக்கம்

அமரர்கள் - தேவர்கள்

தற்சூழ - தன்னைச்சூழ

புக்கு - புகுந்து

விண்ணவர்கோன் - தேவர்களின் அரசன் இந்திரன்

பொருது உடைந்து - போரிட்டுத் தோல்வியடைந்து

துயில் - உறக்கம்

மாயன் - திருமால்

255. அனந்தன்மேற் றுயிலு மரிதனைக் கண்ணுற்
றமரர்கோன் சிரமுற வணங்கி
இனந்தரு மிருகை சென்னிமேற் கூப்பி
யெழுந்துதோத் திரம்பல வியம்பக்
கனந்தரு மேனி மாயவ னெழுந்து
கணாயிரன் றன்முக நோக்கி
முனம்படு குசலம் வினவியே யிவணீ
முடுகுகா ரணமுரை யென்றான்

## தெளிவுரை

ஆதிசேடனாகிய பாயின்மீது உறங்கும் திருமாலைக் கண்ட தேவர்க்கரசன் இந்திரனும் தலையால் தரையில் வணங்கித் தன் இருகைகளையும் தலைமேல் வைத்துக் கூப்பி எழுந்து தோத்திரங்கள் பல சொல்லிடவும், பெருமை மிக்க உடலினைக் கொண்ட திருமால் எழுந்து ஆயிரங்கண்கள் கொண்ட இந்திர னுடைய முகத்தைப் பார்த்து, முற்பட்ட நலனைக் கேட்டு ''இங்கு வந்த காரணத்தைக் கூறுக!'' என்றான்.

## விளக்கம்

அனந்தன் - ஆதிசேடன்
அரி - திருமால்
அமரர்கோன் - தேவர்க்கரசன்
சிரம் - தலை
சென்னி - தலை
தோத்திரம் - வணக்கம்
இயம்ப - சொல்ல
கணாயிரவன் - கண்கள் ஆயிரம் கொண்ட இந்திரன்
முனம்படு - முற்பட்ட
குசலம் - நலம்
இவண் - இங்கு
முடுகுகாரணம் - வந்தகாரணம்.

256. வினவிய முகுந்தன் மலர்முக நோக்கி
விண்ணவர்க் கரசனு முரைப்பான்
உனதரு ளுடைய நானிது வரையு
மொருகுறை யின்றியே வாழ்ந்தேன்
வனமணி மார்ப வின்றுதா ரகனால்
வலியிழந் துனைச்சர ணடைந்தேன்
பினையொரு துணையுங் கண்டிலேன் பகையைப்
பெயர்த்தெனைப் புரந்தரு ளென்றான்.

## தெளிவுரை

கேட்டருளிய திருமாலின் மலர்ந்த முகத்தைப் பார்த்து, தேவர்களுக்கரசன் இந்திரன் சொல்லலாயினன். உன்னுடைய அருள் கொண்ட நான், இதுவரையிலும் ஒரு குறையும் இல்லாமல் வாழ்ந்தேன்; துளசிமாலை அணிந்த மார்பனே! இன்று தாரகனால் வலிமை இழந்து (தோற்று) உன்னை அடைக்கலமாக அடைந்தேன்; பின்பு ஒரு துணையும் காணவில்லை; பகைவனை அழித்து எனைக் காத்தருள்க!'' என்றான்.

## விளக்கம்

முகுந்தன் - திருமால்
வனம் - துளசி
சரண் - அடைக்கலம்
பினை - பின்னை, பின்பு
பெயர்த்து - அழித்து
புரந்தருள் - பாதுகாத்தருள்க

257. வாசவன் புகன்ற மொழிதனைக் கேளா
வளர்கடைக் கண்சிவந் தெழுந்து
கேசவன் வீமன் முதுகிடை யிவர்ந்து
கிளர்வன மாலைமார் பசைய

ஆசுகஞ் செறிவிற் சங்குசக் கரம்வா
ளவிர்கதை யைந்தையு மேந்தி
யீசுர கணங்கள் புடைவர வெழுந்து
விரைவின்மா யாபுரி யடுத்தான்.

## தெளிவுரை

இந்திரன் சொன்ன சொல்லைக் கேட்டு, வளரும் கடைக் கண்கள் சிவந்து எழுந்து, திருமால் கருடனுடைய முதுகில் ஏறி ஒளிரும் துளசியிலை மார்பில் அசைய, பாணம் (அம்பு) செறிந்த வில், சங்கு, சக்கரம், வாள், ஒளிரும் தண்டாயுதம் ஆகிய ஐந்தினையும் ஏந்திச் சிவ கணங்கள் பக்கத்தில் வர எழுந்து, விரைவில் மாயாபுரியை நெருங்கினான்.

## விளக்கம்

வாசவன் - இந்திரன்
கேளா - கேட்டு, 'செய்யா' என்னும் வாய்பாட்டு வினையெச்சம் 'செய்து' என்னும் பொருளில் வந்தது.
கேசவன் - திருமால்
வீமன் - பரவைகளுக்கு அரசனாகிய கருடன்
இவர்ந்து - ஏறி
வனமாலை- துளசிமாலை
மிடைந்த - நெருங்கிய
ஆசுகம் - பாணம்
திகிரி - சக்கரம்
அவிர் - ஒளிரும்
ஈசுர கணங்கள் - சிவகணங்கள்
கணம் - கூட்டம்
புடை - பக்கம்
அடுத்தான் - நெருங்கினான்

(கலிநிலைத்துறை)

258. அடைந்த மாயவன் றாரக னோடருஞ் சமர்செய்
திடைந்த வத்திர சத்திர மெலாமிழந்திடலும்
உடைந்தி டாவலி படைத்திடுந் திகிரியை யுருத்து
மிடைந்த வஞ்சகன் றலையரிந் திடுகென விடுத்தான்.

## தெளிவுரை

அடைந்த திருமால், தாரகனுடன் போரிட்டுப் பகைவர்கள் முன்பே தோல்வியடைவதற்குக் காரணமாக இருந்த, கையை விட்டுச் செல்லும் படைக்கருவியாகிய அத்திரமும், கையில் இருக்கும் படைக்கருவியாகிய சத்திரமும் ஆகிய எல்லாவற்றையும் இழந்து, அழியாத வலிமைபடைத்த சக்கராயுதத்தைச் சினந்து நெருங்கிய வஞ்சகன் தலையை அரிந்திடுக என்று கூறிச் செலுத்தினான்.

## விளக்கம்

சமர் - போர்
இடைந்த - பகைவர் மன்னமே தோல்வியடைவதற்குக் காரணமாக இருந்த
அத்திரம் - கையைவிட்டுச் செல்லும் படைக்கருவி
சத்திரம் - கையில் இருக்கும் படைக்கருவி
திகிரி - சக்கர ஆயுதம்
உருத்து - சினந்து
மிடைந்த - நெருங்கிய

259. விட்ட சக்கரம் வெஞ்சுடர்ச் சுவாலைகள் பரப்பி
அட்ட திக்கிலும் வெம்பொறி பரந்துகாந் தத்திற்
சுட்டெ வற்றையு முருக்கிடும் வடவைபோற் றுனைவிற்
கிட்ட வந்துதாக் கியதுதா ரகன்மணிக் கிரீவம்

## தெளிவுரை

திருமால் செலுத்திய சக்கராயுதம் வெப்பமான ஒளி பொருந்திய தீச்சுவாலைகளைப் பரப்பி எட்டுத் திசைகளிலும் வெப்பமான தீப்பொறி பர்வி ஒளியினால் சுட்டு எல்லாவற்றை யும் உருக்கும் ஊழிக்காலத்தீயைப் போல் (படபாமுகாக் கினி) விரைவில் அருகில் வந்து தாரகனுடைய மணிபொருந் திய கழுத்தைத் தாக்கியது.

## விளக்கம்

வெம் - வெப்பமான, கொடிய
அட்டதிக்கு - எட்டுத் திசைகள்
காந்தம் - ஒளி
உகாந்தத்தில் - ஊழியின் இறுதியில், யுகமுடிவில்
வடவை - வடவாமுககாக்கினி
துனைவில் - விரைவில்
மணி - அழகு, மணி.

260. தார கன்களந் தாக்கிய சக்கரந் தகர்ந்து
கூரி ழந்துயர் வலியொழிந் தாற்றலுங் குன்றிச்
சேர லன்றிரு மார்பினிற் பதக்கமாய்ச் செறிய
நாரணன்படை மீள்கிலா மையிலுள நலிந்தான்.

## தெளிவுரை

தாரகனுடைய கழுத்தைத் தாக்கிய சக்கராயுதம் உடைந்து கூர்மை இழந்து, உயரிய வலிமையும் ஒழிந்து, ஆற்றலும் குறைந்து, பகைவனுடைய அழகிய மார்பில் பதக்கமாகச் செறியவும், திருமால் சக்கராயுதப் படை மீண்டுவராமையினால் உள்ளம் சோர்வடைந்தான்.

## விளக்கம்

களம் - கழுத்து

குன்றி - குறைந்து

சேரலன் - பகைவன்

திரு - அழகிய

நாரணன் - திருமால்

261. வென்று வாகைகொ டாரகன் மேவினன் றனதூர்
கன்று நெஞ்சுடை மாயவன் வலாரிமுன் ககனத்
தொன்று தேவரோ டொழிவறு நிராசைய னாகிச்
சென்று சேர்ந்தனன் பாற்கடற் றிகிரியு மிழந்தே.

## தெளிவுரை

வெற்றிவாகையைக் கொண்ட தாரகன் தன்னுடைய ஊரை அடைந்தான்; சினந்த மனமுடைய திருமால், இந்திரனுக்கு முன்னால் ஆகாயத்தில் ஒன்றும் தேவர்களுடன் நீங்காத அழிந்த ஆசையுடையவனாகிச் சக்கராயுதத்தையும் இழந்து, சென்று பாற்கடலை அடைந்தனன்.

## விளக்கம்

மேவினன் - பொருந்தினான்

கன்று - சினக்கும், கோபிக்கும்

வலாரி - இந்திரன்

ககனத்து ஒன்று - ஆகாயத்தில் ஒன்றுகிற

நிராசையன் - ஆசை அழிந்தவன்.

262. அந்த வேலையி லிந்திர னமரரோ டுசாவி
இந்த லோகமுற் றெனைச்சர ணாகதி யடைந்திட்
டெந்தை நீயெமைப் புரந்தரு ளெனத்தொழு திசைத்தான்
வந்த காரிய மென்னென யானவன் வழங்கும்.

## தெளிவுரை

அந்த நேரத்தில் இந்திரன் தேவர்களுடன் வினாவி, சத்தியலோகம் அடைந்து என்னை அடைக்கலம் அடைந்து, ''என் தந்தையே! நீங்கள் எங்களைக் காத்தருள்க'' என்று தொழுது வேண்டினான்; ''வந்தகாரியம் என்ன?'' என்று யான் கேட்க, அவன் சொல்லலானான்.

## விளக்கம்

வேலை - நேரம், வேளை
அமரர் - தேவர்கள்
உசாவி - வினாவி
இந்தலோகம் - சத்தியலோகம்
எனை - என்னை
எந்தை - என்தந்தையே
புரந்தருள் - காத்தருள்க
என் - என்ன
வழங்கும் - சொல்லலானான்

263. பிரம னாமிறை கேண்மதி தாரகப் பெயர்கொள்
நிருத னான்மிக வருந்தினே மெமதிடர் நீக்கி
அருள்செய் வாருனை யன்றிவே றொருவரை யறியேம்
மருவு தீயவன் றனைக்கொலு முபாயநீ வகுப்பாய்

## தெளிவுரை

பிரமனாகிய கடவுளே! கேட்பாயாக! தாரகன் என்னுனம் பெயர் கொண்ட அரக்கனால் மிகவும் வருந்தினேன்; எம்முடைய துன்பம் நீக்கி அருள் செய்பவர் உன்னையல்லாமல் வேறொருவரை அறியோம்; பொருந்துகின்ற தீயவனைக் கொல்லும் தந்திரத்தை வகுப்பாயாக!

## விளக்கம்

இறை - கடவுள்
கேண்மதி - கேட்பாயாக
மதி - முன்னிலை அசைச்சொல்
நிருதனால் - அரக்கனால்
இடர் - துன்பம்
மருவு - பொருந்தும்
கொலும் உபாயம் - கொல்லும் உத்தி

264. எனவு ரைத்திடு மிந்திரன் மொழிதனை யானும்
வினவி யங்கவன் றனக்கிது மொழிந்தனன் விண்ணோர்
அனைவ ருக்குமென் றனக்குமா யனுக்குமே லான
அனைநி கர்த்திடு மிறைவனாற் பெருவிற லமைந்தோன்.

## தெளிவுரை

என்று சொன்ன இந்திரன் சொல்லை யானும் கேட்டு அங்கு அவனுக்கு இதனைச் சொன்னேன்: ''தேவர்கள் அனைவருக்கும் எனக்கும் திருமாலுக்கும் மேலான அன்னைக்கு ஒப்பான இறைவனாகிய சிவ பெருமானால் பெரிய வலிமை படைத்தவன்,

## விளக்கம்

அனை நிகர்த்திடும் இறைவனால் - தாய்க்கு இணையான கடவுளால்
பெருவிரல் - பெரிய வலிமை.

265. அன்ன தாரகன் வரத்தினா லொருவரா லழியான்
பன்னு சுப்பிர மணியனா லழிதரப் படுவான்
பின்னை யாருள ரவனொடும் பெருஞ்சமர் புரிவோர்
இன்ன பான்மையா லிளையவன் றனைச்சர ணடைவேம்.

## தெளிவுரை

அத்தகைய தாரகன் வரத்தின் காரணமாக, ஒருவராலும் அழியமாட்டான்; சொல்லப்பெறும் சுப்பிரமணியனால் அழிக்கப் படுவான்; பிறகு, அவனோடு பெரிய போரிடக் கூடியவர்கள் யாருள்ளனர்? இத்தகைய தன்மையால், குமரப்பெருமானை அடைக் கலம் அடைவோம்.

## விளக்கம்

அன்ன - அத்தகைய
பன்னு - சொல்லப்பெறும்
அழிதரப்படுவான் - அழிக்கப்படுவான்
பின்னை - பிறகு
சமர் - போர்
பான்மை - தன்மை
இளையவன் - முருகன்

இப்பாடல் வாயிலாகத் தாரகன் சிவபெருமான் வாயி லாகவும் அழியா வரம் பெற்றான் என அறியலாம்.

266. எழுந்து வம்மினென் றிந்திரன் முதலிமை யவரோ
டழுந்து துன்பொரீஇ யானுஞ்சென் றறுமுக னமரும்
செழுந்தண் கந்தவெற் படைந்திளை யவன்றிரு வடியை
விழைந்து ளத்திடை யிருத்தியே யருந்தவம் விளைத்தேம்

## தெளிவுரை

''எழுந்து வாருங்கள்!'' என்று இந்திரன் முதலிய தேவர்களுடன் அழுத்தும் துன்பம் நீங்கி யானும் சென்று ஆறுமுகன் வீற்றுள்ள வளமான குளிர்ந்த தணிகைமலையை அடைந்து, குமரனின் திருவடிகளை விரும்பி மனத்தில் இருத்தி, அரிய தவம் செய்தேன்.

## விளக்கம்

வம்மின் - வாருங்கள்
இமையவர் - தேவர்கள்
துன்பு ஒரீஇ - துன்பம் நீங்கி
செழும் - வளமான
தண்கந்தவெற்பு - குளிர்ந்த தணிகைமலை
விழைந்து - விரும்பி வேண்டி
விளைத்தேம் - செய்தேன், புரிந்தேன்.

267. கணிக வெற்பினில் யாம்புரி கடுந்தவ நோக்கிப்
பிணிமு கத்தின்மே லிவர்ந்துசண் முகமுடைப் பெருமான்
மணிகு யிற்றிய பொன்னரி மாலை மார் பசையத்
துணிக திர்ப்ரபை சூரிய கோடியிற் றோன்ற

## தெளிவுரை

தணிகை மலையில் யான் செய்த கடுமையான தவத்தைக் கண்டு, யானையின் மீது ஏறி ஆறுமுகங்களைக் கொண்ட

பெருமான், நவமணிகள் பதிக்கப்பெற்ற பொன்னால் அரிந்து செய்யப்பட்ட மாலை மார்பில் அசைய, ஒளிக்கதிர்கள் கோடி சூரியர்களின் ஒளியைப் போல் தோன்றவும்,

## விளக்கம்

கணிகவெற்பு - தணிகைமலைக்கு ஒரு பெயர்
பிணிமுகம் - முருகப் பெருமானுடைய வாகனமாகிய யானை
இவர்ந்து - ஏறி
பொன்னரி மாலை - பொன்னை அரிந்து செய்யப்பட்ட மாலை.
ப்ரபை - ஒளி

268. சத்தி யத்தராய்ச் சந்தன குங்கும பளிதம்
மெத்து மார்பராய் விசித்திர மாமுரு வினராய்
வைத்த பேரருள் விழியரா யெமக்கெதிர் மருவப்
பத்தி யிற்சிறந் திமையவ ரொடுமெதிர் பணிந்தேம்.

## தெளிவுரை

ஞானவேல் உடைய கடவுளாகவும், சந்தனம், குங்குமம், பச்சைக்கருப்பூரம் ஆகியவற்றை மிகுதியாக உடைய மார்பினராகவும், பேரழகுடைய வடிவினராகவும், வைத்த பேர் அருள்கண்கள் உடையராகவும் எமக்கு எதிரே தோன்ற பக்தியில் சிறந்து, தேவர்களுடன் எதிரே வணங்கினேன்.

## விளக்கம்

சத்தி - வேலாயுதம்
அத்தர் - சிவன், முனிவர், தேவர், வனவாசர், வாசனைப் பண்டம்
பளிதம் - பச்சைக்கருப்பூரம்
மெத்துதல் - மிகுதல்
விசித்திரம் - அதிசயம், பேரழகு

269. சாமி நின்னிரு சரணமே சரணெனச் சார்ந்தேம்
யாமெ மைப்புரந் தருளென விரத்தலு மபயம்
நாம ளித்தனம் வெருவலீ ரமரர்கா ணம்பால்
ஏம மிக்குறும் பத்தியா லினிதுள மகிழ்ந்தேம்

## தெளிவுரை

''சாமி! உன்னுடைய இருதிருவடிகளே அடைக்கலம் என்ற யாம் அடைந்தோம், எங்களைக் காத்தருள்க!'' என்று இரந்து கேட்டதும் , ''யாம் அடைக்கலம் அளித்தோம்; அஞ்சாதீர் தேவர்களே! நம்மிடம் இன்பம் மிகுதியாக அடையும் பத்தியால் உள்ளம் இனிது மகிழ்ந்தோம்''.

## விளக்கம்

நின்இரு சரணம் - உன்னுடைய இருதாள்கள் புகலிடம்
சரண் - புகலிடம்
அபயமளித்தல் - அஞ்சவேண்டாமென்று அருளிச் செய்தல்
அபயம் - பயமில்லாமை
ஏமம் - இன்பம்
வெருவலீர் - அஞ்சாதீர்
நம்பால் - நம்மிடம்

270. நுங்க ருத்துறு விழைவெது நுவலுதிர் நொடியில்
அங்க தைத்தரு வோமென வருளலு மமலன்
வெங்க தக்கடுந் தாரக னான்மிக மெலிந்தேம்
இங்க வற்றடிந் தெமைப்புரந் தருளென விரந்தேம்

## தெளிவுரை

''உங்கள் மனவிருப்பம் எது? நொடியில் கூறுங்கள்! அங்கு அதனைத்தருவோம்'' எனக் கடவுள் அருள் செய்யவும், ''கொடிய

வலிமையுடைய கடுமையான தாரகனால், மிகவும் சோர்வடைந்தோம்; இங்கு அவனை அழித்து எங்களைக்காத்தருள்க!'' என இரந்து கேட்டோம்.

## விளக்கம்

விழைவு - விருப்பம்
நுவலுதிர் - சொல்லுங்கள்
அமலன் - குற்றமற்றவன்
வெங்கத - கொடியவலிமை, கொடியகோபம்
இங்கு அவன் தடிந்து - இங்கு அவனைக் கொன்று

(கலி விருத்தம்)

271. நநாரத வெமதுரை நயந்து கேட்டலும்
சீரிய குகனெமைத் திருந்த நோக்கியே
தாரகன் வலியெது தந்தை யாரவன்
ஊரெதங் கவனுமை யொறுப்ப தேதென்றான்.

## தெளிவுரை

''நாரதனே! எமது உரைகளை விரும்பிக்கேட்டு, சிறந்த குகன் எங்களை ஆறுதலளிக்க நோக்கி, ''தாரகன் வலிமை எது? தந்தை யார்? அவனுடைய ஊர் எது? அங்கு அவன் உங்களைத் துன்புறுத்துவது எதனால்?'' என்று கேட்டான்.

## விளக்கம்

நயந்து - விரும்பி
திருந்த - தேறுதலளிக்க
ஒறுப்பது - தண்டித்தல், துன்புறுத்துதல்.

272. அருண்மொழி கேட்டக மகிழ்ந்த யாமெலாம்
முருகதா ரகன் பெயர் மொழியுங் காலெம
துருவுட னடுக்குறு முனது சன்னிதி
மருவிய வலியினால் வகுப்பன் கேட்டியால்

## தெளிவுரை

முருகனுடைய அருள் மொழிகளைக்கேட்டு மகிழ்ந்த நாங்கள் அனைவரும், ''முருகனே! தாரகன் பெயரைச் சொல் லும்போது எங்களுடைய தூல உடல்கள் நடுக்கமடைகின் றன; உன்னுடைய சன்னிதியை அடைந்த வலிமையினால் வகுத்துச் சொல்வேன்; கேட்பாயாக!''

## விளக்கம்

அகம் - உள்ளம்
கால் - போது
உருவுடல் - தூல சரீரம்
நடுக்குறும் - நடுக்கம் அடைகின்றன
சன்னிதி - கருவறை
மருவிய - அடைந்த, பொருந்திய

273. அதிதியுந் திதியுமென் றறையும் பேரினோர்
மதிபெறுங் காசிபன் மனைக்கி ழத்தியர்
திதியறு பத்தறு கோடி தீயராம்
விதியறு மசுரரை விழைந்த ளித்தனள்.

## தெளிவுரை

அறிவுடைய காசிபனுடைய மனைவியர், அதிதியும் திதி யும் என்று சொல்லப்பெறும் பெயரினர். திதி அறுபத்தாறு கோடி

தீயராகிய செய்தற்குரிய நல்ல செயல்கள் இல்லாத அசுரர்களை விரும்பிப்பெற்றனள்.

## விளக்கம்

மனைக்கிழத்தியர் - மனைவியர்
அறையும் - சொல்லும்
மதி - அறிவு
கிழமை - உரிமை
விதி அறும் - செய்யவேண்டிய நல்ல செயல்கள் இல்லாத

274. முப்பதிற் புணருமுக் கோடி தேவரைச்
செப்புறு மதிதியாந் தெரிவை யீன்றனள்
தப்பில்சக் களத்தியர் தருத லாற்றினம்
கைப்புறு சுராசுரர் கலாமுற் றாரரோ

## தெளிவுரை

முப்பத்து மூன்று கோடி தேவர்களைச் சொல்லப் பெறும் அதிதி என்னும் பெண் பெற்றனள். தவறு இல்லாத சக்களத்தியர்கள் பெற்றதனால், நாள்தோறும் வெறுப்புற்றுத் தேவர்களும் அரக்கர்களும் போரிட்டனர்.

## விளக்கம்

சக்களத்தியர் - மாற்றாராகிய மனைவியர்
கைப்பு - வெறுப்பு
தப்புஇல் - தவறு இல்லாத
சுரஅசுரர் - தேவர்களும் அரக்கர்களும்

275. காசிப னவர்பொரல் கண்டு விண்ணிடை
வாசவன் றனைச்சுரர் மன்ன னாக்கினன்
ஏசறு மரக்கருக் கிரணி யன்றனை
ஈசனாச் சோணிதாக் கியத்தி ருத்தினான்.

## தெளிவுரை

காசிபன், அவர்கள் போரிடுவதனைக்கண்டு விண்ணுல கிற்கு இந்திரனை அரசனாக்கினான்; குற்றமற்ற அரக்கர்களுக்கு இரணியனைச் சோணித நகரில் இருக்கச் செய்து அரசனாக்கினான்.

## விளக்கம்

பொரல் - போரிடல்
விண் - விண்ணுலகம், தேவருலகம்
வாசவன் - இந்திரன்
சுரர் - தேவர்
ஏசறு - குற்றமற்ற
ஈசன் - இறைவன், அரசன்
சோணிதாக்கியத்து - சோணித நகரில்
ஆக்கியம் - பெயர்.

276. தத்தம திருக்கையிற் றகுவர் வானவர்
மத்தவெஞ் சமரொரீஇ வாழ்ந்தி ருந்தனர்
அத்தகு தானவர்க் கரச னாகமுன்
வைத்திடு மிரணியன் மைந்த னாசனே

## தெளிவுரை

அவரவர் இருக்கைகளில் அரக்கர்கள், தேவர்கள் வெறி யுடைய கொடிய போர் நீங்கி வாழ்ந்து வந்தனர்; அத்தகைய

அரக்கர்களுக்கு அரசனாக முன்பு வைக்கப்பட்ட இரணியன் மகன் நாசன் ஆவான்.

## விளக்கம்

தகுவர் - அசுரர்கள்
வானவர் - தேவர்கள்
மத்தவெம்சமர் - வெறியுடைய கொடியபோர்
ஒரீஇ - நீங்கி
தானவர் - அரக்கர்கள்

277. நாசனென் றுரைத்திடு நாம வேலினான்
தேசுறு புதல்வனாந் தீய தாரகன்
பேசுமத் தாரகன் பேணு புத்திரன்
வீசிய பெரும்புகழ் வித்துன் மாலியே

## தெளிவுரை

நாசன் என்று சொல்லப்பெறும் அச்சந்தரும் வேலினை உடையவனுடைய அழகிய மகன் தீய தாரகன்; சொல்லப் பெறும் தாரகன் பாதுகாத்து வளர்த்த மகன், பெரும்புகழ் பரவிய 'வித்துன்மாலி' என்பவன்.

## விளக்கம்

நாமவேல் - அச்சந்தரும்வேல்
தேசு - அழகு
பேணுபுத்திரன் - பாதுகாத்து வளர்த்தமகன்

278. விரகுறு தாரகன் வித்துன் மாலிபால்
அரசளித் தருந்தவ மாற்றக் கான்புகுந்
தெரியினை வளர்த்தத னிடைநின் றேதவம்
புரிதலும் யானனப் புள்ளிற் றோன்றினேன்.

## தெளிவுரை

அறிவுடைய தாரகன், வித்துன் மாலியிடம் அரசு வழங்கி, அரிய தவம் செய்வதற்குக் காட்டில் புகுந்து, தீவளர்த்து அதன் இடையில் நின்று தவம் செய்யவும், யான் அன்னப்பறவையின் மீது தோன்றினேன்.

## விளக்கம்

*விரகுறு - அறிவுடைய*
*அனப்புள் - அன்னப்பறவை.*
*எரி - தீ, யாகத்தீ*

279. விழியெதி ருறுமெனை வேண்டித் தாரகன்
வழிமுறை சென்னியால் வணங்கிப் போற்றலும்
மொழிகநின் கருத்தினை முடித்தும் யாமென
அழிவிலா வரமெனக் கருளென் றோதுவான்

## தெளிவுரை

கண்ணெதிரே தோன்றிய என்னை வேண்டிய தாரகன், வழிபடும் முறைப்படி தலையால் வணங்கிப் போற்ற, ''உன் எண்ணத்தை முடித்து வைப்போம் யாம்; சொல்லுக!'' எனக்கூறவும், ''அழிவில்லா வரம் எனக்கு அருள்க!'' என்று வேண்டினான்.

## விளக்கம்

விழி - கண்
வழிமுறை - வழிபடும் முறை
சென்னி - தலை
மொழிக - சொல்லுக
முடித்தும் - முடித்துவைப்போம்

280. தாதைகே ளெனக்குமூ தாதை யாகிய
நாதனா மிரணிய னயந்து முன்றவம்
போதவே புரிந்துனைப் போற்றி வேண்டநீ
சாதறீர் வரமவன் றனக்கு நல்கினை

## தெளிவுரை

பிரமனே! கேள்! எனக்குப் பாட்டனாகிய தலைவனாகிய இரணியன் விரும்பி முன்பு தவம் போதிய அளவு செய்து உன்னைப் போற்றி வேண்டவும், நீ சாதல் நீங்கிய வரம் அவனுக்கு அளித்தனை.

## விளக்கம்

தாதை - தந்தையே
மூதாதை - பாட்டன்
போத - மிக

281. இப்பெரு வரம்பெறு மிரணி யன்றனைச்
செப்பருந் திறனர சிங்கன் கொன்றனன்
அப்படி பழுதுறா தமர ரிந்திரன்
முப்புர மெரித்தவன் முராரி நின்றனால்

## தெளிவுரை

இப்பெரிய வரத்தினைப் பெற்ற இரணியனைச் சொல் லுதற்கு அரிய வலிமையுடைய நரசிங்கன் கொன்றான்; அவ் வாறு பழுதடையாமல், தேவர்கள், இந்திரன், முப்புரங்களை எரித்த சிவன், திருமால், உன்னால்,

## விளக்கம்

திறல் - வலிமை
பழுதுறாது - அழிவடையாமல்
முராரி - திருமால்
முப்புரம் எரித்தவன் - சிவன்

282. அழிவிலா வரமெனக் கருளென் றேத்தலும்
வழவிலா துதவியே மறைந்திட் டேனரோ
கழிவிலா வரம்பெறு கடிய தாரகன்
இழிவிலாச் சோணிதாக் கியத்தி லெய்தினான்

## தெளிவுரை

''அழிவற்ற வரம் எனக்கு அருளுக ''என்று வணங்கவும், அழிவில்லாது வரம் உதவி மறைந்தேன்; நீங்குதல் இல்லாத வரம் பெற்ற கடுமையான தாரகன் இழிவில்லாத சோணிதாக்கியம் அடைந்தான்.

## விளக்கம்

வழுவிலாது - அழிவில்லாது
கழிவுஇலா - நீங்குகை இல்லாத
கடிய - கடுமையான
இலா - இல்லாத

283. எய்திய தாரக னெமக்க ருந்துயர்
செய்தலும் பாற்கடல் சேர்ந்து நாகணை
ஐயனுக் குரைத்தன மவனெ ழுந்துபோய்
வெய்யவ னொடுபல விதத்திற் போர் செய்தான்.

## தெளிவுரை

அடைந்த தாரகன், எங்களுக்கு அரிய துன்பம் செய்யவும், பாற்கடலை அடைந்து, பாம்பணையில் இருந்த ஐயன் திருமாலுக்குச் சொன்னோம், அவன் எழுந்து சென்று கொடியவனோடு பலவகைகளில் போரிட்டான்.

## விளக்கம்

அருந்துயர் - அரியதுன்பம்
நாகணை - பாம்பணை, பாம்புப்படுக்கை
ஐயன் - தலைவனாகிய திருமால்
வெய்யன் - கொடியவனாகியதாரகன்

284. அத்திர சத்திர மனைத்துந் தோற்றரி
சித்திசேர் தாரகன் சிரந்து ணித்திடென்
றுய்த்தனன் சக்கர முருத்துப் போதலும்
கைத்தலத் திருத்தினன் கழுத்தி லாரமாய்

## தெளிவுரை

கையைவிட்டுச் செல்லும் படைக்கருவி, கையில் இருக்கும் படைக்கருவி ஆகிய அத்திரம் சத்திரம் எல்லாவற்றையும் தோற்ற திருமால், நினைத்தது கை கூடப்பெற்ற தாரகன் தலையை அறுத்திடுக என்று கூறிச் சக்கராயுதத்தைச் செலுத்தினன்; சக்கரப் படை சினத்துடன் செல்லவும் அதனைக் கையில் இருத்திக் கொண்டான்; கழுத்தில் ஆரமாய்,

## விளக்கம்

அரி - திருமால்
அத்திரம் - கையைவிட்டுச் செல்லும் படைக்கருவி
சத்திரம் - கையில் இருக்கும் படைக்கருவி
சித்தி - எண்ணியவை கைகூடுதல்
சிரம் - தலை
உய்த்தனன் - செலுத்தினன்
உருத்துப்போதல் - சினத்துடன் செல்லுதல்

285. தாரக ணரிவிடு சக்க ரத்தினை
மார்பகத் தணியென வைத்தி ருத்தலும்
நீரகந் துயில்பவ னெஞ்ச மாழ்கியே
காரகஞ் செறியுருக் கரந்து போயினான்

## தெளிவுரை

அரி விடுத்த சக்கரத்தைத் தாரகன் தன் மார்பில் அணியாக வைத்துக் கொண்டு இருக்கவும், பாற்கடலில் உறங்கும் திருமாலின் மனம் மயங்கிக் கரிய அகம் செறிந்த உருவம் மறைந்து போயினன்.

## விளக்கம்

அரி - திருமால்
நீரகம் - பாற்கடல்
துயில்பவன் - உறங்கும் திருமால்
மாழ்குதல் - மயங்குதல்
கார் - கருமை
அகம் - உள்ளம்
கரந்து - மறைந்து

286. அங்கது கண்டபி னமர்செய் தாரகன்
பொங்கிய வுளமகிழ் பூத்துத் தன்புடை
தங்கிய வவுணர்க டாழ்ந்து சூழ்வர
இங்கிதத் தொடுதன திருக்கை யெய்தினான்.

## தெளிவுரை

அங்கு அதனைக்கண்ட பிறகு போரிட்ட தாரகன், சினம் பொங்கிய உள்ளம் மகிழ்ச்சி மலரத் தன் பக்கம் தங்கிய அரக்கர்கள் பணிவுடன் சூழ்ந்து வரவும் தன் எண்ணத்தைப் பிறர்க்குத் தெரிவிக்கும் குறிப்புடன் தனது இருக்கையையடைந்தான்.

## விளக்கம்

அமர் - போர்
மகிழ்பூத்து - மகிழ்ச்சி மலர்ந்து
புடை - பக்கம்
அவுணர்கள் - அரக்கர்கள்
தாழ்ந்து - பணிந்து
இங்கிதம் - தன் எண்ணத்தைப் பிறர்க்குத் தெரிவிக்கும் குறிப்பு.

287. வக்கிர னெனும்பெயர் மருவுந் தானவன்
பக்கலி லெமைத்துயர் படுத்த வைத்தனன்
துக்கவெஞ் சிறையினைத் தொலைத்தல் வேண்டியாம்
புக்குவக் கிரனடி புகழ்ந்தி ரந்தனம்.

## தெளிவுரை

வக்கிரன் என்னும் பெயர் பொருந்திய அரக்கன் பக்கத்தில் எங்களைத் துன்பப்படும் படி வைத்தான்; துயரக் கொடுஞ் சிறையைப் போக்குதல் வேண்டி நாங்கள் புகுந்து வக்கிரன் தாள்களைப் புகழ்ந்து வேண்டினோம்.

## விளக்கம்

மருவும் - பொருந்தும்
துக்கவெஞ்சிறை - துயரமாகிய கொடிய சிறை
புக்கு - புகுந்து
இரந்தனம் - வேண்டிக்கொண்டோம்.

288. அங்கவன் விடப்பெறீஇ யாம ணைந்துநின்
செங்கம லக்கழற் சேவை பெற்றனம்
இங்கினிக் கைவிடா எதமைப்பு ரந்தருள்
சங்கர னுதவிய சரவ ணோற்பவ

## தெளிவுரை

அங்கு அவன் விடப்பெற்று நாங்கள் அடைந்து உன்னுடைய செந்தாமரைக்கழல் திருவடித் தொண்டினைப் பெற்றோம்; இங்கு இனிமேல் கைவிடாமல், சிவன் உதவிய சரவணப் பொய்கையில் தோன்றிய முருகனே! எங்களைக் காத்திருள்க!

## விளக்கம்

விடப்பெறீஇ - விடப்பெற்று
செங்கமலக்கழல் சேவை - செந்தாமரைத் திருக்கழல் அடித்தொண்டு
சங்கரன் - சிவன்
சரவணோற்பவ - சரவணப் பொய்கையில் தோன்றியவனே.

289. என்றிமை யவரிரந் திடலு மெம்பிரான்
அன்றவர் முகத்தினை யருளி னோக்கியே
ஒன்றிய பயமெலா மொழிமி னஞ்சலீர்
சென்றுதா ரகனுயிர் செகுத்தும் யாமெனா

## தெளிவுரை

என்று தேவர்கள் வேண்டிக் கொள்ள, எம்கடவுளாகிய முருகர், அன்று, அவர்தம் முகத்தினை அருளுடன் பார்த்து ''சேர்ந்த அச்சங்கள் எல்லாவற்றையும் நீக்குங்கள்! அஞ்சற்க! சென்று தாரகன் உயிரையாம் அழிப்போம்.''

## விளக்கம்

இமையவர் - தேவர்கள்
எம்பிரான் - முருகன்
அருளின் நோக்கியே - அருளுடன் பார்த்து
ஒன்றிய பயம் - சேர்ந்த அச்சங்கள்
அஞ்சலீர் - அஞ்சற்க
செகுத்தும் - அழிப்போம்.

290. இமையவர் படையதா யெழுமி னென்றிறை
கமையொடு மருள் செயக் கண்ட விண்ணவர்
அமைவரு மகிழ்ச்சிகொண் டமரர் கோனயன்
உமையொரு பாகனோடுவண வூர்தியும்.

## தெளிவுரை

தேவர்கள் படையுடன் எழுவீர்களாக என்று கடவுளாகிய முருகன் பொறுமையுடன் அருளக்கண்டு தேவர்கள் அமைவதற்கு அரிய மகிழ்ச்சியினைக் கொண்டு, தேவர்களின் அரசன் இந்திரன், பிரமன், உமையொரு பாகனாகிய சிவனுடன் கருடனை ஊர்தியாகக் கொண்ட திருமாலும்,

## விளக்கம்

இமையவர் - தேவர்கள்
இறை - கடவுளாகிய முருகன்
கமையொடு - பொறுமையுடன்
அமரர்கோன் - தேவர்களின் அரசன் இந்திரன்
அயன் - பிரமன்
உமையொரு பாகன் - சிவன்
உவணஊர்தி - திருமால்; உவணம் - கருடன்.

291. சித்தரு மியக்கருந் திறன்ம ருத்துவக்
கொத்தரும் விஞ்சையர் குழுவும் பன்னக
நித்தரும் வசுக்களு நிலைத்த யோகுசெய்
பத்தரு முனிவரும் பலருங் கூடியே.

## தெளிவுரை

சித்தர்களும், இயக்கர்களும், திறமையான மருத்துவக் கூட்டத்தாரும், விஞ்சையர் குழுவினரும், நாகர்களாகிய நிலைத்து வாழ்வோரும், வசுக்களும், நிலையாக யோகம் செய்யும் இறையன்பர்களும், முனிவர்களும் ஆகிய பலரும் கூடி,

## விளக்கம்

கொத்தர் - கூட்டத்தார்
நித்தர் - நித்தியர், நிலையாக வாழ்பவர்கள், சாவற்றவர்கள்
யோகு - யோகம்
பத்தர் - இறையன்பர்கள்

292. அரியணை மீதுவைத் தறுமு கன்றனை
மருவிய மறைநெறி வழாத ருச்சனைக்
குரியநற் பொருளெலா முவந்து நல்கியே
திருவபி டேகமுஞ் சிறப்பிற் செய்தனர்.

## தெளிவுரை

அரியாசனத்தின்மேல் வைத்து ஆறுமுகக் கடவுளைப் பொருந்திய மறைநெறி மாறாமல் அருச்சனைக்குரிய நல்ல பொருள்களை எல்லாம் மகிழ்ச்சியுடன் கொடுத்துத் திருநீராட்டும் சிறப்புடன் செய்தனர்.

## விளக்கம்

அரியணை - சிங்காதனம்
மருவிய - பொருந்திய
வழாது - தவறாது
திருவபிடேகம் - திருநீராட்டு

293. தேவசே னாபதி யெனுந்தி ருப்பெயர்
யாவரு மறிதர வெடுத்தி யம்பினார்
கோவுறும் வருணன் வெண் குடைபிடித்தனன்
காவல் செய் காற்றிறை கவரி வீசினன்.

## தெளிவுரை

'தேவசேனாபதி' என்றும் அழகிய பெயர் அனைவரும் அறியுமாறு சூட்டினார்கள்; அரசத்தன்மையுடைய வருணன் வெண் கொற்றக் குடையினைப் பிடித்தான்; காவல் புரியும் காற்றுக்கு இறைவனாகிய வாயு வெண்சாமரம் வீசினான்.

## விளக்கம்

தேவசேனாபதி - தேவர்களுக்குத் தானைத்தலைவன்
திருப்பெயர் - அழகிய பெயர்
அறிதர - அறியும்படி
இயம்பினார் - கூறினர்
கோவுறும் - அரசத்தன்மையுடைய
காற்றுஇறை - காற்றுக்கடவுள், வாயுதேவன்

294. அளகையர் கோன்மகிழ்ந் தகரு சந்தனம்
களபகத் தூரிகற் பூரங் குங்குமத்
தளமுறப் புனைந்தனன் றமனி யப்பணி
வளையணி யுங்கரன் வனைந்திட் டானரோ.

## தெளிவுரை

அளகாபுரிக்கு மன்னனாகிய குபேரன் மகிழ்ந்து, அகில், சந்தனம், கலவைச் சாந்து, கத்தூரி, கற்பூரம்,பூசப்பெறப் பொன்னாபரணங்களை அணிவித்தான். சங்கைக்கையில் அணிந்த திருமால்.

## விளக்கம்

அளகையர்கோன் - குபேரன்
அகரு - அகில்
களபம் - கலவைச்சாந்து
குங்குமத்தளம் - கலவைச்சந்தனம்
தமனியப்பணி - பொன்னாபரணம்
வளை அணியும் கரன் - சங்கை அணிந்த கையையுடைய திருமால்.

*(கொச்சகக் கலிப்பா)*

295. விண்ணவர்கோ னிளையவன்கை மேனீட்டப்
புயங்கொடுத்தான்
கண்ணுதலோன் றன்பூத கணங்களையு முவந்தளித்தான்
பண்ணமர்பா துகையியமன் பங்கயத்தாண்ம லர்செறித்தான்
திண்ணியதம் பலப்படிகஞ் செங்கையிலேந் தினன் சயந்தன்.

## தெளிவுரை

இந்திரன் (விண்ணோர்க்கு அரசன்), முருகன் கையை மேல் நீட்டத்தன் தோள் கொடுத்தான்; நெற்றிக் கண்ணனாகிய சிவபெருமான் தன் பூதகணங்களையும் மகிழ்ச்சியுடன் அளித்தான்; அணி செய்யப்பெற்ற செருப்புகளை இயமன் முருகனுடைய திருவடித்தாமரைமலர்களில் செறித்தான்; திண்ணிய வெற்றிலைச்சாறு கொண்ட பளிங்கைச் சிவந்த கையில் சயந்தன் ஏந்தினான்.

## விளக்கம்

இளையவன் - முருகன்
புயம் - தோள்
கண்ணுதலோன் - சிவபெருமான்
கணம் - கூட்டம்
பண் - அலங்காரம்
பாதுகை - மிதியடி, செருப்பு
தம்பலம் - வெற்றிலைச்சாரம்
படிகம் - பளிங்கு
சயந்தன் - இந்திரன் மகன்.

296. செயதேவ துந்துபியைத் தேவரிடி யெனவதிர்த்தார்
நயமான வாசிபல நானுமெதிர் நின்றுரைத்தேன்
இயலாஞ்சே னாபதியு மியாமியற்றும் பணிக்குவந்து
வயமேவு வெண்கரியின் மஞ்சமிசை யிவர்ந்திட்டான்.

## தெளிவுரை

செயதேவதுந்துபி என்னும் ஒருவகை வாத்தியத்தைத் தேவர்கள் இடி முழக்கம்போல அதிரும்படி வாசித்தனர்; இன்ப மான வாழ்த்துக்கள் பலவற்றை நானும் எதிரே நின்று சொன் னேன்; தன்மையான சேனாபதியாகிய முருகனும் யாம் செய்த பணிகளுக்கு மகிழ்ச்சியடைந்து, வலிமை பொருந்திய வெண் யானையின் மஞ்சத்தின் மீது ஏறி அமர்ந்தான்.

## விளக்கம்

துந்துபி - ஒருவகை வாத்தியம்
ஆசி - வாழ்த்து
இயல் - தன்மை
வயம் - வெற்றி, வலிமை
மஞ்சமிசை - மஞ்சத்தின் மீது
இவர்ந்திட்டாள் - ஏறி ஊர்ந்தான்.

297. வீரவா குவைமுதலாம் வீரர்களொன் பதின்மரொடும்
காரவா வுறும்பூத கணத்தவரும் புடைசூழச்
சீருலா மகிலேசர் செகதீசர் திரணெருங்கப்
போருலாம் படையேந்திப் பொருப்பை வலங்
கொண்டெழுந்தான்.

## தெளிவுரை

வீரவாகுவை முதலாகக் கொண்ட வீரர்கள் ஒன்பது பேர் களோடு நீர்வேட்கையால் மேகத்தை விரும்பும் பூதகணத்தவர்களும் பக்கத்தில் சூழ்ந்திருக்கச் சிறப்புமிக்க உலகிற்கு இறைவராகிய செகதீசருடைய கூட்டம் நெருங்கப் போருக்குரிய படைக்கருவிகளை ஏந்தித் தணிகை மலையை வலம் வந்தான்.

## விளக்கம்

முதலாம் - முதலாகும், முதல்ாகக்கொண்ட
கார் அவாஉறும் - நீர்வேட்கையால் மேகத்தை விரும்பும்

புடை சூழ - பக்கத்தில் சூழ்ந்து வர

சீர் உலாம் - சிறப்புப் பொருந்திய

அகிலேசர் - உலகத்துக்கு இறைவன்

செகதீசர் - சிவன்

திரள் - கூட்டம்

298. வலம்புரிந்த சரசன்மன் வானவர்பா லனுதினமும்
சலம்புரிந்த தாரகன்வாழ் தருமாயா புரிமுனம்போய்க்
குலம்புரிந்த வெண்சங்கைக் குருமலர்வாய் வைத்தூதி
அலம்புரிந்த பிரளயத்தி னதிர்கடல்போன் முழக்கினான்.

## தெளிவுரை

வெற்றிகொள்ளும் முருகன் தேவர்களிடம் நாள்தோறும் வஞ்சகங்கள் செய்த தாரகன் வாழும் மாயாபுரிக்கு முன்னதாகச் சென்று தன்குலத்திற்குரிய (சிவ மரபுக்குரிய) வெண்சங்கைக் குருவாகிய தன் மலர்வாயில் வைத்து ஊதித்துன்பம் செய்த ஊழியில் அதிரும் கடல்போல் முழக்கம் செய்தான்.

## விளக்கம்

வலம் - வெற்றி

சரசன்மன் - முருகக்கடவுள்

சரம் - நாணல்புல்

சலம் - வஞ்சனை

அலம் - துன்பம்

குரு - மேன்மை, ஆசான், நிறம்

பிரளயம் - ஊழி.

299. அண்டமெலாங் கம்பிக்கு
மவ்வொலிகேட் டலுமரக்கன்
கொண்டலுகாந் தரத்திடிபோற்
குறித்திடுசங் கத்தொனியே
தொண்டிறற்சா ரணவெனலு
மொய்யெனச்சென் றறுமுகனைக்
கண்டுபொரற் கிவணடைந்தான்
கந்தனென வந்துரைத்தான்.

## தெளிவுரை

அண்டங்கள் அனைத்தும் நடுங்கும் அந்த ஒலியைக் கேட்டதும் அரக்கன், மேகத்தின் ஊழிக்காலத்து இடிபோல் சங்கின் ஓசை முழங்கும்; எக்காரணத்தால் நிகழ்வது? ஒளி பொருந்திய வலிமையுடைய ஒற்றனே!'' என்று வினவ, ஒய் யென விரைந்து சென்று, ஒற்றன் ஆறுமுகனைக் கண்டு, ''போரிடு வதற்கு இங்கு வந்தான் கந்தன்' என்று வந்து தாரகனிடம் கூறி னான்.

## விளக்கம்

கம்பிக்கும் - ஸ்தம்பிக்கும், நடுங்கும்
கொண்டல் - மேகம்
உகாந்தரத்து இடிபோல் - ஊழிக்கால இடியைப்போல்
உகாந்தரம் - ஊழிக்காலமுடிவு
தொனி - த்வனி, ஒலி, ஓசை
ஏது - என்ன காரணத்தால் நிகழ்வது
சாரண - ஒற்றனே
பொரற்கு - போரிடுதற்கு
இவண் - இவ்விடம்
ஒண் திறல் - ஒளிபொருந்திய வலிமை

300. தூதுவன் சொற் கேட்டலுமே
துணுக்கெனத்தா ரகனெழுந்து
காதுசமர்க் கோலமுடன்
கடியபடைக் கலஞ்சுமந்து
மோதவுணக் குழாங்களொடு
முற்றுமெயிற் புறத்தணைந்தென்
நாதனெதி ருற்றுலக
நடுங்குறவெஞ் சமர்புரிந்தான்.

## தெளிவுரை

தூதுவன் சொல்லைக் கேட்டதும், துணுக்குற்றுத் தாரகன் எழுந்து, கொலைக்குரிய போர்க் கோலமுடன், கொடிய படைக் கலன்களைச் சுமந்து, எதிர்த்துப் போரிடுவதற்குரிய அரக்கர் கூட்டங்களுடன் முற்றுகையிடப்பெற்ற மதில் புறத்துக்கு வந் தடைந்து என் தலைவனாகிய முருகனுக்கு எதிராக உலகம் நடுக்கம் கொள்ளும்படிப் போர் செய்தான்.

## விளக்கம்

காது - கொலை
சமர்க்கோலம் - போர்க்கோலம்
அவுணக் குழாங்கள் - அரக்கர் கூட்டங்கள்
முற்றும் - முற்றுகையிடும்
எயில்புறம் - மதிலுக்கு வெளியே
அணைந்து - அடைந்து
நாதன் - தலைவன்
வெம் - கொடிய

301. விறற்புயனை முன்னிட்ட வீரர்களொன் பதின்மர்களும்
தறற்கிணநா தருமரக்கர் சேனையைவக் கிரனொடுங்கொல்
மறக்கொடும்போர் வலிநோக்கி மாயையினாற் றாரகனும்
கறுத்திருள்சேர் கிரவுஞ்சக் கனவஞ்ச முழைபுகுந்தான்.

## தெளிவுரை

வலிமையான தோள்களுடைய வீரவாகு முதற் கொண்டு உள்ள வீரர்கள் ஒன்பது பேர்களும் திறனுடைய சிவகணங்களுக்குத் தலைவராகிய முருகரும்; அரக்கர்களுடைய படையை வக்கிரனோடும் கொல்லும் ஆண்மைமிக்க கொடிய போரின் வலிமையைக் கண்டு மாயச் செயலினால் தாரகனும் கறுத்த இருள்சேர்ந்த கிரவுஞ்சமலையின் பெரிய வஞ்சகமான குகைக்குள் புகுந்தான்.

## விளக்கம்

விறல்புயனை - வலியதோள் கொண்டவனை, வீரவாகுவை
திறல்கணநாதர் - திறமையான சிவ கணங்களின் தலைவர்
மறம் - ஆண்மை, வீரம்
வலிநோக்கி - வலிமையைக் கண்டு
மாயை - மாயச் செயல்
முழை - குகை

302. அவனொடுங்கந் தரநுழைந்த வமரரும்பூ தரும் வலிசேர்
நவமுறுவீ ரருங்கிரியி னல்வழிகண் டிலர்மயங்கிச்
சிவனருண்மைந் தனைநினைப்பத் தெரிந்திறைவன்
கிரவுஞ்சத்
தவமயனீங் கிடமலர்க்கைச் சத்திதனை யேவினான்.

## தெளிவுரை

அவனோடு குகையில் நுழைந்து, தேவர்களும் சிவ கணங்களும் வலிமையுடைய நவவீரர்களும் கிரவுஞ்சமலையின் நல்ல வழிகாணாமல் மயங்கி, சிவனருளால் தோன்றியமைந்த னாகிய முருகனை நினைக்கவும், தெரிந்து கொண்ட இறைவனா கிய முருகன் கிரவுஞ்சமலையின் மிகுந்த மயக்கம் நீங்கிட, மலர்க்கையிலிருந்து வேலினைச் செலுத்தினான்.

## விளக்கம்

கந்தரம் - குகை
அமரர் - தேவர்கள்
பூதர் - பூதகணங்கள்
நவம்உறுவீரரும் - நவவீரர்கள்
கிரி - கிரவுஞ்சமலை
தவமயல் - மயல்தவ, மயக்கம் மிக
சத்தி - வேல், ஞானவேல்

303. மெய்ஞ்ஞான சத்திமய வேலெனுஞ்சூ ரியனடுப்ப
அஞ்ஞான சத்திமய மாம்பொருப்பு மழிந்ததால்
மைஞ்ஞானந் தனைப் புனைந்த வாசவனுங் கடவுளரும்
விஞ்ஞான கணங்களொடும் வீரரொடும் வெளிப்பட்டார்.

## தெளிவுரை

மெய்ஞ்ஞான சத்தியன் மயமான வேலாயுதம் என்னும் சூரியன் நெருங்க அஞ்ஞான சத்தி மயமாகிய கிரவுஞ்ச மலை யும் அழிந்த தனால், மேகமாகிய ஊர்தியை ஏறுவதற்கு அழகு படுத்திய இந்திரனும் கடவுளர்களும் விசேடமான சிவஞானத்தை யுடைய பூதகணங்களுடனும் வீரர்களுடனும் வெளியே வந்தனர்.

## விளக்கம்

ஞானசத்தி மயவேல் - ஞானசத்தியின் மயமான வேலாயுதம்
அடுப்ப - நெருங்க
பொருப்பு - மலை, கிரவுஞ்சமலை
மைஞ்ஞானம் - மேகமாகிய ஊர்தி
ஞானம் - யானம்
விஞ்ஞான கணங்கள் - விசேடமான சிவஞானத்தையுடைய பூதகணங்கள்.

304. அரிந்தமனா கியகுமர னடல்வேலாற் கிரவுஞ்சம்
முரிந்ததுகண் டுளநடுங்கி முரணழிந்த தாரகனும்
இரிந்ததுநம் புயவலியு மின்னுயிரு நிலாதென்னத்
தெரிந்தனன்பின் னொருவகையாற் றேறியமர்க்
களத்துற்றான்.

## தெளிவுரை

பகைவர்களை அடக்குபவனாகிய குமரன் கொல்லும் வேலினால் கிரவுஞ்சமலை பிளந்தது கண்டு உள்ளம் நடுங்கி, வலிமை அழிந்த தாரகனும், நம் தோள் வலிமையும் அழிந்தது, இனிய உயிரும் நில்லாது எனத்தெரிந்து கொண்டனன்; பிறகு ஒரு வகையாக மனம்தேறிப் போர்க்களத்தை அடைந்தனன்.

## விளக்கம்

அரிந்தமன் - பகைவரை அடக்குபவன்
முரிந்தது - பிளந்தது
அடல்வேல் - கொல்லும் வேல்
முரண் - வலிமை
இரிந்தது - கெட்டது, சாய்ந்தது, அழிந்தது
நிலாது - நில்லாது.

305. அரக்கரொடு பூதர்களு மணிவீர வாகுமுதல்
உரைக்குநவ வீர்களு முருத்தமரி லெதிரேற்றார்
கரக்குவையும் புயக்குவையுங் காற்குவையுந்
துடைக்குவையும்
சிரக்குவையும் படத்துணித்தார் தேவர்களித் திடப்பூதர்.

## தெளிவுரை

அரக்கர்களுடன் பூதகணங்களும் அழகிய வீரவாகு முதல், சொல்லப்பெறும் நவவீரர்களும் சினங்கொண்டு போரில் பகைவர்களை எதிர் கொண்டனர். தேவர்கள் களிக்கப் பூதகணத்தினர் கைகளின் குவியலையும், தோள்களின் குவியல்களையும், கால்களின் குவியல்களையும், துடைகளின் குவியல்களையும், தலைகளின் குவியல் களையும், இல்லாதவாறு அரக்கர்களைத் துணித்தனர்.

## விளக்கம்

உருத்து - சினங்கொண்டு
அமரில் - போரில்
எதிர் ஏற்றார் - பகைவர்களை எதிர்கொண்டனர்
கரக்குவை - கைகளின் குவியல்
புயக்குவை - தோள்களின் குவியல்
துடைக்குவை - துடைகளின் குவியல்
சிரக்குவை - தலைகளின் குவியல்
பட - அகப்பட, இல்லாதவாறு

306. அங்கதுதா ரகனோக்கி யடற்சிலையைக் கால்வணக்கிப்
பொங்குகண நாதர்மிசைப் பொருகணைமா ரிகள்
சொரிந்தான்
இங்கிதுகண் டறுமுகவனிருஞ்சிலையைத் தோள்வாங்கி
வெங்கரிமா முகன்மீது விசிகவரு டம்பொழிந்தான்.

## தெளிவுரை

அங்கு அதனைத்தாரகன் கண்டு, வெற்றிபொருந்திய வில்லைக் காலால் வளைத்து, சினம் பொங்கும் கணநாதராகிய முருகர்மீது போரிடும் அம்புமழைகளைச் சொரிந்தான்; இங்கு இதனைக்கண்டு ஆறுமுகன் பெரியவில்லைத் தோளிலிருந்து வளைத்து கொடிய யானை முகங்கொண்ட தாரகன் மீது அம்பு மழைகளைப்பொழிந்தான்.

## விளக்கம்

அடல்சிலை - வெற்றி கொள்வில், கொல்லும் வில்
பொங்குகணநாதர் மிசை - சினம் பொங்கும் கணத்தலைவராகிய முருகர் மீது
பொருகணை - போரிடும் அம்புகள்
இருஞ்சிலை - பெரியவில்
வாங்கி - வளைத்து
வெங்கரிமா முகன் - கொடிய பெரிய யானை முகம் கொண்டவன், தாரகன்.
விசிகவருடம் - அம்பு மழை.

307. ஆரியனே வியகணையை யரக்கனுமங் கெதிரழிந்தான்
தாரகனே வியகணையைச் சண்முகனும் பொருதழித்தான்
நேரிலிரு வருங்களத்தி னெடும்போதிப் படிபொருதார்
வீரனெனுந் தாரகனுமெலிந்துவிர கொடுமொழிவான்.

## தெளிவுரை

உயர்ந்த முருகன் ஏவிய அம்பினை அரக்கனாகிய தாரகன் அங்கு எதிர்க்கச் சோர்ந்தனன்; தாரகன் செலுத்திய அம்பினைச் சண்முகனும் போரிட்டு அழித்தான்; நேரில் இருவரும் போர்க்

களத்தில் நெடுநேரம் இவ்வாறு போரிட்டனர். வீரன் என்னும் தாரகனும் மெலிவடைந்து தந்திரத்தோடு சொல்லலாயினன்.

## விளக்கம்

ஆரியன் - உயர்ந்தவன்
ஏவிய - செலுத்திய
கணை - அம்பு
அரக்கன் - அரக்கனாகிய தாரகன்.
பொருதார் - போரிட்டனர்
விரகொடு - தந்திரத்தோடு.

*(கலி விருத்தம்)*

308. குழந்தைநீ மேருவிற் குழகன் மைந்தவென்
செழும்புய வலிக்கெதிர் தேவர் நிற்பரோ
மொழிந்தமா லயனரன் மூவ ராற்றலர்
இழந்திடா துயிர்சுமந் தேகு கென்றனன்.

## தெளிவுரை

''குழந்தை நீ; மேருவை வில்லாகக் கொண்ட சிவன் மைந்தனே! என்னுடைய வளமான தோள் வலிமைக்கு எதிராகத் தேவர்கள் நிற்பார்களோ? சொல்லப்பெறும் திருமால், பிரமன், சிவன் ஆகிய மூவர் வலிமையற்றவர்கள். இழக்காமல் உயிரைச் சுமந்து செல்க!'' என்றான்.

## விளக்கம்

குழகன்மைந்த - சிவனுக்கு மைந்தனே
செழும்புயவலி - வளமான தோள்வலிமை

மால் - திருமால்
அயன் - பிரமன்
அரன் - சிவன்
ஆற்றலர் - ஆற்றல் அல்லர், வலிமையற்றவர்கள்
ஏகுக - செல்க.

309. அம்மொழி தனைவினா யறுமு கப்பிரான்
இம்மொழி நன்றுநன் றென்ன நக்கடா
வெம்மொழிப் போரினை விடுத்தி யென்கைவாழ்
தெம்மொழி சத்தியாற் செகுப்ப லிக்கணம்

## தெளிவுரை

அம்மொழியினைக் கேட்டு ஆறுமுகக் கடவுள், ''இச் சொல் நன்று! நன்று!!'' என்று சிரித்து, ''வெம்மையான சொற் போரினை விடுக! என் கையில் வாழும், பகைவர் புகழ்ந்து கூறும் வேலால் இக்கணம் அழிப்பேன்''.

## விளக்கம்

வினாய் - கேட்டு
நக்கு - சிரித்து
வெம்மொழிப்போர் - வெம்மையான சொற்போர்.
விடுத்தி - விடுவாயாக
தெம்மொழிசத்தி - பகைவர் புகழ்ந்து சொல்லுகின்றவேல்
தெவ் - பகை
செகுப்பல் - அழிப்பேன்.

310. அறிதிநீ யெனப்புகன் றப்பு மாரியாற்
செறிதயித் தியன்கடற் சேனை யாவையும்
முறிதர நொடிவரை முருக்கி னான்சிரம்
பிறிதரு மடற்குறை பேயொ டாடவே.

## தெளிவுரை

''நீயறிவாயாக!'' என்று கூறி அம்புமழையால், செறிவான அரக்கனாகிய தாரகன் படைகள் எல்லாவற்றையும் முறியடித்துக் கைந்நொடிப்பொழுது அளவில் பிறிந்த உடல் குறைகள் பேய்களுடன் ஆடும்படித் தலைகளை முறித்தான்.

## விளக்கம்

அப்புமாரி - அம்புமழை
தயித்தியன் - அசுரன்; திதியின் புதல்வன்; இங்கே தாரகன்
நொடிவரை - கைந்நொடிப் பொழுதின் அளவில்
முருக்கினான் - அழித்தான், கொன்றான்.

311. அரக்கர்தம் பிணக்குவை யசலம் பற்பல
செருக்கள நிறைந்தன திரைக்க டற்புகுந்
திரைத்தொரு குருதியா றெழுந்த தாரகன்
கரத்தொரு பொருப்பினைக் களைந்து வீசினான்.

## தெளிவுரை

அரக்கர்களின் பிணக்குவியல்கள் ஆகிய மலைகள் பல போர்க்களத்தில் நிறைந்தன; அலைகளுள்ள கடலில் புகும் அலைகளைக் கொண்ட இரத்த ஆறு எழுந்தது; தாரகன் கையால் ஒரு மலையைக் களைந்து வீசினான்.

## விளக்கம்

குவை - குவியல்
அசலம் - மலை
செருக்களம் - போர்க்களம்

திரை - அலை
திரைத்தொருகுருதியாறு - திரைகளுடைய ஒரு இரத்த ஆறு.
எழுந்த - எழுந்தது.
கரம் - கை.

312. எதிர்வரு பொருப்பினை யெம்பி ரான்றெரிந்
ததிர்பல வாளியா லரிந்து நொய்தினில்
உதிர்தரு பிட்டென வொழித்துச் சத்தியை
முதிர்சினத் தொடுமுர மூழ்கப் பாய்ச்சியே.

## தெளிவுரை

எதிரே வந்த மலையை எம் கடவுளாகிய முருகன் தெரிந்து கொண்டு, அதிர்ச்சிதரும் பல அம்புகளால் அரிந்து, விரைவில் உதிரும் பிட்டு என்னும்படி ஒழித்து வேலாயுதத்தை முதிர்ந்த சினத்தோடு மார்பில் மூழ்குமாறு பாய்ச்சி,

## விளக்கம்

பொருப்பு - மலை
எம்பிரான் - எம் கடவுளாகிய முருகன்
அதிர் - அதிர்ச்சிதரும்
வாளி - அம்பு
நொய்தினில் - விரைவில்
பிட்டு - ஒருவகைச் சிற்றுண்டி.

313. கைத்தலை நாந்தகங் கடாவித் தாரகன்
மைத்தலை துமித்தனன் வயங்கு சோரிநீர்
தத்தலை நதியெனத் தரையெ லாம்பரந்
தத்தலை யவனுட லழிந்து வீழ்ந்ததே.

## தெளிவுரை

கையினால் வாளினைச செலுத்தித் தாரகனுடைய மேகம் போன்ற கரிய தலையை வெட்டினன். ஒளி செய்யும் குருதிநீர் (இரத்தம்) தத்தும் அலைகளையுடைய ஆறு என்னும் படித்தரை எல்லாம் பரவி அவனுடல் அழிந்து அத்தலை விழுந்தது.

## விளக்கம்

நாந்தகம் - வாள்
கடாவி - செலுத்தி
மைத்தலை - மேகம்போன்ற கரியதலை
துமித்தனன் - வெட்டினான்
வயங்கு - ஒளி செய்யும்
சோரிநீர் - இரத்தம்.

314. வஞ்சகத் தாரகன் மடிய மாய்ந்திடா
தெஞ்சிய தானவ ரிரிந்து போயினார்
வெஞ்சினப் பூதடும் வீர வாகுவும்
அஞ்சர வணபவ னடியிற் றாழ்ந்தனர்.

## தெளிவுரை

வஞ்சகனாகிய தாரகன் இறந்துபடவும், சாகாத எஞ்சிய அரக்கர்கள் தோற்று ஓடினர்; கொடிய சினமுடைய பூத கணத்தவரும் வீரவாகுவும் அழகிய சரவணப்பொய்கையில் தோன்றிய முருகன் தாள்களில் வீழ்ந்து வணங்கினர்.

## விளக்கம்

மடிய - இறக்க
மாய்ந்திடாது - சாகாது

தானவர் - அரக்கர்கள்

இரிந்து போயினார் - தோற்று ஓடினர்

வெஞ்சினம் - கொடிய சினம்

அம்சரவணபவன் - அழகிய சரவணப்பொய்கையில் தோன்றிய வன், முருகன்.

அடியில் தாழ்ந்தனர் - தாள்களில் வணங்கினர்.

315. கற்பகப் பூமழை கந்தன் சென்னிமேல்
அற்பகத் தொடும்பொழிந் தமர ரார்த்தனர்
வெற்பக விஞ்சையர் விசயம் பாடினார்
பொற்பக முனிவரர் புகழ்ந்து வாழ்த்தினார்.

## தெளிவுரை

கற்பக மலர்களை முருகன் தலையின்மேல் அன்புள்ளத்துடன் தேவர்கள் சொரிந்து ஆரவாரம் செய்தனர்; மலையினிடத்துள்ள வித்தியாதரர்கள் சிறப்பான வெற்றியைப் பாடினார்கள்; அழகிய மனமுடைய முனிவர்கள் புகழ்ந்து வாழ்த்தினார்கள்.

## விளக்கம்

சென்னி - தலை

அற்பு - அன்பு

அமரர் - தேவர்கள்

ஆர்த்தனர் - ஆரவாரம் செய்தனர்

வெற்பு அகம் - மலையினிடத்துள்ள

விஞ்சையர் - வித்தியாதரர்

விசயம் - சிறப்பான வெற்றி
பொற்பு அகம் - அழகிய மனம்.

316. மூவரும் புகழ்ந்திடு முருக னங்ககன்
றியாவருந் தொழுந்தணி காச லத்தினைப்
பூவரு மியானரி புராரி வாசவன்
தேவரும் புடைவரச் சென்று சேர்ந்தனன்.

## தெளிவுரை

மும்மூர்த்திகளும் புகழும் முருகன் அங்கிருந்து நீங்கி, எல்லோரும் வணங்கும் தணிகைமலையினைத் தாமரை மலரில் தோன்றிய யானும் திருமாலும் சிவபெருமானும் இந்திரன் மற்றும் தேவர்களும் பக்கம் வரச் சென்று சேர்ந்தனன்.

## விளக்கம்

மூவர் - மும்மூர்த்திகள்
அங்கு அகன்று - அங்கிருந்து நீங்கி
பூவரும் யான் - தாமரைப் பூவில் தோன்றிய யான் (பிரமன்)
புராரி - சிவன்
வாசவன் - இந்திரன்
புடை - பக்கம்.

# 12. இந்திரன் நீலமலரால் அர்ச்சித்துத் தெய்வயானையும் வெள்ளானையும் கொடுத்த அத்தியாயம்

**(கதைச் சுருக்கம் :-** தாரகனைக் கொன்ற முருகனுடைய அழகு, இளமை, அறிவு முதலியவற்றை இந்திரன் கருதி அவருக்குத் தன் மகள் தெய்வயானையைத் திருமணம் செய்து அளிக்க விரும்பினான்; முருகனுடைய இசைவையும் பெற்றான். இந்திரன் திருத்தணிகையை விசுவகர்மா என்னும் தேவதச்சனைனக் கொண்டு அணிபெறச் செய்தான். பிறகு அனைத்து தேவர்களும் சூழப்பெற முருகக்கடவுளை வணங்கித் தெய்வ யானையை மணம் செய்வித்தான். திருமணம் நடைபெற்ற பிறகு இந்திரன் அத்தலத்தில் ஒரு தீர்த்தத்தை உண்டாக்கி அதனில் மூன்று வேளைகளிலும் மூன்று குவளை மலர்கள் (கழுநீர் மலர்) மலரும் படிச் செய்து, அம்மலரால் முருகக் கடவுளை அருச்சனை புரிந்து வணங்கினான்; அதன் பிறகு தன் ஊர்தியாகிய ஐராவதம் என்னும் யானையை அச்சந்நிதியில் இருக்கச் செய்தான். முருகக் கடவுளின் ஆணைப்படி அது கிழக்குத் திசையில் தங்கியது. தேவர்களும் மற்றவர்களும் முருகன் அருள் பெற்றுத் தத்தம் இருக்கையை அடைந்தனர்).

*(கொச்சகக்கலிப்பா)*

317. நாரதமா முனிவரகே ணவிற்றுதுமற் றதன்பின்னர்
போரவுணக் கடலினொடும் பொருகிரவுஞ் சத்தினொடும்
தாரகனைத் தடிந்தபிரான் றனதழகு மிளமையுநல்
வீரமுங்கல் வியும்வியந்து விண்ணவர்கோ
னிதுநினைந்தான்.

## தெளிவுரை

நாரதமா முனியே! கேட்பாயாக! சொல்வேன். அதன் பிறகு போரில் அவுணக்கடலோடும் போரிடுகின்ற கிரவுஞ்ச மலையினோடும் தாரகனை அழித்த முருகப் பெருமானுடைய அழகையும் இளமையையும் நல்ல வீரத்தையும் கல்வியையும் வியந்து இந்திரன் இதனை நினைத்தனன்:

## விளக்கம்

நவிற்றுதும் - சொல்வேன்
பொரு - போரிடும்
கிரவுஞ்சம் - கிரவுஞ்சமலை
தடிந்த - வெட்டிய, கொன்ற
விண்ணவர்கோன் - தேவர்களுக்கு அரசன் இந்திரன்.

318. சீரியவெண் கரிபுரந்த தெய்வயா னைப்பெயர்கொள்
காரிகையா நம்மகளைக் கனிந்துதவி னிளையவனும்
ஏரியனம் மருமகனா மெனக்கருதி யக்கருத்தை
ஆரியனுக் குணர்த்தியவ னனுமதிபெற் றிது செய்தான்.

## தெளிவுரை

சிறந்த வெள்ளையானையாகிய ஐராவதம் பாதுகாத்த தெய்வயானை என்னும் பெயரைக் கொண்ட பெண்ணாகிய நம் மகளைக் கனிவுடன் உதவுகின்ற இனிய இளையவனாகிய முருகனும், அழகிய நம் மருமகனாம் எனக்கருதி அந்த எண் ணத்தை உயர்ந்தவனுக்கு உணர்த்தி, அவனுடைய அனுமதி யைப் பெற்று இதனைச் செய்தான்.

## விளக்கம்

வெண்கரி புரந்த தெய்வயானை - வெண்ணிற யானையாகிய ஐராவதத்தால் பாதுகாக்கப்பெற்ற தெய்வயானை.
இளையவன் - முருகன்
ஆரியன் - உயர்ந்தவன்.

319. மாநகரார் தமைத்தணிகை மறுகனைத்தும் புதுக்குதற்குத்
தானறிவித் திடுதிரெனத் தன்னுழையொற் றரையேவி
வானவர்கம் மியன் றனைக்கூய் வதுவைமணி மண்டபமும்
நீநயந்து மனமுவப்ப நிருமியெனப் பணித்திட்டான்.

## தெளிவுரை

மாநகரத்தில் உள்ளவர்களுக்குத் தணிகையில் உள்ள தெருக்கள் அனைத்தையும் புதுப்பிப்பதற்கு அறிவியுங்கள் என்று தன் பக்கம் உள்ள ஒற்றர்களை ஏவி, தேவர்களுடைய தச்சனைக் கூவித் திருமண மணிமண்டபமும் நீ விரும்பி மனமகிழ்ச்சி யுடன் உண்டாக்குக என்று ஆணையிட்டான்.

## விளக்கம்

மறுகு - தெரு
புதுக்குதற்கு - புதுப்பிப்பதற்கு
உழை - பக்கம்
கூய் - கூவி
வதுவை - திருமணம்
நயந்து - விரும்பி
நிருமி - உண்டாக்குவாய்.

320. அப்பணியை யவன்றலைக்கொண் டறுமுகவன் வதுவைதனக்
கொப்பறுமண் டபமனத்தா லூழ்முறையி னிருமித்தான்
செப்புறுமூ வுலகினிலாச் சித்திரவி சித்திரஞ்சேர்
துப்புறுமண் டபவளத்தைச் சொலமயங்கு மனந்தனுமே.

## தெளிவுரை

தேவதச்சன் அந்தப் பணியைத் தன் தலைமேல் கொண்டு ஆறுமுகனுடைய திருமணத்திற்கு ஒப்பற்ற மணிமண்டபத்தை மனத்தால், விதிப்படி உண்டாக்கினான்; சொல்லப்பெறும் மூவுலகங்களிலும் இல்லாத ஓவிய வியப்புகள் சேர்ந்த தூய்மையான மண்டபத்தின் வளனைச் சொல்ல மயங்கிய சேடனும்,

## விளக்கம்

தலைக்கொண்டு - தலைமேல் கொண்டு
அறுமுகவன் - ஆறுமுகன்
வதுவை - திருமணம்
செப்புறு - சொல்லப்பெறும்
துப்பு - தூய்மை
சொல - சொல்ல
அனந்தன் - ஆதிசேடன்.

321. நாற்றிசையுஞ் சோலைகளு நளினமல ரோடைகளும்
மாற்றிசைசெம் பொன்மதிலு மாணிக்க மணவறையும்
வேற்றிசையார் பாடரங்கு மேனகைவந் தாடரங்கும்
காற்றிசைபொற் சாளரமுங் கற்பகநா டெனப்புரிந்தான்.

## தெளிவுரை

நான்கு திசைகளிலும் சோலைகளும் அழகிய மலர் ஓடைகளும், உயர்ந்த மாற்றுப் பொருந்திய செம்பொன் மதிலும் மாணிக்க மண அறையும், வெவ்வேறான இசைப்பயிற்சியை உடைய மகளிர் பாடுவதற்குரிய அரங்கமும், மேனகை வந்து நடனம் ஆடுவதற் குரிய அரங்கமும், காற்றுப்புகுந்து ஒலிக்கின்ற பொன் சாளரமும் கற்பக நாடு என்று சொல்லுமாறு அமைத்தான்.

## விளக்கம்

நளினம் - அழகு
மாற்று இசை செம்பொன் - உயர்ந்த மாற்றுப் பொருந்திய செவ்விய பொன்
வேற்று இசையார் - வேறு வேறான சங்கீதப் பயிற்சியை உடைய மகளிர்
காற்று இசை - காற்றுப் புகுந்து ஒலிக்கின்ற
கற்பக நாடு - கற்பக மரம் உள்ள தேவலோகம்.

322. இந்திரன் கண் டகமகிழ்வுற் றிமையவர்விஞ் சையரியக்கர்
சந்திரசூ ரியர்வசுக்கள் சனகர்முதல் யோகியர்கள்
செந்திரு மார் பின்னபரம சிவனுடன்யான் சென்றிருப்பச்
சுந்தரமா மணித்தவிசைச் சொலுமுறையின்
வழாதமைத்தான்.

## தெளிவுரை

இந்திரன் கண்டு உள்ளம் மகிழ்ந்து தேவர்கள், விஞ்சையர்கள், இயக்கர்கள், சந்திர சூரியர்கள், வசுக்கள், சனகர் முதலிய யோகியர்கள், சிவந்த அழகிய மார்புடைய பரமசிவன் ஆகியோருடன் யான் சென்று இருக்கவும், அழகிய மாமணி

இருக்கையைச் சொல்லும் விதிமுறைப்படி மாறுபடாமல் அமைத்தான்.

## விளக்கம்

அகம் - மனம், உள்ளம்
இமையவர் - தேவர்கள்
செந்திருமார்பினன் - சிவந்த அழகிய மார்பினை உடையவன்
தவிசு - இருக்கை
சொலுமுறையின் - சொல்லும் விதி முறைப்படி

323. சங்கநிதி பதுமநிதி தருவளர்சிந் தாமணியான்
மங்கலில்பல் வளமுதவ மணிப்பணிபீ தாம்பரங்கள்
பொங்கமுதம் பூண்டுடுத்துண் டுளங்களித்தார் விஞ்சையர்கள்
அங்கயற்க ணரம்பையர்க ளாடல்செய விசைவடித்தார்.

## தெளிவுரை

சங்கநிதி, பதுமநிதி, கற்பகத்தரு, வளர்கின்ற சிந்தாமணி, காமதேனு மங்குதல் (குறைதல்) இல்லாத பல வளங்களை உதவவும், மணிகளைக் கொண்ட அணிகலன்கள், பீதாம்பரங்கள் மிகுகின்ற அமுதம் ஆகியவற்றை முறையே அணிந்தும், உடுத்தும் உண்டும் விஞ்சையர்கள் மனம் களித்தனர்; அழகிய கயல் போன்ற கண்களை உடைய அரம்பையர்கள் ஆடல்கள் புரிய இசைபாடினர்.

தரு - கற்பகம்
ஆன் - காமதேனு.

324. சுந்தரிசெங் கமலையுமை துகளறுவெண் கலைமடந்தை
அந்தரமங் கையர்தெய்வ யானைதிரு மணங்காண்பான்
வந்திருக்குந் தணிகைமலை வதுவைமணி மண்டபப்பூம்
பந்தரிடைக் கமுகரம்பை பைங்கழைதூண்
டொறுஞ்செறித்தார்.

## தெளிவுரை

இந்திராணி, செந்தாமரை மலரில் விற்றிருக்கும் திருமகள், உமாதேவி, குற்றமற்ற வெண்துகில் உடுத்த கலைமகள், தேவலோகமகளிர்; தெய்வயானையின் திருமணத்தைக் காண வந்துள்ள தணிகைமலையின் திருமணமணிமண்டபத்தின் பூம்பந்தரில் பாக்குமரங்கள் வாழைமரங்கள் பசிய கரும்புகள். ஆகியன தூண்கள் தோறும் கட்டியிருந்தனர்.

## விளக்கம்

சுந்தரி - இந்திராணி
செங்கமலை - திருமகள்
உமை - உமாதேவி
வெண்கலை மடந்தை - கலைமகள்
அந்தரம் - தேவருலகம்
வதுவை - திருமணம்
கமுகு - பாக்குமரம்
அரம்பை - வாழை
பைங்கழை - பசிய கரும்பு

325. சந்தனத்தா னிலமெழுகித் தமனியமா மணிச்சுண்ணம்
விந்தைபெற மேலொழுக்கி வெங்கனலார் தருப்பையொடும்
உந்துசமித் தினைமுனிவ ருயருமறை விதிப்படியே
தந்துமுரு கனைவணங்கித் தயங்குமரி யணையிருத்தி

## தெளிவுரை

சந்தனத்தால் நிலத்தை மெழுகி, மிக்க அழகிய பொன் பொடியால் வியப்படையச் செய்யும்படி மேலே ஒழுகச்செய்து, கொடிய தீயினால் யாகம் செய்வோர் தருப்பையுடன் ஏலப் பட்டைகள் முதலிய ஓமப்பொருள்களை முனிவர்கள் உயர்ந்த மறைகள் விதித்தபடி அளித்து, முருகப்பெருமானை வணங்கி, ஒளிதரும் அரியாசனத்தில் வீற்றிருக்கச் செய்தனர்.

## விளக்கம்

தமனியச் சுண்ணம் - கோலத்திற்குரிய பொன்பொடி
ஒழுக்கி - ஒழுகச்செய்து, சொரிந்து
ஆர்தருப்பை - நிறைந்த தருப்பை
உந்து - கச்சோலம், ஏலப்பட்டை
சமித்து - ஓமமண்டபம்; தயை
தயங்கும் - ஒளிதரும், அசையும்.

326. பைங்கழுநீ ருருவாளைப் பைங்கிளிநேர் மொழியாளைப்
புங்கவர்கோன் றருமானைப் புகறேவ குஞ்சரியை
மங்கலில்கற் புடையாளை மலர்மாதுங் கலைமாதும்
கங்கைநதிப் புனலாட்டிக் கனகமணிப் பட்டுடுத்தி.

## தெளிவுரை

பச்சை நிறங்கொண்ட குவளை மலர் போன்ற நிறங் கொண்டவளும், பைங்கிளிக்கு ஒப்பான சொல்லையுடைய வரும், இந்திரன் மகளும் ஆகிய தெய்வயானையை, மங்காத கற்புடையவளை, திருமகளும் கலைமகளும் கங்கை நீரைக் கொண்டு நீராட்டிப் பொன்னால் ஆகிய பட்டாடையை உடுத்தி.

## விளக்கம்

பைங்கழுநீர் - பசிய குவளை மலர்
புங்கவர்கோன் - இந்திரன்
மலர்மாது - திருமகள்
கலைமாது - கலைமகள், சரசுவதி
கனகம் - பொன்.

327. சந்தனகுங் குமபளிதத் தண்கலவைச் செழுஞ்சேற்றை
அந்தனத்தி லணிந்ததற்பி னவயவங்க டொறும்பணிகள்
நந்துமெழி லுறப்புனைந்து நறுமலர்க்கற் பகத்தெரியல்
கந்தரப்பொன் மாலையொடு கலந்தசைய வலங்கரித்தார்.

## தெளிவுரை

சந்தனம், குங்குமம், பச்சைக்கருப்பூரம் ஆகியவற்றின் குளிர்ந்த கலவையாகிய வளமான சேற்றை (குழம்பை) அழகிய முலைகளில் அணிந்த பிறகு, உடல் உறுப்புகள் தோறும், அணி கலன்களை வளரும் அழகுடன் புனைந்து, மணம்பொருந்திய கற்பக மலர் மாலையைக் குகையில் கிடைத்த பொன்னால் ஆகிய மாலை யுடன் கலந்து அசையும்படி ஒப்பனை செய்தனர்.

## விளக்கம்

பளிதம் - பச்சைக்கருப்பூரம்
தனம் - முலை
அவயவங்கள் - உடல் உறுப்புகள்
பணிகள் - அணிகலன்கள்
நந்தும் - வளரும்
தெரியல் - மாலை
கந்தரப்பொன் - மலைக்குகையில் அகப்படும் பொன்.

328. எழுமுனிவர் மனைவியர்க ளெழுவருமங் கெழுந்துபோய்ச்
செழுமகவா னுவந்தளித்த திருத்தேவ குஞ்சரியை
வழுவறத்தந் தரியணைமேல் வயங்குகுகன் பாலிருத்தித்
தொழுதுதிரு முன்னின்று சோபனங்கள் பாடினார்.

## தெளிவுரை

ஏழு முனிவர்களும் அவர்களுடைய ஏழு மனைவியர்களும் அங்கு எழுந்து சென்று வளமான இந்திரன் மகிழ்ந்தளித்த அழகிய தெய்வயானையைக் குற்றம் நீங்கும்படி அழைத்து வந்து, அரியணையின் மீது ஒளிபொருந்திய முருகன் பக்கத்தில் அமர்த்தினர்; வணங்கித் திருமுன் நின்று வாழ்த்திப் பாடினர்.

## விளக்கம்

மகவான் - இந்திரன்
தேவகுஞ்சரி - தெய்வயானை
வயங்கும் - ஒளி
சோபனம் - வாழ்த்து

(கலி விருத்தம்)

329. அந்தர துந்துமி யைந்து மார்த்தெழத்
தந்திர முனிவரர் சமிதை நல்கிடச்
சுந்தரக் காசிபன் றூய வங்கியை
மந்திர விதிமுறை வளர்த்திட் டானரோ.

## தெளிவுரை

வானுலகத்தின் துந்துபிகள் ஐந்தும் ஆரவாரம் செய்து எழவும், மறைநூல் முனிவர்கள் ஓமவிறகுகளை வழங்கவும்,

அழகிய காசிபன் தூய யாகத்தீயை மந்திரவிதிமுறைப்படி வளர்த்தான்.

## விளக்கம்

அந்தரம் - மேலுலகம்
துந்துமி - துந்துபி, பேரிகை
ஆர்த்து - ஆரவாரம் செய்து
தந்திரம் - நூல்
சமிதை - ஓமவிறகு; அவை அத்தி, அரசு, ஆல், இத்தி, கருங்காலி, நாயுருவி, பலாசு, மா, வன்னி என்பன
சுந்தரம் - அழகு
அங்கி - அக்கினி, யகத்தீ

330. காசிபன் வளர்த்திடு கனலின் முன்பர
தேசிகன் கரமிசைத் தேவ குஞ்சரி
ஆசில்கை வைத்துமை யரனின் வாழ்கென
வாசவன் கரகநீர் வார்த்திட் டானரோ

## தெளிவுரை

காசிபன் வளர்த்திட்ட தீயின் முன்னால் மேன்மையான ஆசிரியன் கையின்மீது தெய்வயானையின் குற்றமற்ற கையை வைத்து, உமாதேவி - அரனைப் போல வாழ்க என்று இந்திரன் கமண்டல நீரை வார்த்தான்.

## விளக்கம்

கனல் - தீ
பரதேசிகன் - மேலான ஆசிரியன்
கரம் - கை

மிசை - மேலே
தேவகுஞ்சரி - தெய்வயானை
ஆசில் - குற்றமற்ற
கரகநீர் - கமண்டல நீர்
அரன் - சிவபெருமான்

331. ஈசனு மகிழ்ந்தனன் யான்ம கிழ்ந்தனன்
வாசவன் மகிழ்ந்தனன் மான்ம கிழ்ந்தனன்
மீசுரர் மகிழ்ந்தனர் வேத பாரகப்
பூசுரர் மகிழ்ந்தனர் புவன மெங்குமே

## தெளிவுரை

''சிவபெருமானும் மகிழ்ந்தான்; நானும் மகிழ்ந்தேன்; இந்திரன் மகிழ்ந்தான்; திருமால் மகிழ்ச்சியடைந்தான்; விண்ணுலகோர் மகிழ்ந்தனர்; வேதங்களைப் படிப்பிக்கும் அந்தணர்களாகிய பார்ப்பனர்கள் உலகெங்கும் மகிழ்ந்தனர்.''

## விளக்கம்

மால் - திருமால்
மீசுரர் - விண்ணுலகோர்
வேத பாரகர் - பார்ப்பார், வேதத்தைப் படிப்பிப்போர்
பூசுரர் - அந்தணர்
புவனம் - உலகம்

332. மலைமகள் களித்தனண் மலரின் மீதுறை
அலைமகள் களித்தன ளனைத்தும் வல்லவெண்
கலைமகள் களித்தனள் கடவுட் பாந்தண்மேல்
நிலைமகள் களிப்பெவர் நிகழ்த்தற் பாலரே.

## தெளிவுரை

மலைமகளாகிய பார்வதி களித்தனள்; மலரின் மீது வீற்றிருக்கும் அலைமகளாகிய திருமகள் களிப்படைந்தாள்; எல்லாம் வல்ல வெண்ணிற ஆடையுடுத்திய கலைமகளாகிய சரசுவதி களிப்பெய்தினாள்; ஆதிசேடன் மேல் நிலைத்த மகளாகிய பூமா தேவியின் மகிழ்ச்சியையடையக்கூடியவர் எவருளர்?

## விளக்கம்

மலைமகள் - பார்வதி
அலைமகள் - திருமகள்
வெண்கலைமகள் - வெண்ணிற ஆடை உடுத்திய சரசுவதி
கடவுள்பாந்தள் - ஆதிசேடன்
பாந்தள் - பாம்பு
நிலைமகள் - நிலைத்த மகளாகிய பூமாதேவி.

333. விண்ணகம் வாழ்ந்தன வேதம் வாழ்ந்தன
மண்ணகம் வாழ்ந்தன மகங்கள் வாழ்ந்தன
பண்ணகம் வாழ்ந்தன பகர்பு லோமசைக்
கண்ணகம் வாழ்ந்தன கவலை நீங்கியே.

## தெளிவுரை

விண்ணவர்கள் வாழ்ந்தனர்; வேதங்கள் வாழ்ந்தன; உலக உயிர்கள் வாழ்ந்தன; யாகங்கள் வாழ்ந்தன; பண்ணுக்கு இருப்பிடமான கந்தருவ உலகத்தினர் வாழ்ந்தனர்; சொல்லப் பெறும் இந்திராணியின் இடமான தேவருலகினர் கவலையற்று வாழ்ந்தனர்.

## விளக்கம்

மகங்கள் - யாகங்கள்
பண்ணகம் - பண்ணுக்கு இருப்பிடமான கந்தருவர் உலகு
பகர் - சொல்லப்பெறும்
புலோமசை - இந்திராணி

'விண்ணகம்', 'மண்ணகம்', 'புலோமசைக்கண்ணகம்' ஆகியன ஆகுபெயர்களாக அமைந்து அவ் அவ் உலகினரையும் உயிரினங்களையும் குறிக்கின்றன.

334. ஐம்முகச் சரபமன் றளித்த மூவிரு
செம்முகக் கேசரி தேவ குஞ்சரி
கைம்முகத் தணிவிரல் கையிற் பற்றியே
மும்முகத் தழலினை முறையிற் சூழ்ந்தனன்.

## தெளிவுரை

ஐந்து முகங்களைக் கொண்ட பறவையாகிய சிவபெருமான் அன்று தோற்றுவித்த ஆறு செம்முகங்களைக் கொண்ட சிங்கம் ஆகிய முருகன் தெய்வயானையின் அழகிய விரலைக் கையில் பற்றியவாறு மும்முகத்தீயினை முறையாக வலம் வந்தான்.

## விளக்கம்

ஐம்முகச்சரபம் - சிவபெருமான்
சரபம் - ஒரு பறவை, அது சிங்கத்தை வெல்வது
சரபம் அளித்த கேசரி - முருகப்பெருமான்
தேவகுஞ்சரி - தெய்வயானையம்மை

ஐந்து முகத்தையுடைய ஒரு சரபம் பெற்ற ஆறு முகத்தையுடைய சிங்கம் யானையை மணந்தது என்றது ஒரு சிறந்த கற்பனை நயமாகும்.
மும்முகத்தீ - முத்தீ

335. செங்கையிற் பூம்பொரி சிதறித் தேவிதன்
பங்கயத் தாண்மலர் பைம்பொ னம்மிவைத்
தங்கவள் கற்பினை யாக விண்ணிடைத்
தங்கிய வருந்ததி தனையுங் காட்டினான்

## தெளிவுரை

சிவந்த கையில் அழகிய பொரி சிதறித் தெய்வ யானையின் தாமரைத் திருவடிகளாகிய மலர்களைப் பசும்பொன் அம்மியில் வைத்து அங்கு அவள் கற்புக்கு இணையாக வானில் தங்கிய அருந்ததி மீனை (நட்சத்திரம்) யுங்காட்டினான்.

## விளக்கம்

தேவிதன் - தெய்வயானையின்
பங்கயம் - தாமரை
பைம்பொன் - பசும்பொன்
அருந்ததி - அருந்ததிமீன் (நட்சத்திரத்தின் பெயர்)

336. பொன்மலை மரகதப் பொருப்பொ டேறியோர்
நன்மலை மிசைவரு நலத்திற் றேவியோ
டென்மலை யுருக்குக னிபத்தி லேறியே
தன்மலை தனைவலந் தானுஞ் செய்தனன்.

## தெளிவுரை

பொன்மலையானது மரகதமலையுடன் ஏறி ஒரு நல்ல மலையின் மீது வரும் நலத்தினையுடைய தெய்வயானையுடன் ஒளி பொருந்திய மலை போன்ற உருவினையுடைய முருகன் யானை மீது ஏறித் தன்மலையாகிய தணிகைமலையை வலம் வந்தான்.

## விளக்கம்

பொருப்பு - மலை
மிசைவரும் - மேலேவரும்
நலத்தின் - நலத்தைப்போல
தேவி - தெய்வயானை
எல்மலை உரு - ஒளி பொருந்திய மலை போன்ற உரு
எல் - விளக்கம்
இபம் - யானை
தன்மலை - தணிகாசலம்

337. மலைவலம் வந்தபின் மணிப்பொற் கோபுர
நிலைவளர் கோயிலி னெடிய வாய்தலின்
தலையணைந் திபவெரிந் தலையி னின்றிழிந்
துலைவறு சினகரத் துற்று வைகினான்.

## தெளிவுரை

மலையை வலம்வந்த பிறகு அழகிய பொன் கோபுரத்தின் நிலை அமைந்த கோயிலின் வாயிலின் தலையை அடைந்து, யானை முதுகிலிருந்து இறங்கி அழிவற்ற திருக்கோயிலை அடைந்து உறைந்தான்.

## விளக்கம்

இபம் - யானை
வெரிந் - முதுகு
இழிந்து - இறங்கி
உலைவு - அழிவு, கெடுதி, அச்சம்
சினகரம் - கோயில்
வைகினான் - உறைந்தான், வசித்தான்

338. புரந்தரன் றணிகையம் பொற்றை மீமிசை
உரந்தரு பூஞ்சுனை யொன்று தொட்டதில்
நிரந்தர மூன்றலர் நீலம் பூத்திடக்
கரந்தனி லமைத்திறை கழலர்ச் சித்தனன்.

## தெளிவுரை

இந்திரன் அழகிய தணிகை மலையின் உச்சியில் ஞானம் அளிக்கும் மலர்ச்சுனை ஒன்று அமைத்து அதில் எந்நாளும் மூன்று குவளை மலர்கள் மலரக் கைகளில் கொண்டு கடவுளாகிய முருகப் பெருமானுடைய திருவடிகளுக்கு அருச்சனை செய்தனன்.

## விளக்கம்

புரந்தரன் - இந்திரன்
பொற்றை - மலை
மீமிசை - மிகவும் மேலே, உச்சியில்
உரம் - ஊக்கம், ஞானம்
தொட்டு - தோண்டி, அமைத்து
நிரந்தரம் - எப்போதும், எந்நாளும்
நீலம் - குவளைமலர்
கரம் - கை
இறைகழல் - கடவுளாகிய முருகன் திருவடிகள்.

339. அங்கழு நீரிடை யறாத மாந்தர்பா
வங்கழு நீரிடை மன்னி வாழ்தரச்
செங்கழு நீர்க்கரிச் சிரனைச் சூன்முதிர்
சங்கழு நீர்ச்சுனைக் கரையிற் றாபித்தான்.

## தெளிவுரை

அங்கே நோய் முதலியவற்றால் அழுகின்ற தன்மை இடை விடாத பாவங்களைக் கழுவும் தீர்த்தத்திடைச் செங்கழுநீர்

விநாயகரைச் சூலின் முதிர்ச்சியால், சங்குகள் அழும் நீரையுடைய சுனையைக் கரையில் நிலையாக விளங்கும்படி அமைத்தான்.

## விளக்கம்

அறாத - நீங்காத
கழுநீர் - கழுவும் நீர்
மன்னிவாழ் தர - நிலைத்து வாழுமாறு
செங்கழு நீர்க்கரிச்சிரன் - செங்கழுநீர் விநாயகர்
கரிச்சிரன் - யானைத்தலையைக் கொண்டவன்
தாபித்தான் - அமைத்தான்.

340. அன்றுதொட் டவ்வரை யவிர்கல் லாரவெற்
பென்றொரு திருப்பெய ரெய்தி நின்றதாற்
சென்றதைக் காணுபு சேயைச் சேவித்தோர்
துன்றிய பவக்கட றுளைந்தி டாரரோ

## தெளிவுரை

அன்று முதற்கொண்டு அம்மலை ஒளிபொருந்திய செங்கழு நீர்மலை என்ற ஒரு அழகிய பெயரை அடைந்து நின்றதனால், சென்று அதனைக் கண்ணுற்று முருகனை வணங்கியவர்கள் நெருங்கிய பிறவிக்கடலில் துன்புற மாட்டார்கள்.

## விளக்கம்

வரை - மலை
அவிர் - ஒளி
கல்லாரவெற்பு - செங்கழுநீர்மலை, திருத்தணிகை மலை
காணுபு - காண்பதற்கு
சேயை - முருகனை

துன்றிய - நெருங்கிய
பவக்கடல் - பிறவிக்கடல்
உளைந்திடார் - துன்புறமாட்டார்கள்

341. சந்ததங் குவளைமுச் சந்தி யுந்தரும்
இந்திர தீர்த்தநீர் யாவ ராயினும்
புந்தியி னினைப்பினும் புரோக்க ணிப்பினும்
கந்தன துலகினைக் கலந்து வாழ்வரே.

## தெளிவுரை

எந்நாளும் குவளை மலர்கள் மூன்று வேளையும் மலரும் இந்திர தீர்த்த நீரை யாவராயினும் மனத்தால் நினைத்தாலும், தீர்த்த்தைத் தெளித்துக் கொண்டாலும் முருகனது உலகினில் சேர்ந்து வாழ்வார்கள்.

## விளக்கம்

சந்ததம் - எப்போதும்
முச்சந்தியும் - மூன்று வேளைகளிலும்
புந்தி - புத்தி, மனம்
புரோக்கணிப்பினும் - தீர்த்தத்தைத் தெளித்துக் கொண்டாலும்

342. பெண்கரி யுடனிலை பெறுகென்றிந்திரன்
வெண்கரி தன்னையும் விசாகற் கீந்தவண்
எண்கரி முகற்கிளை யோனைத் தாழ்ந்தெழீஇ
விண்கரி யவனொடும் விடைபெற் றேகினான்.

## தெளிவுரை

தெய்வயானையுடன் நிலைபெற்று வாழ்க என்று இந்திரன் ஐராவதம் என்னும் வெள்ளை யானையையும் முருகனுக்கு

அளித்து, அவ்விடம், மனத்தால் எண்ணுவதற்குரிய யானை முக னுக்கு இளையோனாகிய முருகனை வணங்கி எழுந்து விண்மேகம் போன்ற நிறமுடைய திருமாலுடன் விடைபெற்றுச் சென்றான்.

## விளக்கம்

பெண்கரியுடன் - தெய்வயானையுடன்
வெண்கரி - வெள்ளானை, ஐராவதம்
விசாகன் - முருகன்
அவண் - அவ்விடம்
எண்கரிமுகன் - மனத்தால் நினைப்பதற்குரிய யானைமுகன், விநாயகன்
இளையோன் - தம்பி, முருகன்
எழீஇ - எழுந்து
ஏகினான் - சென்றான்.

343. சயந்தரு மறுமுகன் றனக்கு வாசவன்
வயந்தர வளித்தவெண் மாதங் கத்தினை
நியந்தரத் தேகென நிகழ்த்த நின்றதால்
அயிந்திரத் திசைமுக மாகியின்னுமே

## தெளிவுரை

வெற்றியைத்தந்த ஆறுமுகனுக்கு இந்திரன், வெற்றி தரு தற்காக அளித்த வெள்ளையானையாகிய ஐராவதத்தைக் கட்டு மிடத்திற்குச் செல்க எனக் கூறக் கிழக்குத் திசையில் நின்றது; இன்னும்,

## விளக்கம்

சயம் - வெற்றி
வாசவன் - இந்திரன்
வயம் - வெற்றி

வெண்மாதங்கம் - வெள்ளையானை, ஐராவதம்
நியந்தரம் - கட்டும் இடம்
ஏகு - செல்க
அயிந்திரத்திசை - கிழக்குத்திசை

344. தேவரு முனிவருந் திக்குப் பாலரும்
பூவருந் திருவடி போற்றிச் சேயருள்
மாவரங் களைப்பெறீஇ மனங்க ளித்தெழுந்
தியாவருந் தத்தம திருக்கை யெய்தினார்.

## தெளிவுரை

தேவரும் முனிவரும் திக்குப் பாலரும் மலர்போன்ற திருவடிகளைப் போற்றி முருகன் அருள் செய்த பெரிய வரங்களைப் பெற்று உள்ளம் களிப்படைந்து எழுந்து எல்லோரும் தத்தம் இருப்பிடங்களுக்குச் சென்றடைந்தனர்.

## விளக்கம்

பூவருந்திருவடி - மலர் போன்னற திருவடி
சேய் - முருகன்
பெறீஇ - பெற்று.
எய்தினார் - அடைந்தார்கள்.

345. வின்முறை யரக்கரை வேறற் கிந்திரன்
பன்முறை தணிகையம் பதிய ணைந்துபின்
முன்முறைப் பூசனை முடித்து முன்னிய
நன்முறை வரம்பெறீஇ நயந்து போயினான்.

## தெளிவுரை

தனுர்வேதம் கற்ற அரக்கரை வெல்லுவதற்கு இந்திரன் பலமுறை தணிகையம்பதி அடைந்து, பிறகு, முன்நூல்களில்

கூறப்பெறும் பூசை முடித்துக் கருதிய நல்ல முறையில் வரம் பெற்று விரும்பிச் சென்றான்.

**விளக்கம்**

வில்முறை - தனுர்வேதம்
வேறற்கு - வெல்லுவதற்கு
அணைந்து - அடைந்து
முன்முறைப் பூசனை - முன்நூல்களில் கூறப்படும் பூசை
நயந்து - விரும்பி
போயினான் - சென்றான்.

## 13. திருமால் பூசித்துச் சக்கரம் பெற்ற அத்தியாயம்

(**கதைச் சுருக்கம்:-** திருத்தணிகாசலக் கடவுளைத் திருமால் பூசித்த வரலாற்றைச் சொல்லும்படி நாரதமுனிவர் பிரமதேவரை வேண்ட அவர் சொல்லலாயினார்.

தாரகாசுரனோடு திருமால் போரிடும்போது, அவன் அவரது சக்கராயுதத்தைக் கைக்கொண்டு தன் மார்பில் ஆபரணமாக அணிந்தனன்; முருகக்கடவுள் தாரகனை அழித்தபோது அவ்வாயுதத்தை எடுத்துத் தம் மார்பில் பதக்கமாக அணிந்தனர். அதனை உணர்ந்த திருமால் தணிகாசலம் அடைந்து, முருகக்கடவுள் கோயிலுக்கு மேற்கே ஒரு தீர்த்தத்தை அமைத்து அதில் நீராடி அதன் கரையில் இருந்து முருகக்கடவுளை நோக்கிப் பல காலம் தவம் செய்தார். அதனை அறிந்த முருகர் திருமால் முன் தோன்றினார்; திருமால் வணங்கித் துதிகள் பல கூறினார். முருகர், ''வேண்டிய வரம் யாது?'' என வினவத் திருமால் தம்

சக்கராயுதத்தைப்பெற வேண்டும் என்னும் விருப்பத்தைத் தெரிவித்தார். முருகப்பெருமான் அதனைத் தம் மார்பிலிருந்து எடுத்தளித்தார். திருமால் அதனைப் பெற்றுக் கொண்டு முருகக்கடவுளைப் போற்றி வணங்கித் தம் இருப்பிடம் சென்றடைந்தார்; முருகக்கடவுள் சக்கரத்தைத் தம் மார்பிலிருந்து எடுத்தமையால் அவ்விடத்தில் சிறிது பள்ளம் அன்று முதல் உள்ளது.

திருமால் தீர்த்தத்தில் நீராடினோர் நற்பேறு பெறுவர்.)

(கட்டளைக்கலித்துறை)

346. கல்லாரத் தாலருச் சித்தே வலாரி களிறுதவு
கல்லார மென்முலை யாடெய்வ யானையைக் காதலுடன்
கல்லார வெற்பற்குக் கல்யாணஞ் செய்த கதையுரைத்தாம்
கல்லா ரரவங் களுமகி ழேழிசைக் கான் முளையே.

## தெளிவுரை

கழுநீர் மலர்களால் அருச்சனை செய்து, இந்திரனுடைய ஐராவதம் என்னும் யானை தந்த மாணிக்கப்பதக்கமுடைய மென்மையான முலைகளையுடைய தெய்வயானையை அன்புடன் தணிகை மலைக்குரிய முருகனுக்குத் திருமணம் செய்த கதையைச் சொல்வோம். திருத்தணிகை மலையிலுள்ள பாம்புகளும் மூங்கில் காற்றின் ஏழிசையை விரும்பும்.

## விளக்கம்

கல்லாரத்தால் - கழு நீர்மலரால்
வலாரி - இந்திரன், வலன் என்னும் அசுரனைக் கொன்றவன்.
களிறு - ஐராவதம் என்னும் யானை
கல்ஆரம் - மாணிக்கப்பதக்கம்
கல்லார வெற்பன் - தணிகைமலைக்குரிய முருகன்

கல்யாணம் - திருமணம்
கான்முளை - மூங்கில் காற்று
கால் - காற்று
முளை - மூங்கில்

347. என்றான் விரிஞ்சனது கேட்டங் கெழுந்தி றைஞ்சி
நன்றாங்கல் லார கிரிமான்மிய நன்று நன்று
பொன்றாத நான்மறை புகனான்முக பூவை வண்ணன்
சென்றார்வ மோடு புரிபூசையுஞ் செப்பு கென்றான்.

## தெளிவுரை

என்று பிரமன் சொன்னான்; அங்கு அதனைக்கேட்டு அங்கு எழுந்து, வணங்கி நல்லதாகிய தணிகை மலையின் பெருமை நன்று! நன்று! அழிவில்லாத நான்கு மறைகளைக் கூறும் நான் முகனே! கிளிபோன்ற பச்சைநிறங்கொண்ட திருமால் ஆர்வ மோடு சென்று புரிந்த பூசையைப் பற்றியும் கூறுக என்றான்.

## விளக்கம்

விரிஞ்சன் - பிரமன்
மான்மியம் - மகாத்மியம், பெருமை
பொன்றாத - அழிவில்லாத
பூவை வண்ணன் - கிளிபோன்ற பச்சை நிறமுடையவன், திருமால்.

348. மதலாய் தணிகை வரைவேலனை மாய வன்முன்
இதமான பூசை செயுமேது வியம்பு துங்கேள்
நிதமேவு வஞ்ச னெனுந்தாரக நீசன் மீது
கதமேவு மான்முன் விடுத்தான்கதி ராழி தன்னை.

## தெளிவுரை

பிள்ளையே! தணிகைமலை வேல்முருகனைத் திருமால் முன்னர் இனிமையான பூசை செய்தற்குக் காரணம் சொல்வேம்; கேட்பாயாக! நாள்தோறும் பொருந்தும் வஞ்சகன் எனப்பெறும் தாரகன் என்னும் கயவன்மீது சினம்பொருந்திய திருமால், முன்னர்கதிர்பொருந்திய சக்கராயுதத்தைச் செலுத்தினாள்.

## விளக்கம்

மதலாய் - பிள்ளையே
வரை - மலை
மாயவன் - திருமால்
இதமான - இனிமையான
ஏது - காரணம்
இயம்புதும் - சொல்வோம்
நிதம் - நாள்தோறும்
கதம் - கோபம்
ஆழி - சக்கரப்படை
மேவும் - பொருந்தும்

349. கரியோன் விடுத்த கதிராழியைக் கையிற் பற்றி
அரியோன் கழுத்தி லணியாக வணிந்து கொண்டான்
பெரியோ னெனும் விண் டுவுமாழி பெறாது மாழ்கித்
தரியா னபகீர்த் தியையேந்தித் தளர்ந்து போனான்

## தெளிவுரை

திருமால் செலுத்திய கதிர்ஒளியுடைய சக்கராயுதத்தைக் கையால் பற்றிப் பகைவனானகிய தாரகன் தன் கழுத்தில் அணி

கலனாக அணிந்து கொண்டான். பெரியோன் எனப்பெறும் திரு மாலும் சக்கராயுதத்தைப் பெறாமல் மயங்கி, தாங்கமுடியாத பழியைச் சுமந்து, தளர்ச்சியடைந்தான்.

## விளக்கம்

கரியோன் - திருமால்
அரியோன் - பகைவன், இங்குத் தாரகன்
விண்டுவும் - திருமாலும்
ஆழி - சக்கராயுதம்
மாழ்கி - மயங்கி
தரியான் - தாங்கமாட்டான்
அபகீர்த்தி - பழி, கெட்டபெயர்.

350. அத்தா ரகனைக் குகனட்டரி யாழி வாங்கி
முத்தார மார்பி லணியாக முனம்பு னைந்தான்
மெத்தார்வ மோடுக் கிரவாழியை வேண்டி மாயன்
இத்தா ரணியிற் றணிகாசல மெய்தி னானால்.

## தெளிவுரை

அந்த தாரகனை முருகன் அழித்துத் திருமாலின் சக்கரா யுதத்தை எடுத்து முத்தாரம் உடைய தன் மார்பில் அணியாக முன்னர் அணிந்தனன். மிகுந்த ஆர்வமுடன் சினம்பொருந்திய சக்கரா யுதத்தை வேண்டித் திருமால் இவ்வுலகில் உள்ள தணிகை மலை யையடைந்தான்.

## விளக்கம்

அட்டு - அழித்து
அரி - திருமால்

மெத்தார்வம் - மிக்க ஆர்வம்
உக்கிர ஆழி - சினமுடைய சக்கராயுதம்
மாயன் - திருமால்
தாரணி - உலகம்
எய்தினான் - அடைந்தான்.

351. எய்தித் தணிகை வரைமீதி லிவர்ந்து மாயன்
கைதொட் டனனூ றினநீரிற் கசிந்து மூழ்கி
உய்தற் குரிய வனுட்டான முயற்றி யாரும்
செய்தற் கரிய தவம்பற்பகல் செய்திருந்தான்.

## தெளிவுரை

அடைந்து, தணிகைமலை மீது ஏறித் திருமால் கையால் தோண்டினன்; ஊறிய நீரில் ஊறி மூழ்கி, பிழைத்தற்குரிய கைக் கொள்ள வேண்டியவற்றை முயன்று யாரும் செய்வதற்கு அரிய தவம் பலநாட்கள் செய்து இருந்தனன்.

## விளக்கம்

இவர்ந்து - ஏறி
கைதொட்டனன் - கையால் தோண்டினான்
அனுட்டானம் - கைக்கொள்ளுதல்

*(ஆறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்)*

352. முருகனா லயத்தின் மேல்பான் முகுந்தனார் தொட்ட
தெண்ணீர்
மருவுபூஞ் சுனையை விண்டு தீர்த்தமா வகுப்பர் மண்ணோர்
பரவியே யதனிற் றோய்ந்தோர் பவமெலா மகன்று பூவிற்
றிரமதாய் வாழ்ந்து செவ்வே ளுலகினைச் சென்று சேர்வார்.

## தெளிவுரை

முருகனுடைய திருக்கோயிலின் மேல்பக்கம், திருமால் தோண்டிய தெளிந்தநீர் பொருந்திய மலர்ச் சுனையைத் திருமால் தீர்த்தமாக வகைப்படுத்துவர் உலகோர். வணங்கி அதனில் நீராடி னோர் பிறவி அனைத்தும் நீங்கி உலகில் நிலைத்து வாழ்ந்து முருகனுடைய உலகினைச் சென்று அடைவார்கள்.

## விளக்கம்

மேல்பால் - மேல்பக்கம்
முகுந்தனார் - திருமால்
தொட்ட - தோண்டிய
தெண்ணீர் - தெளிவானநீர்
மருவும் - பொருந்தும்
விண்டு தீர்த்தம் - விஷ்ணு தீர்த்தம், திருமால் தீர்த்தம்
பரவி - துதித்து, வணங்கி
தோய்ந்தோர் - நீராடினோர்.
பவம் - பிறவி
பூவில் - பூமியில், உலகில்
திரமதாய் - நிலையாக
செவ்வேள் - முருகன்.

353. அச்சுனைக் கரையின் மாய னைம்புல னடக்கி நாசி
உச்சியி லிருகண் வைத்தே யுளத்தறு முகனை யுன்னி
மெய்ச்சடக் கரத்தை நாவில் விதிப்படி செபித்து மேனி
குச்சென வசைவி லாமற் கொடுந்தவம் புரித னோக்கி.

## தெளிவுரை

அந்த சுனையின் கரையில் திருமால் ஐம்புலன்களை அடக்கி, மூக்கின் நுனியில் இரு கண்களை வைத்து, உள்ளத்தில்

ஆறுமுகனை நினைத்து, மெய்யான ஆறெழுத்தை நாவில் விதிப்படி அடிக்கடி ஒலித்து, மரக்கட்டையைப்போல் அசைவில்லாமல் கொடிய தவம் செய்தலைக் கருதி,

## விளக்கம்

நாசி - மூக்கு
உன்னி - நினைத்து
சடக்கரம் - ஷடாரஷரம், ஆறு எழுத்து
செபித்து - அடிக்கடி சொல்லி
குச்சு - நெய்தற் கருவிகளுள் ஒன்று, மரக்கட்டை.

354. அருள்செய மனத்திலுன்னி யறுமுகன் மயிலின் மீது
மருவுபைங் குவளைப் போது வலச்செவி மீது மல்க
விரவுகுங் குமங்கத் தூரி விரிகருப் புரச்செஞ் சாந்தம்
உரவிய புயத்திற் சார்த்தி யுயர்பரி மளங்கள் வீச

## தெளிவுரை

அருள் செய்யும்படி மனத்தில் நினைத்து, ஆறுமுகன் மயிலின்மீது பொருந்திய பசிய குவளை மலர்கள் வலச் செவியின் மீது பெருக, கலந்த குங்குமம், கத்தூரி, விரிந்த கருப்பூரச் செஞ்சாந்தம், வலிமையான தோள்களில் சார்த்தி, உயர்ந்த வாசனைப் பொருள்களை வீசி

## விளக்கம்

மருவு - பொருந்தும்
போது - மலர்
மல்க - நிறைய
விரவு - கலந்த

உரவிய - வன்மையுற்ற
புயம் - தோள்
பரிமளங்கள் - மிகுந்த நறுமணப்பொருள்கள்

355. திப்பிய மணிப்பொன் னாடை திப்பிய மாலை தாங்கி
ஒப்பிலாத் தெய்வ யானை யொளிர் தன பாரக் கோட்டில்
அப்பிய குங்கு மச்சே றளைந்தழ கெறிக்கு மார்பின்
முப்புரி நூலி னோடு முழுமணி மாலை தாழ.

## தெளிவுரை

தெய்வத்தன்மையுடைய அழகிய பொன்னாடை, தெய்வத் தன்மையுடைய மாலை தாங்கி, இணையில்லாத தெய்வயானையின் ஒளிபொருந்திய முலைகளின் பாரமாகிய கோட்டில் அப்பிய குங்குமச் சேற்றைக் கலந்து அழகு ஒளி வீசும் மார்பில் முப்புரி நூலுடன் முழுமணி மாலை தாழவும்,

## விளக்கம்

திப்பிய - தெய்வத்தன்மையான
அளைந்து - கலக்கி
எறிக்கும் - ஒளிவீசும்

356. ஒருபதத் திரவி கோடி யுதித்தெனத் திகழ மெய்தான்
குருமணி குயிற்றும் பைம்பொற் குண்டலஞ் செவியிலாட
அருநவ மணிக்க ணங்க ளடர்ந்தபொன் மகுடஞ் சென்னிக்
கிரிமிசைக் கோளு நாளுங் கெழுமிய தெனக்கு லாவ

## தெளிவுரை

ஒரேசமயத்தில் சூரியகோடி உதித்தது என்று விளங்க, உடலில், ஒளிபொருந்திய மணிகள் பதிக்கப்பெற்ற பசியபொன்

குண்டலங்கள் காதுகளில் ஆட, அரிய நவமணிக்கூட்டங்கள் அடர்ந்த பொன்முடி கொண்ட சென்னியையுடைய முருகனுடைய தணிகை மலையின் மீது கோள்களும் நாள்தோறும் சேர்ந்தன என்னும்படி மகிழ்ச்சி கொண்டாட,

## விளக்கம்

ஒருபதத்து - ஒரேசமயத்தில்
இரவி - சூரியன்
குருமணிகுயிற்றும் - ஒளி பொருந்திய மணிகள் பதிக்கப்பெறும்
மகுடம் - முடி, கிரீடம்
சென்னி - தலை
கோள் - நவக்கிரகங்கள்

357. தேவகன் னியர்பொற் காம்பிற் செறிந்தவெண் கவரி வீச
மேவுமா ணிக்கக் காம்பின் வெண்குடை சிலர்க விப்ப
ஓவியத் தொழிலின் மிக்க வுயர்கொடி சிலர்பிடிப்ப
நாவினிற் புகழும் பூத நாயகர் பணிந்து போற்ற

## தெளிவுரை

தேவகன்னிகையர்கள் பொன் காம்பில் செறிக்கப்பட்ட வெண்கவரியினால் வீச, பொருந்தும் மாணிக்கக் காம்பினை யுடைய வெண்குடையைச் சிலர் கவிப்பவும், சித்திர வேலைப் பாடு மிகுந்த உயர் கொடியைச் சிலர் பிடிக்கவும் நாவால் புகழும் பூதநாயகராகிய சிவபிரான் வணங்கிப் போற்றவும்,

## விளக்கம்

மேவும் - பொருந்தும்
ஓவியத்தொழில் - சித்திரவேலை
பூதநாயகர் - பூதங்களின் தலைவர், சிவபிரான்.

358. விசிட்டராஞ் சனக ராதி விளம்பும்யோ கியருஞ் சூழ
வசிட்டனே முதல வாக வருமுனி வரருங் கூடத்
திசைக்கண்வா ழிந்தி ராதி தேவரு மரம்பை முன்னா
இசைக்குமச் சரக ணங்கிளிருபுடை திரண்டு மொய்ப்ப

## தெளிவுரை

மேலானவர்களாகிய சனகர் முதலிய சொல்லப்பெறும் யோகியர்களும் சூழ வசிட்டனை முதன்மையாகக் கொண்டு வருகின்ற முனிவர்களும் கூடவும், எட்டுத்திசைகளிலும் வாழும் இந்திரன் முதலிய தேவர்களும் அரம்பையை முதன்மையாகக் கொண்டும் இசைக்கும் அப்ஸரமகளிர் இருபக்கங்களிலும் கூடி மொய்க்கவும்,

## விளக்கம்

விசிட்டர் - மேலானவர்
திசைக்கண் - எட்டுத்திசையிலும்
அரம்பைமுன்னா - ரம்பைக்குமுன்பாக
அச்சரகணங்கள் - அப்ஸரமகளிர் கூட்டங்கள்

359. ஐந்துதுந் துமியு மார்ப்ப வருந்தவஞ் செயுமு குந்தன்
சிந்தனை களிப்ப முன்னே சென்றனன் சிவன ளித்த
கந்தனப் பொழுது மாயன் கமலநேர் விழிதிறந்து
சுந்தர வதன மாறுந் துகளறு கருணை நோக்கும்.

## தெளிவுரை

ஐந்து துந்துபிகளும் ஒலிக்க அரிய தவஞ்செய்யும் திருமாலுக்கு முன்னர் மனக்களிப்புடன் சிவனளித்த முருகன் சென்றான்; அப்போது திருமால், தாமரை மலர் விழிகள் திறந்து அழகிய முகங்கள் ஆறும் குற்றமற்ற அருள் பார்வையும்,

## விளக்கம்

துந்துமி - துந்துபி
ஆர்ப்ப - ஒலிக்க
மாயன் - திருமால்
கமலநேர் - தாமரைமலருக்கு ஒப்பான
சுந்தரவதனம் ஆறும் - அழகிய முகங்கள் ஆறும்
கருணை நோக்கும் - அருள் பார்வையும்.

360. கோடிமன் மதரோர் பாங்கர்க் குழுமிய தெனச்சி றந்து
நீடிய வுருவுஞ் சாந்த நிலவிய நிலையுஞ் சத்தி
கூடிய கரமு மாழி குலவிய வுரமுந் தோகை
ஆடிய மயிலுங் கண்டா னருவினை பலவும் விண்டான்.

## தெளிவுரை

கோடி மன்மதர்கள் ஒருபக்கம் கூடினர் என்று சொல்லும் படிச் சிறந்து நீண்ட உருவும், அமைதி நிலவும் தன்மையும், வேல் தாங்கிய கையும், சக்கராயுதம் பதிந்த மார்பும், தோகைவிரித்தாடிய மயிலும் கண்டான்; தீவினைகள் பலவற்றையும் விட்டு வெளி வந்தான்.

## விளக்கம்

ஓபாங்கர் - ஒருபக்கம்
குழுமியது - கூடியது
நீடியஉருவும் - நீண்ட உருவும்
சாந்தம் - அமைதி, தயவு
சத்தி - வேல்
ஆழி - சக்கராயுதம்
உரம் - மார்பு
தோகை - கலாபம்
விண்டான் - வெளிவந்தான்.

361. கண்டக மகிழ்ந்து மாயோன் கண்கணீ ரருவி பாயத்
தண்டெனப் புவியின் மீது தனதுபஞ் சாங்கந் தோயத்
தெண்டனிட் டெழுந்து ரோமஞ் சிலிர்ப்பமெய் வியர்ப்பப் பின்னும்
மண்டுபே ரன்பி னாலே வழுத்தொடும் வணங்க லுற்றான்.

## தெளிவுரை

கண்டு மனம் மகிழ்ந்து, திருமால் தன் கண்களினின்றும் கண்ணீர் அருவிபாயவும் குச்சி என்னும்படி, தரையின்மீது தன்னுடைய ஐந்து உடல் உறுப்புக்களும் தோய வணங்கி, எழுந்து, மயிர்கூச்செறிய, உடல் வியர்வை அடைய, மேலும், மிக்க பேரன்பினால், துதியுடன் வணங்கலானான்.

## விளக்கம்

அகம் - மனம்
மாயோன் - திருமால்
கண்கணீர் - கண்களினின்றும் கண்ணீர்
தண்டு - குச்சி
பஞ்ச அங்கம் - ஐந்து உடல் உறுப்புக்கள்
தெண்டனிட்டு - வணங்கி
வழுத்து - துதி

*(எண்சீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்)*

362. சரணங்கந் தனுக்குச் சரணஞ்சே னானி
தனக்குநான் சரணஞ்சண் முகற்குச்
சரணநான் கார்த்தி கேயனுக் கொருநான்
சரணஞ்சுப் பிரமணி யனுக்குச்

சரணநான் கிரவுஞ் சத்தையட் டவற்குச்
சரணநான்வெகுசெயன் றனக்குச்
சரணநான் செகத்துக் கெலாங்குர வனுக்குச்
சரணநான் குமாரதே வனுக்கே.

## தெளிவுரை

கந்தனுக்கு அடைக்கலம்; சேனைத்தலைவனுக்கு அடைக் கலம்; நான் சண்முகனுக்கு அடைக்கலம்; கார்த்திகேயனுக்கு அடைக்கலம்; ஒப்பற்றநான் சுப்பிரமணியனுக்கு அடைக்கலம்; கிரவுஞ்ச மலையை அழித்தவனுக்கு நான் அடைக்கலம், மிகுந்த வெற்றியுடையவனுக்கு அடைக்கலம்; உலகங்கள் அனைத்துக் கும் தலைவனாகியவனுக்கு அடைக்கலம்; குமரக்கடவுளுக்கு நான் அடைக்கலம்.

## விளக்கம்

சரணம் - அடைக்கலம்
சேனானி - படைத்தலைவன், முருகன்
அட்டவன் - அழித்தவன்
வெகுசெயன் - மிகுந்த வெற்றியுடையவன்
செகம் - உலகம்
குரவன் - தலைவன், குரு.

363. சரணநான் குகனுக் கென்றடிக் கடிமா
றகும்பய பத்தியோ டுரைத்த
முரணறு துதியைக் கேட்டுள முருகி
முருகவேண் முகுந்தனை நோக்கி
வரமெது கருதி யருந்தவம் புரிந்தாய்
வழங்குது மனத்தது மொழிகென்
றருளொடும் புகலுந் திருமொழி தனைக்கேட்
டகமகிழ்ந் தச்சுத னுரைப்பான்.

## தெளிவுரை

குகனுக்கு நான் அடைக்கலம் என்று அடிக்கடி திருமால் பயபக்தியுடன் கூறிய மாறுபாடு இல்லாத துதியைக் கேட்டு உள்ளம் உருகி, முருகவேள் திருமாலைப் பார்த்து ''எந்த வரம் கருதி அரிய தவத்தைச் செய்தனை? வழங்குவோம்; மனத்தில் உள்ள தனைக் கூறுக!'' என்று அருளுடன் கூறிய அழகிய சொல்லைக் கேட்டு மனம் மகிழ்ந்து திருமால் உரைப்பானாயினன்.

## விளக்கம்

மால் - திருமால்
தகும்பயபத்தியோடு - தக்க பயபக்தியுடன்
முரண்அறு - மாறுபாடு இல்லாத
முகுந்தன் - திருமால்
அகம் - மனம்
அச்சுதன் - திருமால்

364. அணுவினுக் கணுவாய் மகத்தினு மகத்தா
யரும்பரந் தனக்குமேற் பரமாய்ப்
புணர்தரு மாயை யாயதிற் புணராப்
பொங்கொளி யாயுல கனைத்தும்
நணுகி வியாபி யாயகம் புறமாய்
நான்மறை யாலறி யொண்ணாத்
துணைவநின் பாத சேவையே யலது
சொல்லும்வர மெனக்குவே றுளதோ.

## தெளிவுரை

அணுவினுக்கு அணுவாகவும் பெரும்பொருளினும் பெரும் பொருளாய், அரிய மேலான கடவுளுக்கு மேலான கடவுளாய்,

புணரும் மாயசக்தியாய், அதில் புணராத மிகுந்த ஒளியாய், உல கங்கள் எல்லாவற்றையும் கிட்டி எங்கும் நிறைந்தவனாகி, அகமும் புறமும் ஆகி, நான்கு மறைகளால் அறிய முடியாத துணைவனே! உன்னுடைய திருவடித்தொண்டே யல்லாமல் சொல் லுதற்குரிய வரம் வேறு உள்ளதோ?

## விளக்கம்

மகத்து - பெரும்பொருள்
பரம் - மேலானவன்
மாயை - பொய், மாயாசத்தி
நணுகிய - கிட்டிய
வியாபி - எங்கும் நிறைந்தவன்
பாதசேவை - திருவடித்தொண்டு.

365. அழிவிலா வரங்கொள் சூரபன் மாவோ
டரிமுகன் றாரகன் முதலா
மொழியும்வா ளரக்கர் குழுவெலா முருக்கி
மூன்றுல கத்தையும் புரந்து
வழுவிலாச் சுவர்க்கந் தனிற்சிறை நீக்கி
வானவர் தமைக்குடி யேற்றிப்
பழியிலா வரசு நீமுன மளித்த
பான்மையால் வலாரிவாழ்ந் திருந்தான்.

## தெளிவுரை

அழிவற்ற வரம்பெற்ற சூரபன்மனோடு சிங்கமுகாசுரன், தாரகன் முதலிய சொல்லப் பெற்ற வாள்போல் கொடிய அரக்கர் கூட்டம் எல்லாவற்றையும் கொன்று மூன்று உலகங்களையும் பாதுகாத்துக் குற்றமற்ற சுவர்க்கத்தில் சிறை நீக்கித் தேவர் களைக் குடியேற்றிப் பழியில்லாத அரசு நீ வழங்கிய தன்மையால் இந்திரன் வாழ்ந்தனன்.

## விளக்கம்

அரிமுகன் - சிங்கமுகாசுரன்
வாள் அரக்கர் - வாள்போல் கொடிய அரக்கர்
முருக்கி - கொன்று
வழுவிலா - குற்றமில்லாத
முனம் - முன்பு
பான்மை - தன்மை
வலாரி - இந்திரன்

366. அன்னதா ரகன்மே னான்முனம் விடுத்த
வாழியங் கவற்கிடர் செயாமற்
சின்னமா னதுகண் டியானிரா யுதனாச்
சென்றென துலகடைந் திருந்தேன்
பின்னர்நீ யவனைத் தடிந்துநே மியினைப்
பேரணி யாயணிந் தனையால்
முன்னைவா னவரா லழிவிலா வசுரர்
மூவரை யெளிதினி லட்டோய்.

## தெளிவுரை

அத்தகைத் தாரகன்மீது நான் முன்னர் செலுத்திய சக்கரா யுதம் அவனுக்குத் துன்பம் செய்யாமல் சிறுமையடைந்தது கண்டு நான் ஆயுதம் அற்றவனாகச் சென்று எனது உலகை அடைந்து இருந்தேன். பிறகு நீ அவனைக் கொன்று சக்கராயுதத்தைப் பேரணி யாக அணிந்தனை; முன்னர் தேவர்களால் அழிவில்லாத அசுரர்கள் மூவரை எளிதில் அழித்தவனே!

## விளக்கம்

அன்ன - அத்தகைய
முனம் - முன்பு

ஆழி - சக்கராயுதம்
இடர் - துன்பம்
செயாமல் - செய்யாமல்
சின்னமானது - துண்டானது, சிறுமையுற்றது
நிராயுதன் - ஆயுதம் இல்லாதவன்
நேமி - சக்கராயுதம்
வானவர் - தேவர்கள்
அட்டோய் - அழித்தவனே. 'அசுரர் மூவர்' எனப் பட்டோர் சிங்கமுகன், சூரபன்பன், தாரகன் ஆகிய மூவர் ஆவர்.

367. பாலர்தம் விளையாட் டாகநீ யசுரர்
பலரையும் வருத்தமொன் றின்றி
ஞாலமீ தழித்த நின்பிர பாவ
நாயினே னவிற்றிடற் கெளிதோ
சீலமார் நேமி யின்மையா லரக்கர்
சிறிதுமென் றனைமதித் திலரால்
வேலுலாங் கரத்தா யெனதுசக் கரத்தை
விழைவொடுங் கொடுத்தரு ளென்றான்.

## தெளிவுரை

சிறுவர்களின் விளையாட்டாக நீ அரக்கர்கள் பலரையும் வருத்தம் ஒன்றும் இல்லாமல் உலகில் அழித்த உன்னுடைய பெருமையை நாயாகிய நான் சொல்வதற்கு எளிதோ? அழகு நிறைந்த சக்கராயுதம் இல்லாமையால், அரக்கர்கள் சிறிதும் என்னை மதிக்க வில்லை; வேல் உலாவுகின்ற கையனே! எனது சக்கராயுதத்தை விருப்புடன் கொடுத்தருள்க என்றான்.

## விளக்கம்

ஞாலம் - உலகம்
பிரபாவம் - பெருமை

நாயினேன் - நாயாகிய நான்
நவிற்றிடற்கு - சொல்வதற்கு
சீலமார் - வரலாறு நிறைந்த, அழகு நிறைந்த
விழைவொடும் - விருப்புடன்

368. நொந்திரந் திடுகோ விந்தன்வாண் முகத்தை
நோக்கியே பத்தவச் சலனாம்
கந்தனுந் தனது திருவுரம் பதிந்த
கதிரொளிப் பருதியை யகழ்ந்து
தந்தனன் கரத்தில் வாங்கியே திருமால்
சக்கர பாணிய னாகிச்
சிந்தனை களித்துத் துதித்தடி வணங்கிச்
சென்றனன் பாற்கட லடைந்தான்.

## தெளிவுரை

மனம் வருந்தி, வேண்டிய கோவிந்தனாகிய திருமாலின் ஒளிமுகத்தைப் பார்த்து அடியார்களிடம் விருப்பமுடைய முருகனும் தன்னுடைய அழகிய மார்பில் பதிந்த கதிரொளி பொருந்திய சக்கராயுதத்தை அகழ்ந்து அதனை அளித்தனன்; கையில் வாங்கித் திருமால் சக்கரபாணியன் ஆகி மனத்தில் களிப்படைந்து துதித்து வணங்கிச் சென்றான்; பாற்கடலை அடைந்தான்.

## விளக்கம்

நொந்து - மனம்வருந்தி
வாள்முகம் - ஒளிபொருந்திய முகம்
பத்தவச்சலன் - அடியார்களிடம் விருப்பமுடையவன்
வத்ஸம் - குழந்தை, கன்று
உரம் - மார்பு
பருதி - சக்கராயுதம்.

369. தாரகன் விடுப்பத் தனதுரம் பதிந்த
சக்கரந் தனையகழ்ந் தரிக்குச்
சீர்பெற வளித்த நாண்முத லாகச்
செருத்தணி காசலற் கின்னும்
மார்பகங் குழிந்த திருவடை யாளம்
வயங்கிய திவ்வுலகத்தில்
ஏர்பெற வதனைத் தெரிசனஞ் செய்தோ
ரிடரொழிந் தின்பவீ டடைவார்

## தெளிவுரை

தாரகன் விடத்தனது மார்பில் பதிந்த சக்கராயுதத்தை அகழ்ந்து திருமாலுக்குச் சிறப்புப்பெறுமாறு அளித்த நாள் முதற் கொண்டு திருத்தணிகையில் உள்ள முருகருக்கு இன்னும் மார்பகத்தில் குழிந்த (பள்ளமான) அடையாளம் இவ்வுலகில் ஒளி செய்கிறது. அழகுபெற அதனைத் தரிசனம் செய்தவர்கள் துன்பம் நீங்கிப் பேரின்ப விடுபேறு அடைவார்கள்.

### விளக்கம்

உரம் - மார்பு
அரி - திருமால்
சீர் - சிறப்பு
வயங்கியது - ஒளிசெய்கிறது
இடர் - துன்பம்
இன்பவீடு - பேரின்பத்திற்குரிய வீடுபேறு
ஏர் - அழகு.

370. விண்டுதான் விடைபெற் றேகிய பின்னர்
விண்ணவர் குழாத்தொடுஞ் செவ்வேள்
பண்டுதான் மருவுங் கோயிலுட் புகுந்தான்
பகருமம் மாயவன் றெட்ட

குண்டுநீர்ச் சுனையைத் தரிசனஞ் செய்தோர்
குடங்கையி லேந்தியுட் கொண்டோர்
மண்டுகா தலினாற் றோய்ந்துளோர் பலனை
மகிதலத்தியாவரே புகல்வார்.

## தெளிவுரை

திருமால் முருகனிடம் விடைபெற்றுச் சென்றபிறகு, தேவர்களின் கூட்டத்துடன் முருகன் பழமையில் தான் பொருந்தும் கோயிலினுள் புகுந்தனன்; சொல்லப்பெறும் அத்திருமால் தோண்டிய ஆழமான நீருடைய சுனையைத் தரிசனம் செய்தவர்கள், உள் ளங்கையில் ஏந்தி (அச்சுனை நீரை) உட்கொண்டோர் மிகுந்த பக்தி யில் தோய்ந்தவர்கள் ஆகியோர் அடையும் பலனை உலகில் யார் புகல முடியும்?

## விளக்கம்

விண்டு - திருமால்
குழாம் - கூட்டம்
செவ்வேள் - முருகன்
பண்டு - பழமையில்
மருவும் - பொருந்தும்
பகரும் - சொல்லப்பெறும்
மாயவன் - திருமால்
தொட்ட - தோண்டிய
குண்டு - ஆழம்
குடங்கை - உள்ளங்கை
மண்டு - நிறைந்த
காதல் - அன்பு, பக்தி
மகிதலம் - பூமி, உலகம்.

371. அயனமோ ரிரண்டில் விடுக்களோ ரிரண்டி
லடுத்தமா தப்பிறப் பதனிற்
சயமதா மமாவா சையிலுத யத்திற்
றண்புனல் படிந்தெதா சத்தி
நயமதாந் தான மச்சுனைக் கரையி
னான்மறை யவர்கரத் துதவும்
நியமமா மனித ரடைதரு பலனை
நீணிலத் தெவரறிந் துரைப்பார்.

## தெளிவுரை

அயனங்கள் இரண்டு எனப்பெறும் ஆடிமாதப்பிறப்பு, தைமாதப்பிறப்பு ஆகிய இரண்டில், சித்திரை விடு (விஷு), ஐப்பசி விடு ஆகிய இரண்டில், அடுத்த மாதப் பிறப்பில் வெற்றியாகும் அமாவாசையில், சூரியன் உதயமாகும்போது குளிர்ந்த நீரில் மூழ்கி, இயன்ற அளவு நன்மையாகும் கொடையினை அச்சுனைக் கரையில் நான்கு மறை ஓதும் மறையவர்கள் கைகளில் கொடுத்து உதவுகின்ற நேர்த்திக்கடன் மேற்கொள்ளும் மனிதர்கள் அடையும் பலனை நீண்ட உலகில் எவர் அறிந்து உரைப்பார்கள்?

## விளக்கம்

அயனம் இரண்டு - ஆடிமாசப்பிறப்பு, தைமாசப் பிறப்பு
விடுக்கள் - விஷுக்கள்; சித்திரை விஷு, ஐப்பசி விஷு என்பன.
சயம் - வெற்றி
உதயம் - தோற்றம்
எதாசத்தி - இயன்ற அளவு
நயம் - இன்பம், நன்மை
தானம் - கொடை
நியமம் - நேர்த்தி, முறைமை, தவம்

372. மெய்ம்மைசே ரன்பி னொடுமெவ ரேனும்
விண்டுதீர்த் தப்புனன் மூழ்கிச்
செம்மைசேர் நியதி புரிந்துவே லிறைவன்
றிருவள ராலயந் தன்னை
மும்மைசேர் பிரதக் கணம்புரி மனிதர்
மூவறு நாடெலாம் புரந்து
கொம்மைசேர் முலையார் போகமும் புணர்ந்து
குவலயத் தின்பெலா நுகர்ந்து.

## தெளிவுரை

மெய்யுணர்வு பொருந்திய அன்புடன் எவராயினும் திருமால் தீர்த்த நீரில் மூழ்கிச் செம்மையான நியமங்கள் செய்து, வேல் முருகன் செல்வம் வளரும் ஆலயத்தை மூன்றுமுறை வலம்வரும் மனிதர்கள் பதினெட்டு நாடுகளை எல்லாம் பாதுகாத்து, திரட்சிபொருந்திய முலைகளையுடைய பெண்களின் சிற்றின்பமும் அடையப்பெற்று உலக இன்பங்கள் எல்லாம் துய்த்து,

## விளக்கம்

விண்டு - திருமால்
புனல் - நீர்
வேல் இறைவன் - வேலைக் கொண்ட கடவுளாகிய முருகன்
திருவளர் - செல்வம் வளரும்
மும்மை - மூன்று
பிரதக்கணம் - வலம்வருதல்
கொம்மை - திரட்சி
குவலயம் - உலகம்; இன்பு - இன்பம்.

373. மறுமையிற் சுவர்க்கந் தனிற்கட வுளராய்
மகபதி வாழ்வினு மேலாய்
உறுபெரும் போக மநேகநா ளருந்தி
யும்பரும் போற்றிட வதன்பின்

மறுவறு செம்பொன் விமானத்தி லேறி
வாத்தியம் பற்பல முழங்கக்
குறைவில்பே ரின்ப மடியவர்க் குதவுங்
குமரவே ளுலகினை யடைவார்.

## தெளிவுரை

மறுபிறவியில் சுவர்க்கத்தில் கடவுளர்களாய், இந்திர வாழ்வை விட மேன்மையாய், மிக்க பெரும் இன்பங்கள் பல நாட்கள் துய்த்து, தேவர்களும் போற்ற, அதன் பிறகு குற்றமற்ற செம்பொன் விமானத்தில் ஏறிப் பற்பல வாத்தியங்கள் முழங்கக் குறைவில்லாத பேரின்பம் அடியார்களுக்கு உதவியருளும் முருக னுடைய உலகினை அடைவார்கள்.

## விளக்கம்

மறுமை - மறுபிறப்பு
மகபதி - இந்திரன்
உறு - பெரிய, மிகுந்த
போகம் - இன்பம்
உம்பர் - தேவர்கள்
மறுவறு - குற்றமற்ற

374. மாகமா தத்தி லுதயகா லத்தின்
மாயவன் சுனைதனின் மூழ்கித்
தோகைமா மயிலோன் றிருவடி நினைந்து
தூயமா மறையவர்க் கியன்ற
பாகமார் தானங் கொடுத்தவர் நினைந்த
படிபெரும் போகங்க ளுகர்ந்து
நாகர்வாழ்த் தெடுப்பத் திப்பிய வுருவாய்
நண்ணுவர் சண்முக னுலகம்

## தெளிவுரை

மாசிமாதத்தில் சூரியன் உதிக்கும் காலத்தில் திருமால் சுனையில் மூழ்கித் தோகை மாமயிலோன் ஆகிய முருகன் திரு வடிகளை நினைத்துத் தூய்மையான மாட்சிமையுடைய மறைய வர்களுக்கு இயன்ற பக்குவம் நிறைந்த தானங்கள் வழங்கிய வர்கள் நினைத்தவாறு பெரிய இன்பங்களைத் துய்த்துத் தேவர்கள் வாழ்த்து எடுக்கத் தெய்வீக வடிவினராக முருகனது உலகை அடைவர்.

## விளக்கம்

மாகமாதம் - மாசிமாதம்
உதயகாலம் - சூரியன் உதிக்கும் காலைநேரம்
மாயவன் - திருமால்
தோகை மாமயிலோன் - தோகை மாமயிலைக் கொண்ட முருகன்
பாகம் - பக்குவம்
நாகர் - தேவர்
திப்பியம் - தெய்வீகம், மேன்மை
நண்ணுவர் - அடைவர்.

375. காவியங் கிரியில் விண்டுமுன் றொட்ட
கற்சுனை தனிலெவ ரேனும்
பாவிகள் படியிற் பாவநா சமதாம்
பற்பல வியாதியால் வருந்தும்
நோவினர் மூழ்கி னோயெலாந் தீரு
நுவல்பெரும் புண்ணியம் வளரும்
மேவுமோர் துளிநீ ரருந்திடிற் கழுவாய்
விதிக்கரும் பாதக மொழியும்

## தெளிவுரை

கல்லாரமலையில், திருமால் முன்னர் தோண்டிய கல் சுனையில் எவராயினும் பாவம் செய்தவர்கள் படிந்து நீராடினால் பாவங்கள் அழியும்; பற்பல நோய்களால் வருந்தும் நோயாளிகள் மூழ்கினால் நோய்கள் அனைத்தும் நீங்கும்; சொல்லப்பெறும் பெரிய புண்ணியம் வளரும். பொருந்திய ஒரு துளி நீரை அருந்தினால் கழுவாயாக ஊழ்வினையால் போக்குதற்கு அரிய தீமைகள் ஒழியும்.

## விளக்கம்

காவியங்கிரி - கல்லாரகிரி, தணிகை மலை
விண்டு - திருமால்
தொட்ட - தோண்டிய
படியில் - படிந்து நீராடினால்
நாசம் - அழிவு
நுவல் - சொல்லப்பெறும்

376. அந்தநற் சுனையின் மூழ்கியோர் துளிநீ
ரருந்தியச் சுனைவட கரைவாழ்
தந்திமா முகவன் சன்னிதா னத்திற்
றாழ்புல னடக்கிவீற் றிருந்து
மந்திர செபங்க ளெவைசெபித் திடினு
மந்திர சித்தியாம் விரைவில்
புந்தியி னினைத்த பதமெலா மடைவர்
புகழ்பெறு வீணைமா முனியே.

## தெளிவுரை

புகழ்பெற்ற நாரதமாமுனியே! அந்த நல்ல சுனையில் மூழ்கி, ஒரு துளி நீரை அருந்தி அச்சுனையின் வடகரையில்

வீற்றிருக்கும் விநாயகரின் கருவறையில் வணங்கிப் புலன்களை அடக்கி வீற்றிருந்து மந்திர செபங்கள் எவற்றை உச்சரித்தாலும் மந்திரம் நிறைவேறி விரைவில் புத்தியில் நினைத்த இன்பங்கள் எல்லாவற்றையும் அடைவர்.

## விளக்கம்

தந்திமாமுகவன் - விநாயகர்
செபங்கள் - மந்திரம் உச்சரித்தல், மன்றாட்டு
சித்தியாம் - நிறைவேறும்
புந்தி - புத்தி,
பதம் - பதவி, இன்பம்
வீணை மாமுனி - நாரதர்

377. விளம்பிய விண்டு சுனையினீ ராடி
விசாகனை யன்பொடு நினைந்தோர்
உளந்தனி னினைத்த பலனெலா மடைவ
ருவந்ததில் விரதமாய்க் கதிரோர்
துளங்குறு மமயத் தனுதினம் படிந்து
சுப்பிர மணியனைக் கண்டோர்
அளந்தறி வரிய புவியினி லுதியா
ராறுமா முகனுல கடைவார்.

## தெளிவுரை

சொல்லப்பெறும் திருமால் சுனையில் நீராடி முருகனை அன்புடன் நினைத்தவர்கள், உள்ளத்தில் நினைத்த பலன்கள் எல்லாவற்றையும் அடைவார்கள். மகிழ்ந்து அதில் விரதத்துடன் சூரியனது எழுச்சி விளங்கும் சமயத்தில், நாள்தோறும் நீராடிச் சுப்பிரமணியனைக் கண்டவர்கள் உலகில் பிறவி எடுக்காமல், அளந்து அறியமுடியாத ஆறுமாமுகன் உலகினை அடைவார்கள்.

## விளக்கம்

விளம்பிய - சொல்லப்பெற்ற
விண்டு - திருமால்
விசாகன் - முருகன்
கதிர் ஏர்துளங்குறும் அமயத்து - சூரியனது எழுச்சி விளங்கும் சமயத்தில்

378. முகுந்தனார் சுனைநன் னீர்படி யாமன்
முருகவேட் கன்பரா காமல்
மிகுந்தகல் லார கிரிவசி யாமன்
மேதினி தனிலுழன் மனிதர்
உகந்துவா முடம்பு வீணுடம் பரியி
னுயர்சுனை படிந்துசெவ் வேளைப்
புகழ்ந்தடி பணிந்தோரிட்டகாமியஞ்சேர்
புத்தியு முத்தியும் பெறுவார்.

## தெளிவுரை

திருமால் சுனையின் நல்ல நீரில் மூழ்காமல், முருகனுக்கு அடியவர் ஆகாமல், புகழ்மிகுந்த தணிகைமலையில் வாழாமல், உலகில் அலைந்து வருந்துகின்ற மனிதர்கள் விரும்பி வாழும் உடல் வீண் உடல்; திருமாலின் உயர்ந்த சுனையில் மூழ்கி முருகனைப் புகழ்ந்து, திருவடிகளை வணங்கினோர் விரும்பிய பொருளை நினைத்தபடி பெறும் புத்தியையும் மோட்சத்தையும் பெறுவார்கள்.

## விளக்கம்

முகுந்தனார் - திருமால்
படியாமல் - மூழ்காமல்

கல்லாரகிரி - தணிகைமலை
மேதினி - உலகம்
உழல் - வருந்தும்
உகந்து - மகிழ்ந்து, விரும்பி
அரி - திருமால்.
இட்டகாமியம் - விரும்பிய பொருளை நினைத்தபடி பெறுதல்

379. மானதப் புதல்வ விண்டுதீர்த் தத்தின்
மகிமையை மீட்டுமீட் டுனக்கு
நானவிற் றுவதெ னந்தநீர் படித
லலங் கொள்கல் லாரமால் வரையை
ஊனுறப் பணிதல் கார்த்திகே யரையு
முழுவலன் பொடுதெரிசித்தல்
போனமுற் பிறப்பிற் றவஞ்செய்தோர்க் கல்லாற்
பொருந்துமோ பொருந்துறா வெவர்க்கும்

## தெளிவுரை

மனத்திலிருந்து தோன்றிய மகனே! திருமால் தீர்த்தத்தின் பெருமையை மீண்டும் மீண்டும் உனக்கு நான் சொல்வது ஏன்? அந்த நீரில் மூழ்குதல், நன்மை கொண்ட உயரிய தணிகை மலையை உடல் தரையில் தோயப்பணிதல், முருகரை ஏழுபிறவியிலும் தொடர்ந்த அன்புடன் தரிசனம் செய்தல் ஆகியன கடந்த முற்பிறவிகளில் தவம் செய்தவர்களுக்கு அல்லாமல், பொருந்துமோ? எவர்க்கும் பொருந்தாது.

## விளக்கம்

மானதப் புதல்வ - மனத்திலிருந்து தோன்றிய குமாரனே
மீட்டு - மீண்டும்
நவிற்றுவது என் - சொல்வது ஏன்.

ஊனுறப்பணிதல் - உடல் நிலத்தில் தோயும்படிப் பணிதல்
கார்த்திகேயர் - முருகர்
அவம் - பாவம்
பொருந்துறா - பொருந்தாது
உழுவலன்பு - ஏழுபிறப்பும் தொடர்ந்த அன்பு.

(கலிவிருத்தம்)

380. அரிபு ரந்தர னண்டர்க ளாதியோர்
பரவு லோக குருகிரி வைபவம்
விரவ வென்றும் விளங்குஞ் சடானனர்
மருவி மன்பதை வந்திக்க வாழ்வரே.

## தெளிவுரை

திருமால், இந்திரன், தேவர்கள் முதலியோர் வணங்கும் உலக குருவாகிய முருகனுடைய தணிகைமலையின் வரலாறு கலக்க என்றும் விளங்கும் முருகர் பொருந்தி மக்கள் கூட்டத்தின் புகழும் படி வாழ்வார்கள்.

## விளக்கம்

அரி - திருமால்
புரந்தரன் - இந்திரன்
அண்டர்கள் - தேவர்கள்
ஆதியோர் - முதலியோர்
பரவு லோக குருகிரி வைபவம் - வணங்கற்குரிய உலககுருவாகிய முருகனுடைய தணிகை மலையின் வரலாறு.
விரவ - கலக்க
சடானனர் - முருகர்
மருவி - பொருந்தி

# 14. சேடன் பூசித்துச் சற்சரம் நீங்கின அத்தியாயம்

*(கதைச்சுருக்கம் :-* மந்தரமலையை மத்தாகவும் ஆதிசேடனைக் கயிறாகவும் கொண்டு திருமால் முதலியோர் பாற்கடலைக் கடைந்தனர்; அப்போது மந்தரமலைப் பிளப்பில் ஆதிசேடன் சிக்கினான்; இழுத்தபோது தோல் சுரசுரப்பை அடைந்தது; வருந்திய ஆதிசேடன் திருமாலை வணங்கி, ''எனது சுரசுரப்பு நீங்கிப் பூமியைச் சுமக்கும் வன்மையைப் பெற ஓர் உபாயம் கூற வேண்டும்'' என்று வேண்டினான். ''தணிகாசலத்திற்குச் சென்று தவம்புரியின் முருகப்பெருமான் விருப்பத்தை நிறைவேற்றுவார்'' என்று திருமால் கூறினார்.

ஆதிசேடன் தணிகாசலம் சென்று முருகப் பெருமானைத் தரிசித்து வணங்கி அங்குத்தங்கினன்; மறுநாள் விஷ்ணு தீர்த்தத்தில் நீராடி, அத்தீர்த்த்திற்கு மேல் புறத்தில் ஒரு தீர்த்தத்தை உண்டாக்கி அதில் நீராடி அதன் கரையில் தவம் செய்தான். அத்தவத்திற்கு மகிழ்ந்த தணிகாசலக்கடவுள் அவன் முன் தோன்றி, அவன் குறையைக்கேட்டு, அவன் உடல் முழுவதனையும் தம்திருக்கரத்தால் தடவவே சுரசுரப்பு நீங்கப் பெற்றுப் பழைய வலிமையைப் பெற்றான். மகிழ்ந்து முருகனைப் போற்றிப் பழையபடி ஆதிசேடன் உலகைத் தாங்கலானான்.)

*(கலி விருத்தம்)*

381. தொண்டு பூண்டு சுனையொன்றகழ்ந்துமுன்
விண்டு பூசித்த மெய்க்கதை விண்டனம்
பண்டு சேடன் பரிந்தருச் சித்ததும்
ஒண்ட வாவிங் குரைக்குதுங் கேட்டியால்

## தெளிவுரை

ஒளிபொருந்திய தவம் உடையவனே! அடிமையாகச் சுனை ஒன்றனைத் தோண்டி, முன்னர் திருமால் பூசனை செய்த உண்மைக் கதையை வெளிப்படுத்தினோம். பழமையில் ஆதிசேடன் அன்போடு அருச்சனை செய்ததும், இங்குச் சொல்வோம்; கேட்பாயாக!

## விளக்கம்

தொண்டு பூண்டு - அடிமை மேற்கொண்டு
அகழ்ந்து - தோண்டி
விண்டு - திருமால்
பூசித்த - பூசனை செய்த
மெய்க்கதை - உண்மையான கதை
விண்டனம் - வெளிப்படுத்தினோம்
சேடன் - ஆதிசேடன்

382. இந்த மாநிலத் தியாவர்க ளாயினும்
சிந்தை யாசையிற் சேட னருச்சனை
கந்தர் பாலியற் றுங்கதை கேட்பரேல்
நந்து தீவினை தீர்ந்தின்ப நண்ணுவார்

## தெளிவுரை

இந்த உலகில் எவராயினும் மனத்தில் தோன்றிய ஆசையால் ஆதிசேடன் முருகருக்கு அருச்சனை செய்த கதையைக் கேட்பார் களாயின் வளரும் தீவினைகள் நீங்கி இன்பம் அடைவார்கள்.

## விளக்கம்

மாநிலம் - உலகம்
சிந்தை - மனம்
நந்து - பெருகிய, வளரும்
சேடன் - ஆதிசேடன்
நண்ணுவார் - அடைவார்கள்.

383. பூரு வத்திற் புரந்தரன் வானவர்
யாரு மச்சுதன் பாலடைந் தேத்தியே
பார டுத்த பயோததி யைக்கடைந்
தோரு நல்லமிர் துண்குதும் யாமெனா

## தெளிவுரை

முன்பொரு காலத்தில் இந்திரன், தேவர்கள் யாவரும் திருமாலிடம் அடைந்து, வணங்கி, உலகினை அடுத்த பாற்கடலைக் கடைந்து நல்லதோர் அமிர்தம் யாம் உண்போம் என்று கூறி,

## விளக்கம்

பூருவம் - முன்னொரு காலத்தில்
புரந்தரன் - இந்திரன்
வானவர் - தேவர்கள்
அச்சுதன் - திருமால்
ஏத்தி - வணங்கி
பார் - உலகம்
பயோததி - பாற்கடல்
உண்குதும் - உண்போம்.

384. ஓத மாய னுவந்தவ ரோடெழீஇத்
தீதில் பாற்கடற் றீரத்திற் சென்றுமத்
தீதெ னாமந் தரத்தை யிருத்தியப்
போது தாம்பெனப் பூட்டினன் சேடனை.

## தெளிவுரை

சொல்ல, திருமால் மகிழ்ந்து அவர்களுடன் எழுந்து, தீமை இல்லாத பாற்கடலின் கரைக்குச் சென்று, இது மத்து என்று கூறி மந்தர மலையை நிலைநிறுத்தி, அப்போது கயிறு என்று ஆதிசேடனைப் பூட்டினான்.

## விளக்கம்

ஓத - சொல்ல
மாயன் - திருமால்
எழீஇ - எழுந்து
தீதுஇல் - தீமை இல்லாத
தீரம் - கரை
மத்துஈது எனா - மத்துஇதுதான் என்று
மந்தரம் - மந்தரமலை
தாம்பு - தாம்புக்கயிறு.

385. பூட்டி யேகடை போதினின் மந்தரக்
கோட்டி னோங்குறு கூர்ங்கற் பிளப்பினில்
மாட்டி யீர்ப்ப வகிர்பட் டுரிஞ்சியே
சூட்ட ராவிறைத் தோல்பிணர் பட்டதே.

## தெளிவுரை

பூட்டிக் கடையும்போது, மந்தரமலையின் உயர்ந்த கூர்மையான கல்லின் பிளவில் மாட்டி இழுக்கவும் பிளவுபட்டு

உராயந்து ஆதிசேடனாகிய பாம்புகளின் தலைவருடைய உச்சிக் கொண்டைத் தோல் சுரசுரப்பை அடைந்தது.

## விளக்கம்

கடைபோதினில் - கடையும்போது
மந்தரக்கோடு - மந்தரமலை
ஓங்குறு கூர்ங்கல் - ஓங்கிய கூர்மையான கல்
ஈர்ப்ப - இழுக்க
வகிர்பட்டு - பிளவுபட்டு
உரிஞ்சி - உராய்ந்து
சூட்டு - பாம்பின் உச்சிக் கொண்டை
அரா இறை - பாம்பின் தலைவனாகிய ஆதிசேடன்
பிணர்பட்டது - சுரசுரப்பை அடைந்தது.

(வேறு)

386. பிணர்ப்படு மனந்தனும் பெரிதும் மாழ்கியே
உணர்வழிந் துளவலி யொடுங்கி நாடொறும்
புணர்தரு வியாதியாற் பூமி தங்கலா
திணரெரி தோய்ந்தென விடுக்க ணெய்தினான்.

## தெளிவுரை

சுரசுரப்படைந்த ஆதிசேடனும் பெரிதும் வருந்தி, அறிவு அழிந்து, ஊக்கத்தின் வலிமை சோர்ந்து, நாள்தோறும் சேர்ந்த நோயினால், உலகில் தங்க முடியாது பெருகிய தீ தோய்ந்தது என்னும்படி, துன்பம் அடைந்தான்.

## விளக்கம்

பிணர்படும் - சுரசுரப்படைந்த
மாழ்கி - வருந்தி
உளவலி ஒடுங்கி - ஊக்கத்தின் வலிமை தளர்ந்து.
இணர் - பலசுடர்
எரி - தீ
இடுக்கண் - துன்பம்

387. சற்சரை வடிவொடுஞ் சழங்கு சேடன்றான்
அற்பொடு துயிலரி யடியைப் போற்றிநான்
முற்படு துயரிது மொழிவ லென்றிணிக்
கற்செறி சிரமிசைக் கரங்கள் கூப்பியே.

## தெளிவுரை

திணிக்கப்பட்ட கற்கள் செறிந்த தலைமீது கைகள் கூப்பிச் சருச்சரை வடிவோடும் வருந்தும் ஆதிசேடன், அன்போடு, உறங்கும் திருமாலின் திருவடிகளைப் போற்றி, நான் அடைந்த இத்துயரத்தைச் சொல்வேன் என்று,

## விளக்கம்

சற்சரை வடிவு - சுரசுரப்படைந்த வடிவம்
சழங்கும் - வருந்தும்
அற்பொடு - அன்போடு
துயில் அரி - உறங்கும் திருமால்
மொழிவல் - சொல்வேன்.

388. அனந்தனம் மாயவ னடிவ ணங்கியே
தனந்தனி யாயொளிர் சச்சி தானந்த
இனந்தரு சகத்தினுக் கிறைவ யாவையும்
முனந்தரு முகுந்தவென் மொழியைக் கேட்டியால்.

## தெளிவுரை

ஆதிசேடன், திருமாலின் திருவடிகளை வணங்கித் தன்னந் தனியாய் ஒளிரும் சச்சிதானந்த உயிரினங்களைக் கொண்ட உலகினுக்கு இறைவனே! எல்லாவற்றையும் முன்னதாகத் தந்தருளிய திருமாலே! என் சொல்லைக் கேட்பாயாக!

## விளக்கம்

அனந்தன் - ஆதிசேடன்
மாயவன் - திருமால்
தனந்தனி - தன்னந்தனி, மிக்கதனிமை
இனம் - கூட்டம்
முனந்தரு முகுந்த - முதன்மையாகத் தந்த முகுந்தனே
கேட்டி - கேட்பாயாக.

389. பயோததி கருடணம் பண்ண மந்தரத்
தயாவறு தாம்பென வாத்து வானுளோர்
எயாதிரு கரத்தினு மீர்ப்பத் தேய்ந்துடல்
வியாதியா லுளமிக மெலிந்து ளேனரோ.

## தெளிவுரை

பாற்கடலில் இழுக்கவும் மந்தரமலையின் வருத்தம் நீங்கிய கயிறு எனக் கட்டித் தேவர்கள் இளைக்காமல் இருகைகளாலும் இழுக்க உடல் தேய்ந்து நோயால் உள்ளம் மிகவும் மெலிந்துள்ளேன்.

## விளக்கம்

பயோததி - பாற்கடல்
கருடணம்பண்ண - இழுக்கவும்
அயாவறுதாம்பு - என் வருத்தம் நீங்கிய கயிறு அன
ஆத்து - கட்டி
எயாது - எய்யாது, இளையாமல்
ஈர்ப்ப - இழுக்க
உளம் - உள்ளம், மனம்

390 அலமரக் கடைதொறு மலையுமந்தர
மலையினிற் கூர்ங்கலென் வடிவிற் றாக்கலால்
உலைவுறு சற்சர வுருவ மாயினேன்
நிலமுறு சுமையினி நின்று தாங்கலேன்.

## தெளிவுரை

சுழலும்படிக் கடையுந்தோறும் சுழலும் மந்தரமலையின் கூரியகல் என் உடலில் தாக்கியதனால் அழிவடைந்து சரசரப்பான வடிவம் அடைந்தேன். உலகத்தின் சுமையை இனிமேல் நின்று தாங்கமாட்டேன்.

## விளக்கம்

அலமரக்கடை தொறும் - சுழலும்படிக்கடையுந் தோறும்
கூர்ங்கல் - கூரிய கல்
என் வடிவில் - உன் உடலில்
உலைவு - கெடுதி, அலைவு, அழிவு
சர்சர உருவம் - சரசரப்பான வடிவம்
நிலமுறு சுமை - உலகின் சுமை

391. ஆதலிற் சற்சர மனைத்து நீங்கியிப்
பூதலத் தினைமுடி பொறுக்கும் வன்மையே
நாதவென் றனக்குற நல்லு பாயநீ
ஒதென வறிதுயி லுணர்ந்த மாயவன்.

## தெளிவுரை

ஆதலால், சரசரப்பு அனைத்தும் நீங்கி இவ்வுலகினைத் தலைசுமக்கும் வலிமை எனக்கு ஏற்படத் தக்க நல்ல ஆலோசனை நீ சொல்லுக!'' என்று கூறவும், அறிதுயிலில் உணர்ந்த திருமால்,

## விளக்கம்

சற்சரம் - சரசரப்பு
பூதலம் - உலகம்
வன்மை - வலிமை
நாத - தலைவனே
என்றனக்கு - எனக்கு
உபாயம் - தந்திரம், சூழ்ச்சி, வகை
ஓது - கூறுக

392. ஒருபுற மாகவொஞ் சரித்துப் பூமிசை
ஒருமுழங் கையினை யூன்றிச் சற்றுமேல்
ஒருதலை நிமிர்த்தகங் காத்தினூடுவைத்
தொருபணி யிறை முக முவந்து நோக்கியே

## தெளிவுரை

ஒரு பக்கமாக ஒருக்கணித்து உலகின் மீது ஒரு முழங் கையை ஊன்றிச் சற்று மேலே ஒரு தலையை நிமிர்த்தி உள்ளங்

கையில் வைத்து ஒப்பற்ற பாம்புகளின் கடவுள் (அரசன்) முகமகிழ்ச்சியுடன் கண்டு,

## விளக்கம்

ஒஞ்சரித்து - ஒருக்கணித்து
பூமிசை - உலகின்மீது
நிமிர்த்து - நிமிர்த்தி
பணி இறை - ஆதிசேடன்

393. வடிவுற சற்சர மாறி யம்புவி
முடிமிசைச் சுமந்திடு மொய்ம்பு நின்றனக்
கொடிவிலா துற்றிடு முபாய நானினி
நொடிகுவன் கேண்மதி நுனித்த கேள்வியாய்

## தெளிவுரை

உடலில்தோன்றிய சற்சரம் மாறி அழகிய உலகினை முடிமீது சுமக்கும் வலிமையை உனக்கு அறாமல் அடைந்திடும் சூழ்ச்சியை நான் இனிச் சொல்வேன்; நுட்பான கேள்வியறிவினை உடைய வனே! கேட்பாயாக!

## விளக்கம்

மிசை - மேலே
மொய்ம்பு - வலிமை
நின்றனக்கு - நினக்கு, உனக்கு

394. தாரணி தனிலறந் தழைத்த காஞ்சியின்
சீரணி யுத்தர திசையி னெல்லைதான்
ஏரணி யோசனை யிரண்டிற் சீபரி
பூரண நகரெனப் பொலியு மோர் தலம்.

## தெளிவுரை

உலகில் அறச்செயல்கள் தழைத்த காஞ்சிமாநகரின் சிறப்பை அணிந்த வடக்குத் திசையின் எல்லைதான், எழுச்சி யணிந்த இரண்டு யோசனைத் தொலைவில், திருத்தணிகை நகர் என்று அழகிய தலம் ஒன்று விளங்குகிறது.

## விளக்கம்

தாரணி - உலகம்
சீரணி - சிறப்பையணிந்த
உத்தரதிசை - வடக்குத் திசை
ஏர்அணி - எழுச்சியணிந்த, அழகு அணிந்த
சீபரிபூரண நகர் - திருத்தணிகை
சீ - ஸ்ரீ
பொலியும் - அழகுடன் விளங்கும்

'அறந்தழைத்த காஞ்சி' என்னும் தொடர், உமாதேவியார் முப்பத்திரண்டு அறங்களும் செய்தருளதற்கு இடமாக இருந் தமையைக் கொண்டு அமைந்துள்ளது.

395. மங்கல சுபகர மருவு மாந்தர்கள்
தங்குல வொழுக்கமுந் தானி யங்களும்
பொங்குறு நிதிகளும் பொலிந்து நாடொறும்
எங்கள்வீ ரேசனா லயமு மேய்ந்ததால்.

## தெளிவுரை

சிறப்பான ஈகைச் செயல்கள் பொருந்திய மக்கள் தங்கள் குடிக்குரிய ஒழுக்கமும் தானியங்களும் பெருகுகின்ற செல்வங்களும் அழகுடன் விளங்கி நாள்தோறும் எங்களுடைய வீரேசர் ஆலயம் அமைந்தது.

## விளக்கம்

மங்கலம் - சிறப்பு

சுபகரம் - ஈகை

மருவும் - பொருந்திய

மாந்தர்கள் - மக்கள்

பொலிதல் - அழகுடன் விளங்குதல்

வீரேசன் - வீர ஈசன்.

ஏய்ந்தது - அமைந்தது, பொருந்தியது

396. அன்னமா நகரணி மைக்கண் மேற்றிசை
முன்னைவா னவர்குழா முனிவர் சித்தர்கள்
துன்னும்யோ கியரெலாந் துதித்துப் போற்றிட
மன்னிவாழ்ந் தொளிர்தணி கைப்பொருப்பரோ.

## தெளிவுரை

அத்தகைய மாநகரின் அருகில் மேற்குத் திசையில், முன்னர் தேவர்கூட்டங்கள், முனிவர்கள், சித்தர்கள், நெருங்கும் யோகியர்கள் ஆகிய அனைவரும் வணங்கிப் போற்ற நிலைத்து வாழ்ந்து ஒளியுடன் விளங்கும் உயர்ந்த திருத்தணிகை மலை.

## விளக்கம்

அணிமை - அருகில்

குழாம் - கூட்டம்

துன்னும் - நெருங்கும்

மன்னி - நிலைபெற்று

கல்லார மால்வரை - உயர்ந்த தணிகைமலை

397. அச்சயி லத்தறு முகவ னார்வமோ

எச்சயி லத்திருப் பினும்வெங் கோபம்

பொச்சையிற் றிணிதலிற் பொருந்து மெண்மடங்

கிச்சையி லனுதின மிருக்கு மென்பவே.

## தெளிவுரை

அம்மலைக்குரிய ஆறுமுகன் எந்த மலையில் இருப்பினும், கொடிய சினம், அம்மலையில் தணிந்ததனால், பொருந்துகின்ற எட்டு மடங்கு ஆசையில் நாள்தோறும் இருக்கும் என்பார்கள்.

## விளக்கம்

சயிலம் - மலை

வெங்கோபம் - கொடிய சினம்

பொச்சையில் - மலையில்

இச்சை - ஆசை, விருப்பம்

அனுதினம் - எல்லா நாட்களிலும்

(கலிநிலைத்துறை)

398. உலக னைத்தையுங் காக்கவு முறுநர் தம் வியாதி
பலவு நீக்கவும் பன்னிரு விழிகள்பன் னிருதோள்
குலவு மூவிரு முகத்தொடுங் குமரவே ளென்றும்
நிலவு மவ்வரை யடைந்துநீ நெடுந்தவம் புரிதி

## தெளிவுரை

உலகங்கள் எல்லாவற்றையும் காப்பாற்றவும், அங்கு அடைபவர்களின் நோய்கள் பலவற்றை நீக்கவும், பன்னிரண்டு கண்கள், பன்னிரண்டு தோள்கள். குலாவுகின்ற ஆறு முகங்களுடனும் குமரவேள் என்றும் விளங்கும் அம்மலையை அடைந்து நீ நீண்ட தவம் செய்க!

## விளக்கம்

உறுநர் - அடைபவர்கள்
வியாதி - நோய்
நிலவும் - விளங்கும்
வரை - மலை.
நெடுந்தவம் - நீண்டதவம்.

399. முருக னின்னெதிர் தோன்நீ முன்னிய வனைத்தும்
தருவ னின்னுடற் சற்சர வியாதியுந் தணப்பை
இருநி லத்தினைச் சுமந்திடு மெறுழ்வலி பெறுவை
விரைவி னேகுதி யென்னலு மிகமகிழ்ந் தனந்தன்.

## தெளிவுரை

''முருகன் உன் எதிரில் தோன்றி, நீ எண்ணிய எல்லாவற்றையும் தருவான்; உன்னுடைய உடலில் உள்ள சற்சர நோயும் நீங்கப்பெறுவாய்; பெரிய உலகத்தினைச் சுமத்தற்குரிய மிக்க

வலிமை பெறுவாய்; விரைவில் செல்வாயாக!'' என்று கூறவும் ஆதிசேடன் மிகவும் மகிழ்ந்து,

## விளக்கம்

முன்னிய - கருதிய , எண்ணிய
தணப்பை - நீங்குவாய்
இருநிலம் - பெரிய உலகம்
எறுழ்வலி - மிக்க வலிமை
ஏகுதி - செல்வாயாக
அனந்தன் - ஆதிசேடன்.

400. அச்சு தன்பதம் பணிந்தவ னருள்விடை பெற்றுக்
கச்சி யின்வட பாற்றணி காசலங் கண்டு
நச்சி தஞ்செய்சீ பூரண நகரினி லெய்தி
உச்சி தம்பெறு சினகரத் துற்றுவீ ரேசர்

## தெளிவுரை

திருமாலின் திருவடிகளை வணங்கி, அவன் அருளையும் விடையையும் பெற்றுக் காஞ்சிமாநகரின் வடக்குப் பக்கம் தணிகை மலையைக் கண்டு, யாவரும் விரும்பும் இன்பம் அளிக்கும் தணிகை நகரை அடைந்து, உயர்வு பெறும் வீரட்டானேசுவரர் திருக்கோயிலை அடைந்து,

## விளக்கம்

அச்சுதன் - திருமால்
பதம் - திருவடிகள்
அருள்விடை - அருளையும்விடையையும்
கச்சி - காஞ்சி மாநகரம்

நச்சு இதம் - யாவரும் விரும்பும் இன்பம்

சீபூரண நகர் - தணிகை நகர்.

உச்சிதம் - உயர்வு

சினகரம் - கோயில்

வீரேசர் - வீரட்டானேசுவரர்.

401. பாத தாமரை வணங்கியே பன்முறை புழிச்சி
சீத வார்புனற் குமாரதீர்த் தத்திடைத் திளைத்துப்
பூதி கண்டிகை புனைந்தனுட் டானமும் புரிந்து
வேதி யன்சுனைப் புனல்சிர மிசைப் புரோக்கணித்தே.

## தெளிவுரை

திருவடித்தாமரை மலர்களை வணங்கிப் பலமுறை துதித்து, குளிர்ந்த நீண்ட நீரையுடைய குமாரதீர்த்தத்தில் நீராடி மகிழ்ந்து, திருநீறு, உத்திராட்சமாலை ஆகியவை அணிந்து, கைக்கொள்ளுதற்குரிய சடங்குகள் செய்து, பிரமதீர்த்த நீரைத் தலையின் மீது தெளித்துக் கொண்டு,

## விளக்கம்

பாததாமரை - திருவடிகளாகிய தாமரை மலர்கள்

புழிச்சி - துதித்து

சீதவார்புனல் - குளிர்ந்த நீண்ட நீர்

திளைத்து - குளித்து

பூதி - திருநீறு

கண்டிகை - உருத்திராட்சமாலை

புனைந்து - அணிந்து

அனுட்டானம் - கைக்கொள் வேண்டிய சடங்குகள்

வேதியன் சுனை - பிரமதீர்த்தம்

புனல் - நீர், தீர்த்தம்

மிசை - மேலே

புரோக்கணித்து - தீர்த்தத்தை உடலின்மேல் தெளித்துக் கொண்டு

402. நீல மால்வரை மீதுபோய் நின்றுசே ணளவும்
கோல மாமணிக் கோபுரம் பொன்மதில் வயிரக்
காலி னோங்குறு மண்டபுங் கதிர்மணிப் பச்சைச்
சாலும் பித்திகை சந்திர காந்தவே திகைகள்

## தெளிவுரை

தணிகை மலையின் மீது சென்று, நின்ற வானுலகைத் தொடும் அழகிய மாமணிக்கோபுரம், பொன்மதில், வைரக் கால்களைக் கொண்டு உயர்ந்த மண்டபம், ஒளி பொருந்திய அழகிய மரகதமணிகள் மிகுந்த சுவர்கள், நிலவொளி பொருந்திய திண்ணைகள்,

## விளக்கம்

நீலமால்வரை - தணிகைமலை

பச்சை - மரகதமணி

சேண் - வானுலகம்

பித்திகை - சுவர்

வேதிகைகள் - திண்ணைகள்

403. தரள மாலிகை தயங்குகோ மேதகக் கொடுங்கை
கரள நாகங்க ளுமிழ்மணிக் கதிருமிழ் கும்பம்
விரவு நீள்கருப் பக்கிரு கங்கண்மே வுறுசீர்ப்
அரிவை சூழ்திரு வாலயப் பொலிவினைக் கண்டான்

## தெளிவுரை

முத்துமாலை, ஒளிவீசும் கோமேதகம், கொடிய விட நாகங்கள் உமிழும் மாணிக்கம், கதிரொளி உமிழும் விக்கிரகம் பொருந்திய நீண்ட கருவறை ஆகியன பொருந்திய சிறந்த மதில் சூழ்ந்துள்ள அழகிய ஆலயத்தின் அழகைக் கண்டான்.

## விளக்கம்

தரள மாலிகை - முத்து மாலை
மணி - மாணிக்கம்
தயங்கு கோமேதகம் - ஒளி செய்யும் கோமேதகம்
கரள நாகங்கள் - விட நாகங்கள்
கும்பம் விரவும் - விக்கிரகம் அமைக்கப்பெற்றுப் பொருந்திய
கருப்பக்கிருகம் - கருவறை
மாலிகை - கழுத்தணி
மேவுறு - சேர்ந்துள்ள
புரிசை - திருமதில்
பொலிவு - அழகு
கொடுங்கை - கொடுமை

404. பேரி கொக்கரை பிறைமுகி சச்சரி தடாரி
பூரி கைச்சதி சல்லரி பொருமுர சுடுக்கை
ஆரு மத்தளி யார்த்தெழ வரம்பைமே னகையோ
டேரு ருப்பசி திலோத்தமை யெதிர்நின்று நடிப்ப

## தெளிவுரை

பேரி, கொக்கரை, பிறைமுகி, சச்சரி, தடாரி, பூரிகை, சதி, சல்லாரி, போர் முரசு, உடுக்கை ஒலிக்கும் மத்தளி ஆகியவை ஆரவாரத்துடன் எழ, அரம்பை, மேனகையோடு ஊர்வசி, திலோத்தமை ஆகியோர் எதிர் நின்று நடனமாடவும்,

## விளக்கம்

பேரி முதல் மத்தளி வரை உள்ளவை இசைக்கருவிகளின் பெயர்கள்
ஆரும் - ஒலிக்கும்
ஆர்த்தெழ - ஒலித்து எழ
ஏர் - அழகிய
உருப்பசி - ஊர்வசி

405. தூப மாலையுந் துகளறு பசும்பொனிற் றகளித்
தீப மாலையுஞ் செறிதிருக் கோவிலுட் புகுந்து
பாப மாலைகள் பாறவிண் ணவர்குழாம் பரவும்
நீப மாலையன் றிருவடி நிலமுறப் பணிந்தான்.

## தெளிவுரை

தூபங்களின் வரிசையும் குற்றமற்ற பசும்பொன்னால் அமைந்த அகல்விளக்குகளின் வரிசையும் செறிந்த திருக் கோவிலினுள் புகுந்து, பாவமாலைகள் ஓடத் தேவர்களின் கூட்டம் வணங்கும் கடப்பமாலையணிந்த முருகக்கடவுளின் திருவடி களைத் தரையில் படிந்து வணங்கினான்.

## விளக்கம்

தூபமாலை - தூபங்களின் வரிசை
துகள் அறு - குற்றம் அற்ற
தகளி - அகல்
பாபமாலைகள் பாற - பாவவரிசைகள் ஓட
பரவும் - வணங்கும்
நீபமாலையன் - கடப்பமாலை யணிந்த முருகக் கடவுள்.

406. விழுந்தி றைஞ்சிய வனந்தனும் வெங்கனன் மெழுகிற்
குழைந்த நெஞ்சமோ டெழுந்துபஃ றோத்திரங் கூறிச்
செழுந்தி ருத்தரு தேவருஞ் சரிதிரு வடியும்
தழைந்த வள்ளிசெந் தாமரை யடிகளும் வணங்கி.

## தெளிவுரை

விழுந்து வணங்கிய ஆதிசேடனும் கொடிய தீயில் நெகிழும் மெழுகைப்போல் குழந்தை உள்ளத்துடன் எழுந்து, பலதுதிகள் கூறி வளமான திருமகள் பெற்ற தெய்வயானையின் திருவடி களையும், திருமகள் பெற்ற தழைத்த வள்ளியின் செந்தாமரை அடிகளையும் வணங்கி.

## விளக்கம்

இறைஞ்சிய - வணங்கிய
அனந்தன் - ஆதிசேடன்
வெங்கனல் - கொடியதீ
மெழுகின் - மெழுகைப்போல்
பஃறோத்திரம் - பலதுதிகள்

407. ஆவி நற்றுணை யாகுமாபத்சகாயனையும்
கோவிலுட்செறி குமாரலிங் கத்தையும் பணிந்து
தாவி லொன்பது வீரர்க டாளையுந் தொழுது
தேவவெண்கரிப் புறத்துவந் திறைஞ்சினன் சேடன்.

## தெளிவுரை

உயிருக்கு நல்ல துணையாகும் ஆபத்சகாய விநாயகனை யும், கோவிலினுள் செறிந்துள்ள குமாரலிங்கத்தையும் வணங்கிக் குற்றம் இல்லாத ஒன்பது வீரர்களையும் - ஆதிசேடன் வணங்கினான்.

விளக்கம்
ஆவி - உயிர்
ஆவச்சகாயன் - ஆபத்துக்கு உதவுபவன்; ஆபத்சகாய விநாயகர்
தாவு இல் - குற்றம் இல்லாத
தேவவெண்கரி - தேவலோகத்து வெள்ளையானையாகிய ஐராவதம்
இறைஞ்சினன் - வணங்கினான்

408. அற்றை நள்ளிருட் போதவ ணமர்ந்துவை கறையில்
உற்றெ ழுந்துபோ யுவணவா கனன்புதுச் சுனைநீர்
முற்ற மேனியிற் றிளைத்திட மூழ்கிநீ றணிந்து
குற்ற நீக்கிடு கண்மணி கூறிடந் தரித்து

## தெளிவுரை

அன்று நள்ளிருளின்போது அவ்விடம் அமர்ந்து விடியற் காலையில் விழித்து எழுந்து, சென்று கருடவாகனனாகிய திருமால் அமைத்த சுனை நீரை உடல் முழுதும் திளைக்கும்படி மூழ்கித் திருநீறு அணிந்து குற்றங்களைப் போக்கும் உருத்திராட்ச மாலையை நூல்கள் கூறும் இடங்களில் அணிந்து,

## விளக்கம்

அவண் - அவ்விடம்
உவணவாகனன் - கருடவாகனனாகிய திருமால்
நீறு - திருநீறு
கூறுஇடம் - நூல்கள் கூறும் இடங்களில்
கண்மணி - உருத்திராட்சம்.

409. சாற்று சந்தியை முடித்துமா யவன்சுனை தனக்கு
மேற்றி சைப்புறத் தொருசுனை விருப்பொடுந் தொட்டுப்
போற்று தன்பெயர் பூண்டவப் புனலின்முப் போதும்
காற்றை யுண்பவன் மூழ்குபு கரணமுள் ளடக்கி

## தெளிவுரை

கூறதற்குரிய சந்தியாவந்தனம் முடித்து, திருமால் சுனைக்கு மேற்குத்திசைப்பக்கத்தில் ஒரு சுனையை விருப்பமுடன் தோண்டிப் போற்றுதற்குரிய தன்பெயர் சூட்டப்பெற்ற அந்நீரில் மூன்று வேளைகளிலும் காற்றை உணவாக உண்பவனாகிய ஆதிசேடன் மூழ்கி, ஐம்பொறிகளை மனத்தால் அடக்கி,

## விளக்கம்

சந்தி - சந்தியாவந்தனம்
மாயவன்சுனை - திருமால் தீர்த்தம்
மேற்றிசை - மேல் திசை, மேற்குத் திசை
தொட்டு - தோண்டி
உள் அடக்கி - தியானித்து
கரணம் - காரணம், ஏது, ஐம்பொறி.

410. கூறு சூரனா தியர்தமைக் குமைத்துவான் காத்தோன்
ஆறெ ழுத்தையுஞ் செயித்தறு முகனையுள்ள டக்கி
ஊறில் கல்லெனத் தறியென வுடலசை யாமல்
தேறு மெய்த்தவஞ் செய்திருந் தனனுயர் சேடன்

## தெளிவுரை

கூறப்பெற்ற சூரபன்மன் முதலியவர்களை அழித்து வானுலகைக் காத்தோன், ஆறு எழுத்துக்களையும் ஒலித்து ஆறுமுகனைத் தியானம் செய்து, துன்பம் இல்லாத கல் என்னும்படியும், தூண் என்னும் படியும் உடல் அசையாமல், கடைத்தேறுவதற்குரிய உயர்ந்த ஆதிசேடன் உண்மையான தவம் செய்து தணிகை மலையில் இருந்தனன்.

## விளக்கம்

குமைத்து - அழித்து
வான் - விண்ணுலகு
உள்ளடக்கி - தியானித்து
ஊறு - துன்பம், இடுக்கண்
தறி - தூண்

411. அருந்த வம்புரி சேடனுக் கருள்செயக் குமரன்
திருந்து விஞ்சையர் சித்தர்விச் சாதர ரியக்கர்
பொருந்து விண்ணவ ரிருடியர் யோகியர் புடையில்
நெருங்க மேனகை யாதியர் நின்றெதிர் நடிப்ப

## தெளிவுரை

அரிய தவம் செய்யும் ஆதிசேடனுக்கு அருள் செய்வதற்குக் குமரன் திருந்திய விஞ்சையர், சித்தர், வித்தியாதரர், இயக்கர் ஆகியோர் பொருந்தும் தேவர்கள், இருடியர் (முனிவர்கள்) யோகியர் பக்கத்தில் நெருங்க, மேனகை முதலியோர் நின்று எதிரில் நடனமாடவும்,

## விளக்கம்

சேடன் - ஆதிசேடன்
விச்சாதரர் - வித்தியாதரர்
இருடியர் - முனிவர்கள்
புடையில் - பக்கத்தில்
ஆதியர் - முதலியவர்கள்
நடிப்ப - நடனமாடவும்

412. மயிலி னேறிமுன் வருதலு மலர்விழி திறந்து
பயிலு மாதவச் சேடனும் பார்த்தெதிர் பணிந்தான்
இயலு மூவிரு வதனமு மீரறு மலைநேர்
புயமு நீடருள் பொழிதரு பன்னிரு விழியும்

## தெளிவுரை

மயிலில் ஏறி முன்னால் வரவும் மலர்போன்ற கண்களைத் திறந்து மாதவம் பழகும் ஆதிசேடனும் கண்டு எதிரில் வணங்கினான். இயங்கும் ஆறுமுகங்களும், பன்னிரண்டு மலைகளுக்கு ஒப்பான தோள்களும், நீண்ட அருள் சொரியும் பன்னிரண்டு கண்களும்,

## விளக்கம்

*மாதவம்பயிலும் - மாதவம் பழகும்*
*வதனம் - முகம்*
*மலை நேர் - மலைகளுக்கு நிகரான*
*புயம் - தோள்*
*நீடருள் பொழிதரும் - நீண்ட அருள் சொரியும்*

413. அகரு கப்புர நரந்தகுங் குமமவிர் புழுகு
புகரி றென்மலைச் சந்தனம் புனைந்தழ கெறிப்ப
நிகர றுந்திருத் துணைவிய ரிருபுற நெருங்கப்
பகரு மெய்யொளி பன்னிரு பருதியைப் பழிப்ப

## தெளிவுரை

அகில், கருப்பூரம், கத்தூரி, குங்குமம், ஒளிரும் புழுகு, குற்றமற்ற தென்மலைச் சந்தனம், அணியப்பெற்று அழகு ஒளி

செய்ய, இணையில்லாத திருத்துணைவியர்கள் இருபுறம் நெருங்கி இருக்க, சொல்லப் பெறும் மெய்யின் ஒளி, பன்னிரண்டு சூரியர் களைப் பழிக்கவும்,

## விளக்கம்

அகரு - அகில்
கப்புரம் - கருப்பூரம்
நரந்தகுங்குமம் - கத்தூரிக் குங்குமம்
அவிர் புழுகு - ஒளி செய்யும் புழுகு.
பகரும் - சொல்லப்பெறும்
பன்னிருபருதி - பன்னிரண்டு சூரியர்கள்
பழித்தல் - வசை கூறுதல்
திருத்துணைவியர் - தெய்வயானையும் வள்ளியும்.

414. கோடி மன்மத ரோருழிக் குலவிய தென்ன
நீடு பேரழ கொடுநவ ரத்தின நிழல் சேர்
பீடு றும்பல பணிகளு மவயவம் பிறங்க
ஆடு கற்பக மாலைதாழ்ந் தசைதரு மார்பும்

## தெளிவுரை

கோடி மன்மதர்கள் ஓரிடத்தில் குலாவியது என்று கூறு மாறு, நீடிய பேரழகுடன் நவரத்தினங்களின் நிழல் சேர்ந்த பெருமையடையும் அணிகலன்களும் முருகனுடைய உடல் உறுப்பு களில் விளங்க ஆடுகின்ற கற்பகமாலை தாழ்ந்து அசையும் மார்பும்,

## விளக்கம்

உழி - இடம்
நீடு - நீடித்த

பீடுறும் - பெருமையடையும்
பணிகள் - அணிகலன்கள்
அவயவம் - உடல் உறுப்புகள்
பிறங்க - விளங்க

415. விலையிலாதபொன் னாடைமேல் விளங்கிய விடையும்
கலையெ லாந்தெரி கட்செவிக் கிறையிரா யிரங்கண்
மலரெ லாங்களி கூர்ந்திடக் கண்டக மகிழ்ந்து
தலையெ லாம்புவி தோய்ந்திடத் தாழ்ந்தெழுந்துரைப்ப

## தெளிவுரை

விலைமதிப்பில்லாத பொன் ஆடைக்கு மேல் விளங்கும் இடையும், கலைகளை எல்லாம் அறிந்த பாம்புகளுக்குத் தலைவராகிய ஆதிசேடனின் ஆயிரம் கண்மலர்கள் எல்லாம் களிப்பு மிகுந்திடக் கண்டு உள்ளம் மகிழ்ந்து, தலைகள் அனைத்தும் தரையில் படும்படி, வணங்கி எழுந்து உரைக்கவும்,

## விளக்கம்

இலாத - இல்லாத
தெரி - அறிந்த
கட்செவிக்கு இறையிர் - பாம்புகளுக்குத் தலைவரின் ஆதிசேடன்
களிகூர்ந்திட - களிப்புமிகுந்திட

*(அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்)*

416. மங்க ளம்பவ புத்திரா மங்க ளந்தவ மித்திரா
மங்க ளஞ்சர சன்மனே மங்களந்திர கன்மனே
மங்க ளஞ்சிகி வாகனா மங்க ளம்புகழ் மோகனா
மங்க ளங்கரு ணாகரா மங்க ளங்குண சாகரா.

## தெளிவுரை

சிவமைந்தனே வணக்கம்! தவநண்பனே வணக்கம்! நாணல்புல்லில் அவதரித்தவனே வணக்கம்! நிலையான தொழிலோனே வணக்கம்! மயில் வாகனனே வணக்கம்! புகழ் அழகனே வணக்கம்! அருளாளா வணக்கம்! குணக்கடலே வணக்கம்!

## விளக்கம்

மங்களம் - சிறப்பு, வாழ்த்து, வணக்கம்
பவ புத்திரா - சிவபெருமான் மகனே,
தவமித்திரா - தவமுடையார்க்கு நண்பனே
சரசன்மனே - நாணல் புல்லில் அவதரித்தவனே
சரம் - நாணற்புல்
திரகன்மனே - ஸ்திரமான தொழிலையுடையவன்
சிகிவாகனா - மயில் வாகனா
மோகனா - அழகனே
கருணாகரா - அருள்தன்மையுடையவனே
குணசாகரா - குணக்கடலே

இப்பாடல் மங்கள வழிபாடாக அமைந்தது. மங்களம், வாழ்த்து, வணக்கம், வத்துநித்தேசம் என மூவகைப்படும்.

417. மங்க ளந்தணி காசலா மங்க ளம்பத்த வச்சலா
மங்க ளஞ்சத்தி யத்தனே மங்க ளஞ்சுத்த நித்தனே
மங்க ளம்புவ னேசனே மங்க ளம்பவ நாசனே
மங்க ளம்வள்ளி நாயகா மங்க ளஞ்சுப மங்களம்

## தெளிவுரை

தணிகாசலனே வணக்கம்! பக்தவத்சலனே வணக்கம்! வேல்கையனே வணக்கம்! தூய நித்தனே வணக்கம்! உலகக்

கடவுளே வணக்கம்! பிறவியை அழிப்பவனே வணக்கம்! வள்ளி நாயகா வணக்கம்! நல் வணக்கம்!

## விளக்கம்

மங்களம் - வணக்கம், வாழ்த்து, சிறப்பு
சத்தி அத்தன் - வேலைத்தரங்கிய திருக்கரத்தையுடையவன்
சுத்தம் - தூய்மை
நித்தன் - என்றும் இருப்பவன்
புவனம் - உலகம்
நாயகன் - தலைவர்
சுபம் - நலம்

418. தார கன்றனை மாய்த்திடுஞ் சண்மு காசுப மங்களம்
கோர சிங்கமு கன்றனைக் கொன்ற வாசுப மங்களம்
சூர பன்மனை யட்டிடுஞ் சுந்த ராசுப மங்களம்
வீர ரொன்பதின் மர்க்கருள் வித்த காசுப மங்களம்

## தெளிவுரை

தாரகனை அழித்த சண்முகா! நல் வணக்கம்! கொடிய சிங்கமுகாசுரனைக் கொன்றவனே! நல் வணக்கம்! சூரபன்மனை அழித்திடும் அழகா! நல் வணக்கம்! வீரர் ஒன்பதின் மர்க்கு அருள் செய்த அறிஞனே! நல் வணக்கம்!

## விளக்கம்

மாய்த்திடும் - கொன்றிட்ட
கோரம் - கொடுமை, அச்சம்
அட்டிடும் - அழித்த
சுந்தரா - அழகா
அருள் வித்தகா - அருளும் அறிஞனே

வித்தகன் - அறிஞன், தூதன், பொருள் கொடுப்போன்
சிங்கமுகன் - சிங்கமுகாசுரன்

419. மங்க ளம்புவி யாக்குவாய் மங்களம்புவி போக்குவாய்
மங்க ளம்பிணி நீக்குவாய் மங்க ளம்மரு டேக்குவாய்
மங்க ளம்மலர்க் கந்தனே மங்க ளம்மறைக் கந்தனே
மங்க ளந்திருக் கந்தனே மங்க ளஞ்செய மங்களம்

## தெளிவுரை

உலகத்தைப் படைப்பவனே! வணக்கம்! உலகை அழிப்பவனே வணக்கம்! நோய் நீக்குபவனே வணக்கம்! குறிஞ்சியாழ்த் திறம் நிறைப்பவனே வணக்கம்! மலர் மணத்தோனே வணக்கம், வேத முடிவில் இருப்பவரே வணக்கம்! திருக்கந்தனே வணக்கம்! வணக்கம்! வெற்றி வணக்கம்!

## விளக்கம்

புவி - உலகம்
போக்குவாய் - அழிப்பாய்
மருள் - குறிஞ்சியாழ்த்திறம்
தேக்குவாய் - நிறைப்பாய்
செயமங்களம் - வெற்றி வணக்கம்
கந்தம் - மலர்களின் மணம் பொருந்தியவன்
மறைக்கு அந்தன் - வேத முடிவில் இருப்பவன்.

420. வேல னுக்குச் செயஞ் செயம் விசாகனுக்குச் செய ஞ்செயம்
கால னுக்கொரு காலனாங் கருத்த னுக்குச் செயஞ்செயம்
பால னுக்குச் செயஞ்செயம் பராப ரற்குச் செயஞ் செயம்
சீலனுக்குச் செயஞ் செயஞ் சேந்த னுக்குச் செயஞ்செயம்

## தெளிவுரை.

வேலனுக்க வெற்றி! வெற்றி!! முருகனுக்கு வெற்றி! வெற்றி!! காலனுக்கு ஒரு காலனாம் படைப்பவனுக்கு வெற்றி! வெற்றி!! சிறுவனுக்கு வெற்றி! வெற்றி! கடவுளுக்கு வெற்றி! வெற்றி!! நல் ஒழுக்கமுடையோனுக்கு வெற்றி! வெற்றி!! சேந்தனுக்கு வெற்றி! வெற்றி!!

## விளக்கம்

செயம் - வெற்றி
விசாகன் - முருகன்
கருத்தன் - படைப்பவன்
பாலன் - சிறுவன்
பராபரன் - கடவுள்
சீலன் - நல் ஒழுக்கமுடையவன்
சேந்தன் - குமரன்

421. போற்றி போற்றி சடானனா போற்றி போற்றி புராதனா
போற்றி போற்றி வரோதயா போற்றி போற்றி நிராமயா
போற்றி போற்றி சிலாதலா போற்றி போற்றி நிராகுலா
போற்றி பார்வதி நந்தனா போற்றி காங்கெய போற்றியே.

## தெளிவுரை

முருகா போற்றி! போற்றி!! பழமையானவனே போற்றி! போற்றி!! ஈகையுடையோனே போற்றி! போற்றி!! நோயற்றவனே போற்றி! போற்றி!! குறிஞ்சிநிலத்தலைவனே போற்றி! போற்றி!! மகிழ்நனே போற்றி! பார்வதி மகனே போற்றி! குமரனே போற்றி!

## விளக்கம்

புராதனா - பழமையானவனே!
வரோதயா - ஈகையுடையவனே
நிராமயா - நோயில்லாதவனே
சிலாதலா - குறிஞ்சி நிலத்தலைவனே
நிராகுலா - மகிழ்ச்சியானவனே
நந்தனா - பிள்ளையே

422. என்றி ராயிர நாவினா லேத்து சேட னிருந்துதி
நன்று கேட்டருள் சேவலா னயந்து கட்கடை நல்கிநீ
இன்று மாதவஞ் செய்தலால் யாம கிழ்ந்தன முன்கருத்
தொன்று மார்வ முரைத்தியே லுதவு துங்கடி தென்றனன்

## தெளிவுரை

என்று இரண்டாயிரம் நாவுகளால் வணங்கும் ஆதி சேடனுடைய துதி நன்கு கேட்டருளிய சேவற்கொடியையுடைய முருகன் இன்புற்ற கடைக்கண் பார்வை வழங்கி, ''நீ இன்று பெரிய தவம் செயததனால் யாம் மகிழ்ந்தோம்; உன் மனத்தில் பொருந்திய ஆசையை அறிவித்தால் விரைந்து உதவுவோம்'' என்றான்.

## விளக்கம்

ஏத்தும் - துதிக்கும், வணங்கும்
சேடன் - ஆதிசேடன்
சேவலான் - சேவற் கொடியையுடைய முருகன்
கண்கடை நல்கி - கடைக்கண்பார்வை அளித்து, அருள் செய்து
கருத்து ஒன்றும் - மனத்திற் பொருந்திய

423. முருகன் றண்ணளி யோடிது மொழியப் பாம்பிறை
நெஞ்சகம்
உருகி யஞ்சலி யத்தனா யுரைப்ப னென்னுயிர் நாயகா
பெருகு மென்னுடற் சற்சரப் பீடை யான வியாதியால்
அருகி யென்வலி குன்றியே யவனி தாங்கவு மாற்றலன்

## தெளிவுரை

முருகன் அருள் தன்மையுடன் இதனைச் சொல்லப் பாம்பு களின் கடவுளாகிய ஆதிசேடன் நெஞ்சம் நெகிழ்ந்து குவித்தகை களை உடையவனாகி உரைக்கலானான். ''என் உயிர்த் தலைவா! பெருகுகின்ற என் உடலின் சரசரப்பாகிய துன்பம் ஆகிய நோயினால், மெலிந்து என் வலிமை குறைந்து உலகினைத் தாங்கவும் இயலாத வன் ஆனேன்.

## விளக்கம்

தண்ணளி - அருள்தன்மை
மொழிய - சொல்ல
பாம்பு இறை - பாம்புகளின் கடவுள், ஆதிசேடன்
அஞ்சலியத்தனாய் - குவித்தகையை உடையவனாகி
பீடை - துன்பம்
அவனிதாங்க - உலகைச் சுமக்க
ஆற்றலன் - இயலாதவன் ஆனேன்.
அருகி - மெலிந்து

424. முன்பு போல்வலி பெற்றுடன் மூடு சற்சரை பீடித்த
துன்பொ ழிந்துவ சுந்தரை சுமக்கு நல்வர மீதியென்
றன்பி னோடுரை யாடிய வாதி சேடனு டம்பெலாம்
மின்கு லாவுதிருக்கையான் மென்மெ லத்தட வுற்றனன்

## தெளிவுரை

''முன்போல் வலிமை பெற்று உடலை மறைக்கும் சரசரப்பு அடைந்த துன்பம் நீங்கி உலகைச் சுமக்கும் நல்ல வரத்தை அளிப் பாயாக!'' என்று அன்புடன் உரையாடிய ஆதிசேடன் உடம்பெல் லாம் மின்னல் ஒளி வீசும் அழகிய கையையுடைய முருகன் மெல்ல மெல்லத் தடவலாயினன்.

## விளக்கம்

வலி - வலிமை
வசுந்தரை - பூமியை, உலகை
ஈதி - தந்தருள்க
மின்குலாவும் - மின்னல் ஒளிவீசும்
தடவுற்றனன் - தடவினான்
மூடும் - போர்த்தும், மறைக்கும்

425. அக்க ணத்தில்வி யாதிபோ யாதி சேடன் விசேடமாம்
மெய்க்கு ணத்தின னாகியே வளங்கி வன்மை யடைந்தனன்
தொக்கு ரித்திடு பன்னகந் துன்னு மின்ப மடைந்தென
நக்க னுக்கொரு தேசிக னயந்த ளித்தவி பூதியால்

## தெளிவுரை

அந்தக்கண நேரத்தில் நோய் நீங்கி ஆதிசேடன் மேன்மை யாகும் உடல் குணம் அடைந்தவனாகி, விளங்கி, வலிமையடைந் தான்; தோலை உரிக்கும் பாம்பு அடையும் இன்பம் அடைந்து, பரமசிவனுக்கு மகனாகிய குரு விரும்பியளித்த திருநீற்றினால்,

## விளக்கம்

கணம் - காலநுட்பம், நான்கு நிமிட நேரம்
அக்கணம் - அந்தக்கண நேரத்தில்

வியாதி - நோய்
விசேடம் - மேன்மை
மெய்க்குணத்தினன் ஆகி - உடலில் சரசரப்பு நீங்கிக் குணமடைந்தவனாகி
தொக்கு உரித்திடு - தோலை உரிக்கின்ற
பன்னகம் - பாம்பு
துன்னும் - நெருங்கும், அடையும்
நக்கன் - பரமசிவன்
தேசிகன் - குருவாகிய முருகன்
நயந்து - விரும்பி

426. பூதி பெற்றிடு சேடனும் போந்து பூமுடி தாங்கினான்
ஓது சித்தர் முனிக்குழா மும்பர் போற்ற விசாகனார்
சோதி பெற்றிடு மாலயந் துன்னி னாரனந் தன்சுனை
ஈது கண்டவர் மூழ்கினோ ரிகல்வி யாதி தணப்பரே.

## தெளிவுரை

திருநீறுபெற்ற ஆதிசேடனும் சென்று உலகினைத் தலை முடியால் சுமந்தான்; சொல்லப்பெறும் சித்தர்கள், முனிவர் கூட்டத்தினர், தேவர்கள் ஆகியோர் போற்ற முருகர், ஒளிபெற்ற திருமால், பிரமன் ஆகியோர் ஆதிசேடன் சுனையை நெருங்கினர். இதனைக் கண்டவர்களும் இதில் மூழ்கினவர்களும் பகையும் நோயும் நீங்கப் பெறுவர்.

## விளக்கம்

பூதி - திருநீறு
சேடன் - ஆதிசேடன்
போந்து - சென்று
பூ - பூமி, உலகம்

முடிதாங்கினான் - தலைமுடியால் சுமந்தான்
குழாம் - கூட்டம்
உம்பர் - தேவர்கள்
விசாகனார் - முருகர்
சோதி - ஒளி
மால் - திருமால்
அயன் - பிரமன்
அனந்தன் சுனை - ஆதிசேடன் தீர்த்தம்,
ஈது - இதனை
இகல் - பகை
வியாதி - நோய்
தணப்பர் - நீங்குவர்

'தணிகாசல புராணம் - தெளிவுரை' முற்றிற்று.

